# சங்ககாலத் தெய்வங்களும் வழிபாட்டு முறைகளும்

முனைவர் பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ச.கௌ. கவிதா**

பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர் (External)

மேற்பார்வையாளர்

**முனைவர் இரா. சீனிவாசன்**

இணைப்பேராசிரியர்





தமிழ்த்துறை
மாநிலக்கல்லூரி
சென்னை - 600 005


ஏப்ரல் 2012

முனைவர் **இரா. சீனிவாசன்**
இணைப்பேராசிரியர்
மாநிலக்கல்லூரி
சென்னை - 600 005

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**'சங்ககாலத் தெய்வங்களும் வழிபாட்டு முறைகளும்'** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு மாநிலக்கல்லூரியின் தமிழ்த்துறையில் முனைவர் பட்டப்பேற்றிற்காக திருமதி **ச.கௌ. கவிதா** அவர்கள் உருவாக்கியதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன், வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கோ, பட்டயத்திற்கோ வழங்கப்பெறவில்லை என்றும் இது அவர்தம் சொந்த முயற்சியில் உருவானது என்றும் சான்றளிக்கிறேன்.

சென்னை: 600 005
நாள்: 16.4.2012

(இரா. சீனிவாசன்)
**மேற்பார்வையாளர்**

இரா. சீனிவாசன்
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி
சென்னை–600 005

**ச.கௌ. கவிதா**
பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளர்
மாநிலக்கல்லூரி
சென்னை - 600 005

## ஆய்வாளர் உறுதிமொழி

**'சங்ககாலத் தெய்வங்களும் வழிபாட்டு முறைகளும்'** என்னும் தலைப்பில் மாநிலக்கல்லூரியின் தமிழ்த் துறையில் முனைவர் பட்டப்பேற்றிற்காக எழுதப்பட்ட இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை எனவும் இத்தலைப்பில் வேறு எவரும் ஆய்வு நிகழ்த்தவில்லை எனவும் உறுதியளிக்கின்றேன்.

ச.கௌ. கவிதா
(பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளர்)

**சென்னை: 600 005**
**நாள்:** 16.4.2012

# நன்றியுரை

பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வினை சென்னையில் மேற்கொள்ள அனுமதி வழங்கிய **திருவள்ளுவர் பல்கலைக் கழகத்திற்கும்,** புறஆய்வாளராக என்னை ஏற்றுக்கொண்ட **சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும்** என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கல்லூரியில் நான் ஆய்வினை மேற்கொள்ள, எனக்கு இடமளித்த கல்லூரி முதல்வர் திரு **பி.எஸ். இரகுராமன்** அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர். முனைவர் **ப. மகாலிங்கம்** அவர்களுக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளராக எனக்கு இடமளித்து, உரிய நேரத்தில் ஆலோசனைகளையும் அரிய நூல்களையும் தந்து, என் ஆய்வு சிறக்க உதவிய என்னுடைய மேற்பார்வையார் முனைவர் **இரா. சீனிவாசன்** அவர்களுக்கு என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப் பணியைத் தொடங்குவதற்கு வாய்ப்பினை ஏற்படுத்தி, பரிந்துரை செய்த, சென்னைப் பல்கலைக் கழக தமிழ்த்துறைத் தலைவர், பேரா. **வீ. அரசு** அவர்களுக்கு என் உள்ளார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வினை நான் மேற்கொள்வதற்கு முழு மூச்சாய் என்னை இயக்கி வந்த என் பெற்றோர் திரு **ச. கௌரிநாதன்,** திருமதி **மா. சிவகாமி** அவர்களுக்கு முதலில் என் நன்றியைக் காணிக்கையாக்குகிறேன். எனக்கும் என் குழந்தைக்கும் இன்னொரு தாய், தந்தையாய் இருந்து, என் ஆய்வுப்பணி முடிய உறுதுணையாய் இருந்துவரும் என் மூத்த சகோதரி திருமதி **ச.கௌ. வெற்றிச்செல்வி,** மாமா திரு **ச. அன்பழகன்** அவர்களுக்கும், என் கணவர் திரு **மணி** மற்றும் என் சகோதரிகள் திருமதி **விஜியகுமாரி,** செல்வி **சங்கீதப்பிரியா,**

குழந்தைகள் **தென்னரசு, பவித்ராஸ்ரீ** அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

கல்லூரியின் பணிக்குக் குந்தகம் விளையாதவாறு ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய எம் கல்லூரியின் முன்னாள் முதல்வர்கள் திருமதி **புஷ்பவல்லி,** திருமதி **இராணி** அவர்களுக்கும், திருமதி **இரா. பத்மினி** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். முன்னாள் பொறுப்பு முதல்வர் முனைவர் திருமதி **விஜயா** அவர்களுக்கும், இந்நாள் பொறுப்பு முதல்வர் முனைவர் திருமதி **ஹம்ரோஷியா பேகம்** அவர்களுக்கும் என் கனிவான நன்றி.

முனைவர்பட்ட ஆய்விற்கு விண்ணப்பிக்கவும் மேற்கொள்ளவும் உந்து சக்தியாக விளங்கிய எம் தமிழ்த் துறையின் முன்னாள் தலைவர் முனைவர் திருமதி **பிரேமா இராஜலீலன்** அவர்களுக்கும் துறைப் பணிகளோடு என் ஆய்வுப் பணியையும் காண்காணித்து, அக்கறையோடும் உரிமையோடும் என் ஆய்வு சிறக்க உதவி புரிந்த இந்நாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் திருமதி **வி. அநுராதா** அவர்களுக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக்குத் தேவையான சில நூல்களையும் ஆலோசனைகளையும் உத்வேகத்தையும் வழங்கிய முனைவர் **பா. தாயாரம்மாள்** அவர்களுக்கும், முனைவர் **ஜா. வளர்மதி, ச. பிரேமகுமாரி** உள்ளிட்ட எம் துறையின் அனைத்து ஆசிரியர்களுக்கும் பார்க்கும்போதெல்லாம் என்னை ஊக்கப்படுத்திய மாநிலக் கல்லூரியின் இணைப் பேராசிரியர்கள் முனைவர் **வீ. அசோகன்,** முனைவர் திருமதி **ஜே.ஆர். லெட்சுமி** அவர்களுக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

அரிய நூல்களைத் தந்தும் நகலெடுக்கவும் உதவிய அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக் கல்லூரி நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், செம்மொழித் தமிழாய்வு நிறுவனம், மறைமலையடிகள் நூல்நிலையம், கன்னிமாரா நூலகம், வேலூர் மாவட்ட கிளை நூலகம், (அரக்கோணம், அம்மூர், வாலாஜாபேட்டை) காஞ்சிபுரம் மாவட்ட மைய நூலகம், கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், ரோஜாமுத்தையா நூலகம் ஆகியவற்றுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டை அச்சிட்டுக் கொடுத்த முனைவர்பட்ட ஆய்வாளர் செல்வி **இந்திராகாந்திக்கும்,** ஆய்வுக்குரிய நூல்களை நகலெடுத்துத் தந்து உதவிய மாணவர்கள் **அ. மகாலட்சுமி, ந. தேவி, சலீனா, சகுந்தலா, அ. சீனிவாசன், அ. மாலதி, ஏழுமலை, மோ. சிவசங்கரி** ஆகியோர்க்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினைச் சிறந்த முறையில் வடிவமைத்து ஒளியச்சு செய்து உதவிய **க. நவேந்திர ராஜ்குமார்** அவர்களுக்கு என் கனிவான நன்றி.

**ச.கௌ. கவிதா,**

ஆய்வாளர்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகம். | அகநானூறு |
| ஐங். | ஐங்குறுநூறு |
| கலி. | கலித்தொகை |
| குறுந். | குறுந்தொகை |
| சிலம்பு. | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | சிறுபாணாற்றுப்படை |
| திருமுருகு. | திருமுருகாற்றுப்படை |
| தொல்.சொல். | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல்.பொருள். | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| பட்டி. | பட்டினப்பாலை |
| பதிற்று. | பதிற்றுப்பத்து |
| பரி. | பரிபாடல் |
| புறம். | புறநானூறு |
| பெரும்பாண். | பெரும்பாணாற்றுப்படை |
| நற். | நற்றிணை |
| மதுரை. | மதுரைக்காஞ்சி |

# பொருளடக்கம்

சங்ககால மக்கள் இனக்குழுச் சமுதாயமாக வாழ்ந்தனர். இயற்கை வழிபாட்டு நெறியைக் கடைபிடித்து வாழ்ந்துவந்தனர். வீரத்தைப் போற்றும் நடுகல் வைத்தும் வழிபட்டனர். தாய்வழிச் சமூகத்தின் எச்சமாக பெண்தெய்வ வழிபாடும் முக்கிய இடம் பெற்றிருந்தது.

பல்லவர் காலத்தில் அரசு என்ற நிறுவனம் வளர்ந்த நிலையில் இருந்தது. வணிகம் மிகச் சிறந்த தொழிலாக வளர்ச்சி பெற்றிருந்தது. ஆதலால் சமூக அமைப்பு நன்கு வளர்ச்சியடைந்த நிலையிலிருந்தது. இச்சமூகத்தில் சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய நான்கு பெருஞ்சமயங்கள் சிறந்து விளங்கின. சமணமும் பௌத்தமும் பிற்காலத்தில் செல்வாக்கை இழந்தன. சைவமும் வைணமும் போட்டியிட்டு வளர்ந்தன. இருபதாம் நூற்றாண்டு வரை, சமயங்கள் சார்ந்தே தமிழ் இலக்கியங்களும் வளர்ந்தன.

இந்நிலையில் பெருஞ்சமயங்கள் செல்வாக்குச் செலுத்துவதற்கு முந்தைய காலமான சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்களின் இறைநம்பிக்கையும் வழிபாடும் பற்றி ஆராயவேண்டியது அவசியமாகிறது.

## ஆய்வின் நோக்கம்

சங்ககாலச் சமுதாயத்தை இனக்குழுச் சமுதாயமாக ஆய்வாளர்கள் வரையறை செய்கின்றனர். மக்கள் இயற்கை அடிப்படையிலான வாழ்க்கை முறையைக் கொண்டிருந்தது போலவே, இயற்கை அடிப்படையிலான வழிபாட்டு முறையையும் கொண்டிருந்தனர். தெய்வ வழிபாடு எனும்போது சடங்குகள் தவிர்க்க முடியாதவையாகவே உள்ளன. சங்க காலத்திலிருந்த தெய்வ வழிபாட்டின் அடிப்படையில் அக்காலத் தெய்வங்களையும், வழிபாட்டு முறைகளையும் ஆராய்வதே இந்த ஆய்வின் நோக்கம் ஆகும்.

## ஆய்வுப் பரப்பு

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய சங்க இலக்கியங்கள் மட்டுமே ஆய்வுப்பரப்பாக எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இவற்றுடன் தொல்காப்பியமும் ஆய்வுக்கு உரிய பொருளாக அமைந்துள்ளது.

## கருதுகோள்

பிற்காலத்தில் வளர்ச்சிபெற்ற நான்கு பெருஞ்சமயங்களும் வெளியிலிருந்து தமிழகத்திற்கு வந்தவை என்ற நிலையில், இயற்கை வழிபாடு, திணைநிலைத் தெய்வங்கள், நடுகல் வழிபாடு, தாய்த்தெய்வ வழிபாடு ஆகிய இவையே இனக்குழுச் சமூகமான சங்ககாலச் சமூகத்தின் வழிபாட்டுத் தெய்வங்கள் என்பதையும், இவை தவிர வழிபடு தெய்வங்களாக முக்கண்ணன், பலராமன், காமன், பிரமன், கூற்றுவன், காலன், சந்திரன், அருகதேவன், சாத்தன் போன்ற தெய்வங்களும் விளங்கின என்பதையும் விளக்குவதே இந்த ஆய்வின் கருதுகோள் ஆகும்.

## ஆய்வுத் தரவுகள்

### முதன்மைத் தரவுகள்

இந்த ஆய்வுக்கு எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் தொல்காப்பியமும் முதன்மைத் தரவுகளாக கொள்ளப்படுகின்றன.

### துணைத் தரவுகள்

இவை தொடர்பான ஆய்வு நூல்கள், இதழ்களில் வெளியான செய்திகள், கட்டுரைகள், கல்வெட்டுச் செய்திகள், தொல்லியல் துறை ஆய்வுகள் முதலியவை துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

சங்ககாலத் தெய்வங்களும் வழிபாட்டு முறைகளும் என்ற இவ்வாய்வு வரலாற்று முறை ஆய்வு மற்றும் விளக்கமுறை ஆய்வு ஆகிய அணுகுமுறைகளில் மேற்கொள்ளப்படுகின்றது.

## ஆய்வேட்டின் அமைப்பு

முன்னுரை, முடிவுரை நீங்கலாக இவ்வாய்வேடு ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டு உள்ளது.

இயல் ஒன்று — இயற்கை வழிபாடு

இயல் இரண்டு — திணைநிலைத் தெய்வங்கள்

இயல் மூன்று வழிபடு தெய்வங்கள்

இயல் நான்கு பெண் தெய்வ வழிபாடு

இயல் ஐந்து நடுகல் வழிபாடு

முன்னுரையில் ஆய்வு அறிமுகம், ஆய்வின் நோக்கம், ஆய்வு எல்லை, கருதுகோள், ஆய்வுத் தரவுகள், ஆய்வேட்டின் அமைப்பு ஆகியவை விளக்கப்படுகின்றன.

**'இயற்கை வழிபாடு'** என்ற முதல் இயலில், சங்ககால மக்களின் இயற்கையோடு இயைந்த வாழ்வு, இயற்கையைத் தெய்வமாக வழிபடக் காரணம், ஐம்பூதங்களாகிய நிலம், நீர், காற்று, ஆகாயம், தீ போன்றவற்றை வழிபட்ட முறைகள், திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது போன்ற கோள்களை வழிபட்ட முறைகள், நாள்மீன்களாகிய ஓணம், ஆதிரை, அறுமீன், வடமீன் போன்றவற்றை வழிபட்ட முறைகள், மரங்களைத் தெய்வமாகவும் தெய்வங்கள் உறையுமிடங்களாகவும் கருதி, பழந்தமிழர் மேற்கொண்ட சடங்குகள், மலர்களிலும் மலைகளிலும் தெய்வங்கள் உறைவதாகக் கருதி, அவற்றைத் தெய்வங்களாகக் கருதி வழிபட்ட முறைகள் போன்றவற்றோடு, உயிரினங்களாகிய பல்லி, காக்கை, எருமைக்கொம்பு, சுறாக்கொம்பு முதலானவற்றையும் நம்பிக்கையோடு எங்ஙனம் வழிபட்டனர் என்பதையும் இவ்வியல் ஆராய்கிறது. இயற்கை வழிபாடாவது, 1. ஐம்பூத வழிபாடு, 2. கோள் வழிபாடு, 3. நாள்மீன் வழிபாடு, 4. மர வழிபாடு, 5. மலர் வழிபாடு, 6. மலை வழிபாடு, 7. உயிரின வழிபாடு என்ற தலைப்புகளின்கீழ் ஆராயப்படுகின்றது.

இரண்டாவது இயலான **'திணைநிலைத் தெய்வங்கள்'** என்ற இயலில், சங்ககால மக்களின் திணைநிலை வாழ்வு, அதன் அடிப்படையில் எழுந்த திணைநிலைத் தெய்வங்களான மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகிய தெய்வங்களைத் தம் வாழ்வின் போக்கோடு வழிபட்ட முறைகள், பிற்காலத்தில் வளர்ந்த பெருஞ்சமயங்களான சைவம், வைணவம் ஆகியவற்றுக்குத் தோற்றுவாயாக அவை தோன்றிய பாங்கு, திணைநிலைத் தெய்வங்களுக்குக் கற்பிக்கப்பட்ட வடிவங்கள், தனித்தனியாக வணங்கப்பட்ட தெய்வங்களுக்கு, குடும்ப உறவுகளை உருவாக்கி இணைத்த சூழல், அக்காலத்தில் இருந்த

கோயில்கள், இல்லங்களிலும் கோயில்களிலும் வழிபாடு செய்ததன் நோக்கங்கள், வழிபட்ட முறைகள், சங்ககாலத்தில் இத்தெய்வங்களுக்கென்று கொண்டாடப்பட்ட திருவிழாக்கள், திணைநிலைத் தெய்வங்களைப் பெருந்தெய்வங்களாக்கும் முயற்சியாக, உருவாக்கப்பட்ட தொன்மங்கள் முதலியவை குறித்து இவ்வியலில் ஆராயப்படுகின்றது.

மூன்றாவது இயலாகிய **'வழிபடு தெய்வங்கள்'** என்ற இயலில், சங்க காலத்தில் இருந்த திணைநிலைத் தெய்வங்கள் தவிர முக்கண்ணன், நான்முகன், காமன், பலராமன், கூற்றுவன், காலன், அருகதேவன், சாத்தன் முதலிய தெய்வங்களும் வழிபடப்பட்டுள்ளன என்பதும், அத்தெய்வங்களுக்கும் வடிவங்கள், குடும்ப உறவுகள் உருவாக்கப்பட்டு வணங்கப்பட்டு உள்ளன என்பதும் அத்தெய்வங்களுக்கும் திணைநிலைத் தெய்வங்கள் போன்றே கோயில்கள் இருந்துள்ளன என்பதும் அவற்றில் செய்யப்பட்ட வழிபாடுகள், திருவிழாக்கள், அத்தெய்வங்கள் குறித்த தொன்மங்கள் போன்றவையும் ஆராயப்படுகின்றது.

நான்காவது இயலாகிய **'பெண்தெய்வ வழிபாடு'** என்ற இயலில், சங்க காலத்தில் வணங்கப்பட்ட ஆண் தெய்வங்களுக்கு இணையாக பெண் தெய்வங்கள் வணங்கப்பட்ட நிலை, போர்த் தெய்வமாக, பெண் தெய்வமே வணங்கப்பட்டதால் பெண்ணுக்கும் பெண் தெய்வங்களுக்கும் வழங்கப்பட்ட முக்கியத்துவம், போர்த் தெய்வமும், தாய்த் தெய்வமாகிய கொற்றவை வழிபாடு மட்டுமன்றி அதனோடு தொடர்புடைய சூரர மகளிர், பேய்கள், விந்தை, அயிரை, கானமர் செல்வி முதலிய தெய்வங்கள் குறித்த செய்திகளும் வளமைத் தெய்வங்களாக வணங்கப்பட்ட முலைத்தெய்வம், பாவைத்தெய்வம், கொல்லிப்பாவை, வள்ளி, கடல்கெழு செல்வி, காமக்கண்ணி, திருமாவுண்ணி, முதலிய தெய்வங்கள் குறித்த செய்திகளும் இவ்வியலில் ஆராய்ந்து விளக்கப்படுகின்றன. அருந்ததி, நிலமகள், திருமகள், தெய்வானை போன்ற தெய்வங்கள் வணங்கப்பட்ட முறைகள், பெண்வழிச் சமூகம் ஆண்வழிச் சமூகமாக மாற்றம் பெற்ற பிறகு, பெண் தெய்வங்களை ஆண் தெய்வங்களோடு இணைக்கும் தொன்மங்களை உருவாக்குதல், திருவிழாக்கள் நடத்துதல் போன்றவையும் இவ்வியலில் ஆராயப்படுகின்றது.

ஐந்தாவது இயலாகிய **'நடுகல் வழிபாடு'** என்ற இயலில், சங்கத் தமிழர்களின் வீரமரபின் பெருமகளைப் பறைசாற்றும் களமாக, நடுகல் வழிபாடு திகழ்ந்ததையும் நடுகல் வழிபாட்டிற்கான காரணங்கள், தொல்காப்பியம் சுட்டும் நடுகல் மரபுகள், நடுகற்களாவதற்கு உரியோர், சங்க இலக்கியத்தில் நடுகற்கள், வழிபாட்டு முறைகள், நடுகல் குறித்து ஆகமங்கள் தரும் செய்திகள், நடுகல் எழுத்துகள், நடுகல் வழிபாட்டில் பெண் விலக்கிற்குக் காரணங்கள், நடுகற்களின் இன்றைய நிலை, கோயில் என்ற நிறுவனம் உருவாவதற்கு நடுகற்கள் முன்னோடியாக திகழ்தல், குலதெய்வம், வளமைத் தெய்வம் என்ற நிலைகளில் உலக நாடுகளில் நடுகற்களின் வழிபடப்படல், அமைப்பு, தென்னிந்தியாவில் உள்ள நடுகற்களின் அமைப்பு முதலியவை இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

சுருங்கச் சொன்னால், இவ்வாய்வு மூன்று நிலைகளில் ஆராயப்படுகின்றது.

1. இயற்கையை இறையாகக் கருதி வழிபட்ட நிலை.
2. இயற்கைச் சூழலை ஒட்டி எழுந்த தெய்வங்களை வழிபட்ட நிலை.
3. வீரத்தைப் போற்றும் மரபில் போரில் பட்ட வீரர்களை வழிபட்ட நிலை.

முடிவுரை என்ற பகுதியில் ஐந்து இயல்களில் பெறப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

முடிவுரையைத் தொடர்ந்து, துணை நூற்பட்டியல் இடம்பெறுகின்றது. இதில் ஆய்வுக்குத் துணை செய்த முதன்மை நூல்கள், துணைமை நூல்கள் அகர வரிசையில் கொடுக்கப்பட்டு உள்ளன.

பின்னிணைப்பு என்ற பகுதியில் ஆய்வு தொடர்பாக இதழ்களில் வெளிவந்த செய்திகள், படங்கள் முதலானவை இடம் பெறுகின்றன.

சங்ககாலச் சமுதாயம் இனக் குழுச் சமுதாயமாக இருந்துள்ளது. இதனை சங்க இலக்கியங்களையும் தொல்காப்பியம் குறிப்பிடும் நிலப்பாகுபாடுகளையும் காணும்போது அறியமுடிகிறது. சங்கத் தமிழரின் வாழ்வியலை நோக்கும்போது நிலவியல் கூறுகளுக்கு ஏற்றாற்போல் தம் வாழ்வை அமைத்துக்கொண்டனர் என்பது உறுதியாகிறது. காடுகளிலும் மலைகளிலும் வயல் பகுதிகளிலும் கடல் சார்ந்த பகுதிகளிலும், வறண்ட பகுதிகளிலும் வாழ்ந்த மக்கள் அவற்றின் சூழலுக்கேற்றவாறு வாழ்ந்துள்ளனர். இத்தனை இயற்கைக் கூறுகளும் தமிழகத்தில் அமைந்திருப்பதும் வியப்புக்குரியது.

கூட்டுவாழ்க்கை, கூட்டு உழைப்பு, கூட்டாக உண்ணுதல், போன்றவை இனக்குழுச் சமுதாயத்தின் சிறப்புக் கூறுகளாகும். தமிழர்கள் குழு வாழ்வை மேற்கொண்டனர் என்பது, திணைப்பாகுபாடுகளைக் காணும்போது உறுதியாகிறது. உலகின் வேறு எந்த மொழியிலும் இல்லாத மரபு, சங்க இலக்கியங்களில் காணப்படும் திணைக் கோட்பாட்டு மரபு ஆகும். வாழ்வாதாரமாக இருந்த இருப்பிடங்களுக்குத் தனித்தனியே பெயரிட்டு, தங்களை அடையாளப்படுத்திக் கொண்ட இயல்பு உணரத்தக்கது.

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும் (தொல்.பொருள்.5)

என்ற தொல்காப்பிய நூற்பா அவர் வாழ்ந்த நிலங்களுக்கான பெயர்களையும் பழந்தமிழர் வழிபட்ட திணைநிலைத் தெய்வங்களையும் பறைசாற்றுகின்றன. நிலங்களுக்கு வைத்துக் கொண்ட பெயர்கள் இயற்கையின் பெயர்களாக அமைக்கப்பட்டிருப்பது கருதத்தக்கது.

ஐந்து வகையான நிலப்பாகுபாடுகளில் வாழ்ந்த மக்கள் தம் வாழ்வை அகமென்றும் புறமென்றும் வகுத்துக் கொண்டதோடு, அவற்றுக்கான மரபுகளையும் தனித்தனியே பின்பற்றியுள்ளனர்.

மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர் (தொல்.பொருள்.57)

என்பது அகத்திணைகளில் பின்பற்றப்பட்ட சீரிய மரபினைக் காட்டுகிறது. மாறாக, அந்தந்த நிலமக்களின் திணைநிலைப் பெயர்களை மட்டும் சுட்டிக் கூறுவது வழக்கில் இருந்துள்ளது. ஆனால் புறவாழ்வைப் பார்க்கும்போது,

மக்கள், மன்னர், பாடியோர், பாடப்பட்டோர், ஆட்சிக்குட்பட்ட பகுதிகள், தலைநகரங்கள், இனக்குழுக்கள் போன்றவற்றின் பெயர்கள், வெளிப்படையாக சுட்டப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

காடுகளில் வாழ்ந்த மக்கள், ஆயர், ஆய்ச்சியர், இடையர், இடைச்சியர் என்றும் மலையில் வாழ்ந்த மக்கள் குறவர், குறத்தியர், குன்றவர், இறவுளர் என்றும் வயல்வெளிகளில் வாழ்ந்த மக்கள் உழவர், உழத்தியர், நுளையர், நுளைச்சியர் என்றும் கடல்சார் பகுதிகளில் வாழ்ந்த மக்கள் பரதவர், பரத்தியர், சேர்ப்பன், துறைவன் என்றும் வறண்ட பகுதிகளில் வாழ்ந்த மக்கள் எயினர், எயிற்றியர் என்றும் வழங்கப்பட்டுள்ளனர்.

இம்மக்களின் வாழ்வு குழு வாழ்வாகவே இருந்துள்ளது. வேட்டையாடுதல், உணவு சேகரிப்பு, தொடங்கி, வழிபாடு, விருந்தோம்பல் போன்றவையும் குழுவாகவே நிகழ்த்தியுள்ளனர்.

சங்ககாலத்தில் 'குடி' என்னும் சொல்வழக்கு குடியிருப்பு, இனக்குழு அல்லது சாதி என்ற பொருண்மைகளில் ஆளப்பட்டுள்ளது.

துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று
இந்நான் கல்லது குடியுமில்லை (புறம்.333:7–8)

என்ற புறநானூற்றுப் பாடல் 'குடி' என்பதற்கு மேற்கண்ட நான்கு குடிகளையே குறிப்பிடுகின்றது. இவைத் தவிர வேறு குடிகள் இல்லை என்பதை வலியுறுத்துகின்றது. காரணம், இவர்களின் வாழ்க்கை குழு வாழ்க்கையாக இருந்தது.

கலைஞர்களான இவர்கள் தம் பிழைப்பிற்காக வேண்டி, அரசர்களை நாடிச் செல்லும்போது குழுவாகவே சென்றனர். குழுவாகவே செயல்பட்டனர். கூட்டு வாழ்க்கையின் எதிரொலியாகவே ஆற்றுப்படை என்ற இலக்கிய வகை தோன்றியது. மற்றவர் துன்பத்தையும் போக்கவேண்டும் என்ற முனைப்பின் வெளிப்பாடாகவும் இது அமைந்துள்ளது. இக்கலைஞர்களும் நான்கு குடிகளும் புலையன் என்று பொதுவாக வழங்கப்பட்டுள்ளதையும் இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது. இவர்களைத் தவிர, சங்ககாலத் தமிழகத்தில் குடவர், அதியர், மலையர், மழவர், புளியர், வில்லோர், கொங்கர், குறவர், ஆவியர், ஓவியர், வேளிர்,

அருவர், அண்டர், கடையர், தொண்டையர், காவலர், வடுகர், கோசர் போன்ற பல்வேறு இனக்குழுக்கள் இருந்தன என்பதை சங்க இலக்கியங்கள் ஆவணப்படுத்துகின்றன.

இனக்குழுக்களாக வாழ்ந்த வாழ்வு இயற்கையோடு ஒன்றிணைந்த வாழ்வாக அமைந்தது. முதற்பொருளும் கருப்பொருளும் இயற்கையை மையமிட்டே விளங்கின. காடும் காட்டைச் சேர்ந்த பகுதிகளும் முல்லை எனப்பட்டன. மலையும் மலை சார்ந்த பகுதிகளும் குறிஞ்சி எனப்பட்டன. வயலும் வயல் சார்ந்த பகுதிகளும் மருதம் எனப்பட்டன. கடலும் கடல் சார்ந்த பகுதிகளும் நெய்தல் எனப்பட்டன. பாலை என்பது தனி நிலமா என்பதைத் தொல்காப்பியம் கூறவில்லை. முல்லையும் குறிஞ்சியும் முறைமையிலிருந்து நல்லியல்பிழந்து நடுங்குதுயர் உகுத்து பாலை என்பதோர் படிவம் கொள்ளும் என்று சிலப்பதிகாரம் பாலை நிலத்தை வரையறுக்கின்றது. அகத்திணைகளாகிய முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை போன்றவற்றுக்கும் புறத்திணைகளாகிய வெட்சி, கரந்தை, உழிஞை, தும்பை, நொச்சி, வாகை போன்றவற்றுக்கும் இயற்கையில் அமைந்த பூக்களின் பெயர்களை வைத்துள்ளனர். கருப்பொருள்களிலும் தெய்வம் ஒழிந்த மற்றவையும் மலர்களின் பெயராலேயே அமைந்துள்ளன. பொழுதுகளும் இயற்கையின் மாற்றங்களுக்கு ஏற்றாற்போல பெயரிடப்பட்டுள்ளன. சங்ககால மக்கள் இயற்கையையும் இயற்கையின் அற்புதங்களையும் உற்று நோக்கியதன் விளைவாக, இயற்கையில் காணும் காட்சிகளைத் தம்முள் பொருத்திக்கொள்ளும் இயல்பு உடையவர்களாக இருந்தனர். விலங்குகள், பறவைகளின் வாழ்வைக்கூட தம்முடன் பொருத்திக் கொண்டனர். அகப்பாடல்களில் இது மிகுதியாக காணப்படுகிறது, புன்னை மரத்தைத் தன் சகோதரிபாக கருதி வளர்த்த பெண்ணையும் நற்றிணை காட்டுகிறது. காடுகளின் இயல்பை முல்லைத் திணைப் பாடல்கள் காட்டுகின்றன. மலைகளின் அருமையை குறிஞ்சித் திணைப் பாடல்கள் காட்டுகின்றன. வயல்களின் வளத்தையும் அவற்றில் வாழும் நீர்வாழ் உயிரினங்களையும் மருதத்திணைப் பாடல்கள் காட்டுகின்றன. பாலையின் வறட்சியையும் கொடுமைகளையும் பாலைத் திணைப் பாடல்கள் காட்டுகின்றன. விலங்குகள், பறவைகளின் செயற்பாடுகளைத் தம் வாழ்வோடு தொடர்புபடுத்திக் கொண்டனர். நீர்நிலைகள், மலைகள், மரங்கள் போன்ற மீவியல் தன்மையுடைனவாக நம்பப்பட்டன.

இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்தவர் சங்கத் தமிழர். இயற்கையிடமிருந்து தமக்கு வேண்டியவற்றைப் பெற்றனர். தம் தேவைகளை நிறைவேற்றும் இயற்கையை எண்ணி வியந்தனர். சிலநேரங்களில் அதன் சீற்றங்களைக் கண்டு அஞ்சினர். அதன் காரணமாக நம்பிக்கையோடும் அச்சத்தோடும் இயற்கையை வழிபட்டனர்.

"படிப்பறிவில்லாத பண்டைய இன்றைய மனிதனுக்கும் மனித சமூகத்துக்கும் கதிரவன், நிலவு விண்மீன்கள், மழை, இடி, மின்னல், நிலநடுக்கம், நோய்கள், சாவு, நெருப்பு, வெள்ளப்பெருக்கு, குழந்தைப் பிறப்பு, செடி கொடிகளில் மலர்கள் மலரும் புதுமை, மரங்களின் பூத்து, காய்த்து, கனியும் வியப்புத்தன்மை முதலாயின பெருவியப்பை அளித்திருத்தல் வேண்டும். அவற்றுக்குரிய அறிவியல் காரணங்களை அவனால் அன்று அறிந்திருக்க இயலவில்லை. எனவே இயற்கையின் அற்புதங்களைப் பார்த்து அதிசயித்துப் போன தொல்மனிதன் இயற்கையோடு இசைந்து போக பழக்கப்பட்டான். ஆகையால் அச்சத்தாலும் அன்பாலும் இயற்கையை வழிபடத் தொடங்கினான். இயற்கையை நிறைவுபடுத்தும் பலமுயற்சிகளை அவன் மேற்கொண்டான். அம்முயற்சிகள் சடங்குகள் ஆயின. சம்பிரதாயங்கள் தோன்றின. ஆக, சடங்குகள், சம்பிரதாயங்கள், பழம்நம்பிக்கைகள் ஆகியன பழங்கால மந்திர சமயத்துக்குக் காரணங்களாயின" என்று க.ப. அறவாணன் கூறுவதும் எண்ணத்தக்கது.

"மனித இனத்தவரிடையே சமயம் பற்றிய நம்பிக்கை முதன்முதலில் ஏற்பட்டிருக்குமாயின் அது இயற்கைப் பொருள்களின் ஆற்றலில் நம்பிக்கை கொண்டு அப்பொருள்களை வழிபட்டதன் மூலமே ஏற்பட்டிருக்கும் என்பார் மேக்ஸ்முல்லர். எகிப்திலும் பிற பகுதிகளிலும் செய்த அகழ்வாய்வுகளின் மூலம் இயற்கை வழிபாட்டிற்கான சான்றுகள் கிடைத்துள்ளன என்கிறார் இவர். அப்பகுதிகளில் கண்டெடுக்கப்பட்ட பொருள்களை நுணுகி உய்த்துணர்ந்தால் தொன்மை மக்கள் இயற்கைப் பொருள்களின் மீது கொண்டிருந்த அச்சங்கலந்த வியப்பையும் மதிப்பையும் ஈடுபாட்டையும் போற்றத்தக்க எண்ணத்தையும் அறிய இயலும்" (பக்தவச்சலபாரதி, 1999, ப.504) என்று கூறுவது தமிழகத்துத் தொன்மை மக்களுக்கும் பொருந்தும். இயற்கை வழிபாடாவது. உலகில் இயற்கையாக அமைந்துள்ள பொருள்களை இறையாகக் கருதி வழிபடுவதாகும்.

முதலெனப் படுவது நிலம்பொழுது இரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே (தொல். அகம்.4)

என்பதில் நிலமும் பொழுதும் முதற்பொருளாகும். பொழுது என்பது வெளியைக் குறிக்கிறது, பொழுதுகளைப் பெரும்பொழுது, சிறுபொழுது என வகுத்தனர். மாலை நேரத்தில் விளக்கேற்றி வழிபட்டனர். பின்னாளில் ஆறுகால பூஜைகள் செய்யப்பட்டன. இறைவனுக்குரிய பொழுதுகளை வரையறுத்துக் கொண்டு வழிபட்டுள்ளனர்.

## 1. ஐம்பூத வழிபாடு

தமிழர் சிந்தனையின் அடித்தளமாக அமைந்தது ஐம்பூதக் கோட்பாடு என்பதும் விளங்குகிறது. இதுவே தமிழரின் முதல் தத்துவ நிலை.

நிலந்தீ நீரிவளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்க முலக மாதலின் (தொல்.பொருள்.15:89)

பண்டைத்தமிழர் இயற்கையையே முதலில் தெய்வங்களாக வழிபட்டுள்ளனர். அவற்றுள் நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் என்ற 5 அடிப்படை கூறுகளை வலிமை மிக்க ஆற்றல்களாகக் கருதினர். ‘ஆற்றல்’ என்பதையே ‘பூதம்’ என்று கொண்டனர். அதனால் இவற்றை ‘ஐம்பெரும் பூதங்கள்’ என்றனர். ‘பூதம்’ என்பது வடசொல். வடமொழி வழக்கிலேயே அவற்றை ‘பஞ்சபூதங்கள்’ என்றும் அழைத்தனர்.

“வடமரபில் பூதங்களை நான்காகச் சொல்வது வழக்கமாகும். ஆனால் தமிழ் மரபோ ஐம்பெரும் பூதத்து இயற்கையைப் போற்றுவதாகும். வடமரபில் பூத வாதம், உலகாய்தம் பற்றி வரும் இடங்களில் கூட நான்கு பூதங்கள் மட்டுமே குறிக்கப்படுகின்றன. அந்த வகையில்தான் நரிவெரூஉத் தலையாரின் கோட்பாட்டினைக் குறிக்கும் பாலி மொழியில் அமைந்த ‘சாமண்ண பால சூக்தம்’ நான்கு பூதங்களை மட்டும் குறித்துள்ளது. ஆகாயத்தைக் காண முடியாது என்பதால் வடநாட்டு மரபில் வெளியைப் பூதமாக ஏற்பதில்லை. ஆனால் தமிழ் மரபில் வெளி எனும் ஆகாயம் ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாக மட்டுமல்லாமல் முதல் பொருளில் ஒன்றாகவும் பேசப்படும் சிறப்பினைப் பெற்றுள்ளது.” (க. நெடுஞ்செழியன், 2007, ப.24) எனவே பஞ்சபூதங்களால் ஆனதே இவ்வுலகம் என்பதைத் தமிழ்ச் சமூகம் ஏற்றுள்ளது.

மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை ஐம்பெரும் பூதங்களோடு இணைந்தே சடங்குகள் மேற்கொள்ளப்படுகின்றன. பஞ்ச பூதங்களின்றி எவ்வாறு வாழ முடியாதோ, அதைப் போன்றே இறந்தபின்னும் தொடர்புபடுத்தப்படுகிறது. இறந்தவரை தீயிட்டு எரிப்பதும் எரித்த சாம்பலை நீரிலே கரைப்பதும், புதைப்பதும் இதனை மெய்ப்பிக்கும். மனித உடலும் ஐம்பூதங்களால் ஆனது என்பதே சித்தர்களின் கொள்கை.

மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரு மென்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போல (புறம். 2)

## அ. நிலம்

தமிழ்ச் சமூகம் மட்டுமின்றி பழங்குடி மக்களைப் பொறுத்தமட்டிலும் நிலத்தைப் பெண்ணாகப் பார்ப்பதும் பெண்ணை வளமையின் குறியீடாகிய நிலமாகப் பார்ப்பதும் இன்றுவரை உள்ளது. நிலம் பெண்ணோடு தொடர்புபடுத்தப்படுகிறது. உற்பத்தித் தொழிலின் தொடக்கத்திலும் கட்டுமானப்பணிகளின் தொடக்கத்திலும் "பூமி பூஜை" போடும் வழக்கம் இன்றும் உள்ளது நினைவு கூறத்தக்கது.

சிந்துவெளி மக்களும் நிலம், காற்று, வானம், நீர், ஆறு, கடல், தீ ஆகியவற்றை வணங்கியுள்ளனர். இவற்றைக் குறிக்கும் குறிகளை முத்திரைகளின் மீது பொறித்து வைத்துள்ளனர். தாம் பயன்படுத்திய மட்பாண்டங்களின் மேலும் குறித்து வைத்துள்ளனர். நிலத்தாயை வழிபடும் வழக்கமும் சிந்துவெளியில் இருந்துள்ளது. தொல்லியல் துறையின் அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ள சுடுமண் நிலத்தாய் உருவங்கள் அக்காலத்தில் நிலவழிபாடும் நிலத்தாய் வழிபாடும் இருந்ததை உறுதி செய்கின்றன.

## ஆ. விசும்பு

வெட்டவெளியாய் இருப்பது. எல்லைகள் அற்றது. "எல்லைகளற்றிருத்தல், மாற்றமில்லாதிருத்தல், அசைவற்றிருத்தல், பேராற்றல் உடையதாயிருத்தல் ஆகிய

குணாதிசயங்கள் வானத்தின் குறியீடாவதால் அது மெய்யியல் நோக்கில் கடந்தநிலைப் பண்புடையதாகவும் சமயநோக்கில் புனிதமானதாயும் ஆயிற்று" (சோ. கிருஷ்ணராஜா, 2007, பக். 4546) வானமும் தெய்வங்கள் உறையும் இடமாக நம்பப்பட்டதால் வணங்கப்பட்டது. ஆகாயத்தலமாக 'சிதம்பரம்' நடராஜர் கோயில் வணங்கப்படுவது நோக்கத்தக்கது.

## இ. வளி, தீ

ஒளி வழிபாடு என்பது பழந்தமிழரின் வழிபாடு. பழமையான வழிபாடு. இயற்கையை வெல்ல முடியாத மனிதனால் வணங்கப்பட்டவற்றுள் ஒளி வழிபாடும் ஒன்று. மாலையில் விளக்கேற்றி வழிபடுவதும், ஒளி வழிபாடே ஆகும், இறைவனை ஒளி வழியே கண்டனர் பழந்தமிழர். தீ, வளி, விசும்பு, நிலன், நீர் ஆகியவற்றில் நிறைந்து இருப்பவன் திருமால். தீயினுள் தெறலாகவும் திங்களுள் அளியாகவும் விளங்குபவன் (பரி.3) என்று திருமாலை இயற்கையில் கண்டு வழிபட்டனர், முக்கண்ணனையும் ஐம்பூதங்களைப் படைத்தவனாகக் கண்டனர், (மதுரை. 453-514) இயற்கையில் கண்டனர். திருமாலையும் முக்கண்ணனையும் இயற்கையில் கண்டனர் என்பது தமிழர் இயற்கையை வழிபட்டதையே காட்டுகிறது. முக்கண்ணனை நெருப்பில் கண்டனர். அதன் நினைவாகவே இன்றும், சொக்கப்பனை எரிக்கப்படுகின்றது. திருவண்ணாமலை அக்னித் தலமாக வணங்கப்படுகிறது. வேள்வித் தீயில் அந்தணர்க்கு இறைவன் காட்சித் தருவான் என்று நம்பப்படுகிறது. இந்நம்பிக்கையின் அடிப்படையிலேயே வேள்வி வழியிடும் செய்யப்படுகிறது.

வளியைத் தனியாக வணங்காமல் மற்ற பூதங்களோடு இணைத்தே வணங்கியுள்ளனர், ஐம்பெரும் பூதங்களைப் படைத்தவன் திருமால் என்று பரிபாடல் கூறுகிறது, முக்கண்ணனால் படைக்கப்பட்டது என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது, மொத்தத்தில் இறைவனால் படைக்கப்பட்டதாகக் கருதியே அவற்றை வழிபட்டுள்ளனர்.

நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய (மதுரை.453-54)

திருமாலை வழிபடும் நாளில் வேள்வித் தீயில் பலியிட ஆடு நிறுத்தி வைக்கப்பட்டது. அத்தீயில் இறைவன் காட்சித் தருவான் என்று அந்தணர் வழிபட்டனர்.

அந்தி அந்தணர் எதிர்கொள அயர்ந்து
செந்தீரச் செவ்வழல் தொடங்க (கலி.119:19–13)

கரியாப் பூவின் பெரியோர் ஆர
அழல் எழு நித்தியம் (அகம்.361:10–11)

உருகெழு மரபின் கடவுட் பேணியர்
கொண்ட தீயின் சுடர்எழு தோறும்
விரும்புமெய் பரந்த பெரும்பெயர் சூழதி (பதிற்.215–7)

என்பனவற்றால் தீயை மூட்டி வழிபட்டதை அறியமுடிகிறது.

### ஈ. நீர்

படைப்பின் குறியீடாகவும் தூய்மையின் குறியீடாகவும் நீர் கருதப்படுகிறது. உலக இயக்கத்திற்கு மூலக் காரணமாக அமைந்தது. 'நீரின்றமையாது உலகு' என்பது வள்ளுவன் வாக்கு. கடல், ஆறு, ஏரி, குளங்கள் போன்ற நீர்நிலைகள் சங்ககாலம் முதற்கொண்டே வணங்கப்படுகின்றன. சைவமரபில் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற அடிப்படையில் கோயில்களின் அருகில் குளங்கள் வெட்டப்பட்டன. பரிபாடல், 'வையை'யைச் சிறப்பிக்கிறது. பட்டினப்பாலை, காவிரியையும் கடலையும் வாழ்த்துகிறது. சிலம்பு, மழையை வாழ்த்துகிறது. தெய்வம் உறையும் இடங்களாக இவை கருதப்படுகின்றன.

அணங்குடை முந்நீர் (அகம்.70)

இனமீன் இகல்மாற வென்ற சினமீன்
எறிசுறா வான்மருப்புக் கோத்து நெறிசெய்த
நெய்தல் நெடுநாட் பிணித்து யாத்து
பெருங்கடல் தெய்வம் நீர்நோக்கித் தெளித்துஎன்
திருந்திழை மென்தோள் மணந்தவன் செய்த (நெய்.கலி.131)

கடவுட் கற்சுனை (நற்.341)

சூர்ச்சுனை (அகம்.914)

போன்றவற்றைப் பார்க்கும்போது, கடல், சுனை போன்றவற்றை வழிபட்டனர் என்பது தெரிகிறது. இதைப் போன்றே ஆறுகள் வழிபாட்டில் சிறப்பிடம் பெறுகின்றன. குறிப்பாக, தமிழகத்தில் வையை ஆறும் காவிரி ஆறும் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. வையையில் புதுப்புனல் விழா கொண்டாடப்பட்ட செய்தியைப் பரிபாடல் விரிவாகக் கூறுகின்றது.

காவிரி ஆறு அன்றைய காலந்தோட்டே புனிதமானதாக கருதப்படுகின்றது.

வான் பொய்ப்பினும் தான்பொய்யா
மலைத் தலைய கடற்காவிரி
புனல் புரந்து பொன்கொழிக்கும் (பட்டி.17)

என்று அதன் வற்றாதத் தன்மை கூறப்பட்டுள்ளது. நீரின்றி அமையாது உலகு என்பதை உணர்ந்ததால் நீரே உயிர்களுக்கு ஆதாரம் என்ற சிந்தனை மேலோங்கி இருந்தது. இதனை,

புனிறுதீர் குழவிக்கு இலிந்து முலைபோலச்
சுரந்த காவிரி மரம் கொல் மலி நீர்
மன்பதை புரக்கும் நல்நாட்டுப் பொருநர் (புறம்.68:8-10)

என்ற புறநானூற்றுப் பாடல் பதிவு செய்துள்ளது.

அத்துடன் நீர் பெண்ணாகவே கருதப்படுகிறது. காவிரித்தாய் என்று போற்றப்படுகின்றது. சோழ நாட்டில் பாய்வதால் சோழர்களின் குலக்கொடி என்று சுட்டப்படுகிறது.

கோடாச் செங்கோற்சோழர்தங் குலக்கொடி
கோள்நிலை திரிந்து கோடை நீடினும்
தான்நிலை திரியாத் தண்தமிழ்ப் பாவை (மணி.5-25)

என்று கூறுகிறது மணிமேகலை.

நீர் இல்லை என்றால் உயிரில்லை, பயிரில்லை, உலகத் தோற்றத்திற்கு ஆதாரமாய் இருப்பது நீர்தான். அதனாலேயே நீர்நிலைகள் எந்த வடிவில் இருந்தாலும் அதனைத் தெய்வமாக வழிபட்டுள்ளனர். பழந்தமிழ் இலக்கியங்களில் கடல், ஆறு, சுனைகள் வணங்கப்பட்டுள்ளன. காவிரித்தாய்க்குக் காவிரியின் தென்மேற்குக் கரையில் தனிக்கோயில் உள்ளது, திருச்சேறை சாரநாதப் பெருமாள் கோயிலில் உள்ள சாரபுஷ்கரணியின் தென்மேற்கில், கண்ணனைத் தன் மடியில் வைத்து தாயாக மூலவராக வீற்றிருக்கிறாள். ஆடிப் பெருக்கன்று இதற்குச் சிறப்பு வழிபாடுகள் செய்யப்படுகின்றன. ஆடி பதினெட்டாம் நாள் ஆடிப்பெருக்காகக் கொண்டாடப்படுகிறது. இந்நாளில் பெண்கள் விரதமிருந்து முளைப்பாரியைக் கொண்டுவந்து காவிரி ஆற்றில் விடுகின்றனர். நிவேதனப் பொருள்களையும் இட்டு வணங்குகின்றனர். சங்க காலத்திலும் இவ்வழக்கு இருந்துள்ளது. வையை ஆற்றில் பெண்கள் வழிபடு பொருள்களை இட்டு வணங்கியதைப் பரிபாடல் காட்டுகிறது.

தற்காலத்தில், ஆடிப்பெருக்குக் காலத்தில் காவிரி நிறைமாத கர்ப்பிணியாக இருப்பதாக கருதி வளைகாப்பு நடத்தப்படுகிறது. தேங்காய், வெல்லம், புளிசாதம், தயிர் சாதம் போன்றவை அடங்கிய சித்ரான்னங்களைப் படைக்கின்றனர்.

## 2. கோள் வழிபாடு

ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது ஆகிய கோள்களையும் இயற்கைக் கடவுளராகக் கொண்டு வழிபடும் மரபு சங்ககாலந் தொட்டே இருந்து வந்துள்ளது.

பழந்தமிழரின் இயற்கை வழிபாட்டின் தத்துவமாக ஞாயிறு, திங்கள், மழை ஆகிய மூன்றுமே உலகத்தோற்றத்திற்கு அடிப்படை என்பதை நம்பினர்.

ஞாயிறு அன்ன வெந்திறல் ஆண்மையும்
திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்
வானத்து அன்ன வண்மையும் மூன்றும்
உடையை ஆகி இல்லோர் கையற
நீ நீடு வாழிய (புறம்.55:13-17)

## அ. ஞாயிறு

தமிழர் பண்பாட்டினை விளக்கும் தமிழர் திருநாள் ஞாயிற்றைப் போற்றும் வழிபாடு ஆகும். ஆண்டு முழுவதும் ஒளிதந்து, பயிர்களுக்கு உயிர்தந்து உலகைக் காப்பது ஞாயிறு. இவ்வுலகத் தோற்றத்திற்கு முதன்மையானது. தன்னிகரற்றது. உலகத்தோர் பசி போக்க உறுதுணையாக இருக்கும் ஞாயிற்றைத் தெய்வமாகத் தமிழர் வழிபட்டனர் என்று பெரும்பாணாற்றுப்படையின் தொடக்கமே ஞாயிறைப் போற்றுவதாக அமைந்துள்ளது.

அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி (பெரும்பாண்.1–3)

'ஞாயிறு போற்றுதும்' என்று சிலப்பதிகாரம், ஞாயிறு வழிபாட்டைக் குறிக்கிறது. ஞாயிறு வழிபாட்டின் நோக்கத்தினைப் பின்வரும் பாடல் உணர்த்துகிறது.

பயம்கெழு திருவின் பல்கதிர் ஞாயிறு
வயங்குதொழில் தரீஇயர் வலன்ஏர்பு விளங்கி
மல்குகடல் தோன்றியாங்கு (அகம்.298:1–3)

உலக உயிர்களின் இயக்கத்திற்கும் அனைத்துத் தொழில்களுக்கும், குறிப்பாக, உழவுத்தொழிலுக்கு உயிர்நாடியாய் இருப்பது ஞாயிறு. ஆதலால் தான் ஞாயிறு முதன்மைத் தெய்வமாகப் போற்றப்படுகிறது.

'கனலி' (புறம்.35, கு.கலி.16:12) வெவ்வெஞ் செல்வன்' (பொருநர்.136), 'கதிர்ச்செல்வன்' (பட்டி.122), 'விரிகதிர் ஞாயிறு' (புறம்.228:8) 'அலங்கு கதிர் கனலி' (புறம் 35:6) 'அழல்போல வெங்கதிர்' (அக.1:10) 'உருகெழு ஞாயிற்று ஒண்கதிர்' (புறம் 160:1) 'ஏமுற விளங்கிய சுடர்' (நற். 283) என்றெல்லாம் ஞாயிறு வழங்கப்படுகிறது.

ஞாயிறு ஒப்பற்ற தன்மையுடையது. ஞாயிற்றின் வருகையால் பிற நாள்மீன்களும் கோள்களும் ஒளிகெட்டன.

மாஇரு விசும்பில் பன்மீன் ஒளிகெட
ஞாயிறு தோன்றியாங்கு (பதிற். 64:12-13)

ஒண்சுடர் ஞாயிற்று விளக்கத்தான் ஒளிசாம்பும்
நண்பகல் மதியம்போல் நலம் சாய்ந்த அணியாட்டு (கலி. 121:17-18)

வாள்நிற விசும்பின் கோள்மீன் சூழ்ந்த
இளங்கதிர் ஞாயிறு (சிறுபாண்.242-243)

சூரியனைக் கோள்கள் சுற்றி வருகின்றன. அதனையும் சங்க இலக்கியம் சுட்டுகிறது. பாண்டிய மன்னன் தன் அமைச்சர்களோடும் நாடும் நகரமும் சூழ்ந்துவர திருப்பரங்குன்றின் மீது உலா வருவதற்குச் சூரியனைக் கோள்கள் சுற்றி வருவது உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

## ஆ. திங்கள்

இயற்கையைத் தம் வாழ்வியலோடு தொடர்புபடுத்திக் கொண்ட பழந்தமிழரின் செயற்பாடே இயற்கை வழிபாடு. இரவிலே தோன்றி குளிர்விக்கும் திங்களையும் பழந்தமிழர் வழிபட்டுள்ளனர்.

தண்ணளியுடன் விளங்குவதால் தண்நிலவு, வெண்திங்கள், வெண்நிலவு என்றெல்லாம் வழங்கப்படுகிறது. திங்களின் தோற்றம் முதல் வளர்ச்சி, முழுமை, மறைதல் போன்ற அனைத்துப் படிநிலைகளையும் தம் வாழ்வோடு பொருத்திக்கொண்ட தன்மையை அறியமுடிகிறது.

தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் அறியாக் காட்டித்
திங்கள் புத்தேள் திரிதரும் உலகத்து (புறம்.27:11-14)

என்று பிறப்பு, இறப்பு தத்துவத்தை இப்பாடல் விளக்குகிறது.

சங்க காலப் பெண்டிர் பிறைதொழும் மரபினைக் கொண்டிருந்தனர். மூன்றாம் பிறையைத் தொழுதால் அறிவு வளரும். அந்த நாளில் கூந்தலின் நுனியை வெட்டினால் கூந்தல் வளரும் என்ற நம்பிக்கைகள் இருந்தன.

தொழுது காண் பிறை (குறுந்.178:5)

............................................... பலர்தொழ
செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி
இன்னாப் பிறந்தன்று பிறையே (குறுந்.307:1-3)

ஒள் இழை மகளிர் உயர்ப்பிறை தொழூஉம்
புல்லென் மாலை (அகம்.239:9-10)

இங்ஙனம் படிப்படியாக வளர்ந்துவரும் அழகு சிறு கோட்டுக் குழவித் திங்கள்' (பெரும்.383) என்று சுட்டப்படுகிறது.

எண்நாள் திங்கள் வடிவிற்று ஆகி
அண் நா இல்லா அமை வரு வறுவாய்'
அறையும் பொறையும் மணந்த தலைய
எண்நாள் திங்கள் அனைய கொடுங்கரைத்
தெண்நீர்ச் சிறுகுளம் கீள்வது மாதோ (புறம்.118:1-3)

என்று எட்டாம் நாள் திங்கள் குறிப்பிடப்படுவதைக் காணமுடிகிறது.

வளர்ந்து முடிந்து முழுமை அடைந்த நிலவு நிறைமதி ஆகும். திங்கள் தமிழர் வாழ்வோடு பின்னிப் பிணைந்திருப்பது சங்ககாலம் தொடங்கி இன்றுவரை உள்ள மக்களின் இயல்பைக் காட்டுகிறது. திங்களைப் பாடாத கவிஞரில்லை.

அகல்மதி (கலி.56-4)

பால்மதி (கலி.104:3, 105:46)

திங்கள் நாள் நிறைமதி (புறம்.102:6-7)

நாள் முதிர் மதியம் (மதுரை.548)

என்றெல்லாம் நிறைமதி வழங்கப்பட்டுள்ளது. வளர்கின்ற பக்கம் 'அலர்தரு பக்கம்' என்றும் தேயும் பக்கம் 'வழியது பக்கம்' என்றும் வழங்கப்படுகிறது.

'திங்களைப் போற்றுதும்' என்று சிலப்பதிகாரம் திங்கள் வழிபாட்டைப் பதிவு செய்திருக்கிறது. பிறை, வளர்பிறை, முழுமதிநாள் போன்றவை தொழப்பட்டதைப் போல வானின் உச்சியில் நிற்கும் உவா நாள் நிறைமதி

தொழாமல் விலக்கப்பட்டுள்ளது. ஆனால் அம்மரபை மீறி பாணன் தன் விறலியுடன் தொழுததை,

உச்சி நின்ற உவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையின் சுரமுதல் சேர்ந்த
சிலவளை விறலியும் யானும் வல்விரைந்து
தொழுதனம் அல்லமோ (புறம்.60:3–6)

என்று புறநானூறு பதிவு செய்துள்ளது.

சித்திரகுப்தனுக்கு உகந்ததாகக் கருதப்படுவதால், சித்திரை மாதத்தில் வரும் முழுமதி நாளான பௌர்ணமி மட்டும் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. எனவே மக்கள் தம் ஆயுளை நீட்டிக்க வேண்டும் என்று வீட்டில் கோலமிட்டு இன்றும் வழிபடுகின்றனர்.

அதேப்போல் தேய்பிறை படிப்படியாய்க் குறைந்து 16 ஆம் நாள் இல்லாமல் வானம் வெட்டவெளியாய் காட்சியளிக்கும். இந்நாளே பேச்சுவழக்கில் 'அமாவாசை' என்று அழைக்கப்படுகிறது. பரிபாடல் அதனை 'இருள் உவா' என்கிறது.

எண்மதி நிறை, உவாஇருள் மதிபோல் (பரி.11:37)

'நிறைந்த அமாவாசை' நாளன்று நல்ல காரியங்களைத் தொடங்குவது, நன்னிமித்தமாகக் கருதப்படுகிறது. அமாவாசையின் முன்தினமும் அடுத்த தினமும் நற்காரியங்கள் தொடங்கக்கூடாது எனவும் ஊர்விட்டு ஊர் செல்லக்கூடாது எனவும் நம்பப்படுகிறது. உவா நாளன்று பரதவர் மீன்பிடிக்க கடலுக்குச் செல்வதில்லை. இன்றும் இவ்வழக்கம் உள்ளது.

புன்தலை இரும்பரதவர்
பைந்தழை மாமகளிரொடு
பாயிரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது
உவவு மடிந்து உண்டாடியும் (பட்டி.90–94)

என்பதால் அறியமுடிகிறது.

3ஆம் பிறை தை முதல் நாளாகவும்,

சித்திரை திங்கள் 3ஆம் பிறை பலராமன் பிறந்த நாளாகவும்,

சித்திரை 3ஆம் பிறை அட்சயத் திருதியையாகவும்,

சித்திரை திருதியை திதி மச்ச அவதாரம் எடுத்ததாகவும் கொண்டாடப்படுகிறது,

திருவாதிரை மார்கழி நிறைமதி நாளன்று புனர்பூச நல்லோரையில் சிவனுக்கு விழா நடைபெற்றது.

## இ. செவ்வாய்

செந்நிறம் வாய்ந்ததால் 'அழல்,' 'செம்மீன்,' 'படிமகன்' என்றும் குறிக்கப்படுகின்றது. வெள்ளியானது செவ்வாயுடன் சேர்ந்தால் மழை வராது என்று நம்பினர். இதனை,

**அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது** **(பதிற்.1325)**

என்று பதிற்றுப்பத்தும்,

**முந்நீர் நாப்பண் திமில்சுடர்போல்**
**செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்** **(புற.601–2)**

என்று புறநானூறும் சுட்டுகின்றன.

## ஈ. புதன்

புதன் பற்றிய குறிப்பும் பரிபாடலில் காணப்படுகிறது. இக்கோல் 'புந்தி' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**புந்தி மிதுனம் அடைய** **(பரி.115)**

என்பதால் இதனை அறியலாம்.

## உ. வியாழன்

வியாழனும் வெள்ளியும் அசுரர்களுக்கும் தேவர்களுக்கும் குருவாகக் கூறப்படுகின்றது, இவ்விரு கோள்களையும் கலித்தொகை 'அந்தணர் இருவர்' என்று குறிப்பிடுகின்றது.

நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவை எடுத்து,
அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும் *(கலி.991–2)*

என்பதால் இக்கோள்கள் உயர்திணையாகக் கருதப்பட்டன என்பது தெரிகிறது. இவர்களால் இயற்றப்பட்டவை 'பாருகற் பத்திய சூத்திரம்,' 'சுக்கிர நிதியும்' ஆகிய நூல்கள் ஆகும். இன்றும் 'குரு பகவான்' என்றே இக்கோள் அழைக்கப்படுகின்றது, 'குரு பெயர்ச்சி'யை மக்கள் பெரிதும் வரவேற்கின்றனர். குரு பகவானுக்கென்று தனிக்கோயில்கள் உள்ளன. குருபெயர்ச்சியின் போது சிறப்பு வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

**ஊ. வெள்ளி**

வெள்ளி என்ற கோளின் பெயராக அமைந்துள்ள 'வெள்ளிக்கிழமையும்' தமிழர் வழிபாட்டில் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது. 'சீர் சால் வெள்ளி' என்று அது சிறப்பிக்கப்பட்டதும் இதனை உறுதி செய்கிறது.

இக்கோள், வெள்ளி, வெண்மீன், வைகுறுமீன், சுக்கிரன் என்றெல்லாம் அழைக்கப்படுகிறது, மழைக்கோளாகவும் கருதப்படுகிறது. வடபக்கத்தில் தாழ்ந்தால் மழை உண்டாகும் என்றும் தெற்கு பக்கம் எழுந்தால் மழை இல்லையென்றும் பண்டை மக்கள் நம்பினர்.

வறிது வடக்கு இறைஞ்சிய சீர்சால் வெள்ளி
பயம்கெழு பொழுதொடு ஆநியம் நிற்ப *(பதிற்.2423–25)*

நிலம் பயம் பொழிய, சுடர் சினம் தணிய
மயங்கெழு வெள்ளி ஆநியம் நிற்ப *(பதிற்.6913–14)*

என்ற அடிகளால் இதனை அறியலாம்.

**எ. சனி**

கரிய நிறமுடையதால் 'மைம்மீன்' எனப்பட்டது.

மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும் *(புறம்.117:1)*

என்று புறநானூறு கூறுகிறது. இக்கோளும் 'சனி பகவான்' என்றே தற்காலத்தில் அழைக்கப்படுகின்றது.

இக்கோளைப் பற்றியும் தொன்மம் வழங்கப்படுகின்றது. 'சனிஸ்வரன் சூரியனுக்கும் சாயாதேவிக்கும் மகனாகப் பிறந்தவர். பிறந்தவுடன் அவரைப் பார்க்க வந்த சூரியன் குஷ்டரோகி ஆனார். கோபம் கொண்ட சூரியன் சனிஸ்வரனைத் தூக்கி வீசிவிட்டார். வெகு தூரத்தில் விழுந்து முடவனானார்' என்று புராணங்கள் கூறுகின்றன. எமனின் அவதாரமே சனி என்று கூறுவதுமுண்டு. சனியின் வக்கிர பார்வைபட்டால் பெருந்துயர் வரும் என்று நம்பப்படுகிறது. அச்சொல்லை சொல்லவும் அஞ்சுகின்றனர். நளன், அரிச்சந்திரன், இராமன் போன்றோர் பட்ட துன்பங்களுக்குக் காரணம் சனிதோஷமே என்று புராணங்கள் வழி அறியமுடிகின்றது.

இவருடைய வாகனம் காக்கை. உரிய தானியம் எள் ஆகும். சனியின் பாதிப்பு வரக்கூடாது என்பதற்காக காக்கைக்குச் சோறிடப்படுகிறது. இவர் நிற்குமிடத்தைப் பொறுத்து பஞ்சம சனி, அஷ்டமத்துச் சனி, ஏழரைச் சனி என்று அழைக்கப்படுகிறார். இன்றும் இவ்வழிபாடு பயத்துடன் செய்யப்படுகிறது. திருநள்ளாறு இவர் கோயில் கொண்டுள்ள இடமாகும். இங்கு சென்று வழிபட்டால் சனி தோஷம் நீங்குமென்று நம்புகின்றனர். புரட்டாசி மாதத்தில் வரும் சனி வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

### ஏ. இராகு, கேது

இயற்கை வழிபாட்டில் முக்கிய இடம்பெறுவது நாகவழிபாடு. இவ்விரு சொற்களும் சங்க இலக்கியங்களில் ஆளப்படவில்லை என்றாலும் நாக வழிபாடு அக்காலத்திலிருந்தது. உலகெங்கிலுள்ள பழங்குடி மக்கள் நாகவழிபாட்டினை மேற்கொண்டுள்ளனர். புராணங்களில் தனி கதாபாததிரமாகவே நாகங்கள் படைக்கப்படுகின்றன. புற்றுக்கள் அவை உறையுமிடமாகக் கருதப்படுகின்றன.

நாகணா (35), நாகாஆ (59), இவா நாகர்ஆ (225), பய் நாகய் ஆ (255), பய்ப்பாம்பின் படம், நாகய மலய்ஞ் (268), நாகய் ஆக் (355), ஆண்டவ்வ நாகாய் ஆ (373.1), அய் நாகய் ஆட் (363) போன்ற முத்திரைகள் சிந்துவெளிக் காலத்திலேயே இருந்துள்ளதை உறுதிபடுத்துகின்றன.

இவ்வுலகை எட்டு யானைகளும், எட்டு நாகங்களும் தாங்கிக் கொண்டிருப்பதாக சாத்திரங்கள் கூறுகின்றன. ஆதிசேடன், வாசுகி, தக்ஷகன், திருதராஷ்டரன், ஐராவதன், கார்க்கோடகன், சங்கன், மாணி என்ற பெயர்களில்

அந்நாகங்கள் வழங்கப்படுகின்றன, இவற்றின் திருமாலைத் தாங்கிய பெருமைக்குரியது ஆதிசேடன் ஆகும். திருபாற் கடலில் பாம்பணையில் பள்ளிகொண்ட செய்தியைச் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் காணமுடிகின்றது.

… … … … … … நீடுகுலைக்
காந்தளுஞ் சிலம்பிற் களிறு படிந்தாங்கும்
பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன் (பெரும்பாண்.372:374)

போன்றவை இதற்குச் சான்றுகளாகும்.

பாற்கடலைக் கடைந்தபோது எழுந்த விஷத்தை ஆதிசேடனின் சகோதரி மானசாதேவி. பாம்புகளுக்கும் இதர ஐந்துக்களுக்கும் கொடுத்ததால் அவை விஷத்தன்மையுடையன ஆயின என்று புராணங்கள் கூறுகின்றன. கச்சியபரின் புதல்வர்களே இந்நாகங்கள் என்றும் கூறப்படுகின்றது.

இராகுவும் கேதுவும் ஒளி செய்வதில்லை. பாம்பு சந்திரனைப் பற்றுவதும் விடுவிப்பதுமான செய்திகள் உள்ளன.

அரவு நுங்கு மதி (குறுந். 295(4). அகம்.313:7)

பாம்பு ஊர் மதி (நற்.128:2)

பாம்பு சேர் மதி (கலி.15:17)

பால்மதி சேர்ந்த அரவினைக் கோள்விடுக்கும்
நீல்நிற வண்ணனும் போன்ம் (மு.க.104:37–38)

போன்ற சான்றுகள் இதனை உணர்த்துகின்றன.

கடவுளைப் போன்று அவர்களுடைய வாகனங்களும் வழிபடப்படுவது மரபாக உள்ளது, நாகராஜன், நாகதேவதை, பேச்சியம்மன் என்றெல்லாம் நாகங்கள் வணங்கப்படுகின்றன.

சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது போன்ற நவகிரகங்களை வழிபடும் முறை சங்க காலத்திலேயே இருந்துள்ளதை மேற்கண்ட சான்றுகள் உறுதிசெய்கின்றன. இவ்வழிபாடு இன்று சிறப்பிடம்

பெற்றுள்ளது. சமணர் வழிபாட்டிலும் சிறப்பிடம் பெறுகின்றது. இந்த ஒன்பது கோள்களிலும் ஜினாலயங்கள் உள்ளதாக சமணர் நம்புகின்றனர்.

சூரிய மண்டலத்தில் பத்மப் பிரபருக்கும் சந்திர மண்டலத்தில் சந்திரப் பிரபருக்கும் செவ்வாய் மண்டலத்தில் வாசு பூஜ்யருக்கும் புதன் மண்டலத்தில் மல்லிநாதருக்கும் குரு மண்டலத்தில் மகாவீரவர்த்தமானருக்கும், சுக்கிர மண்டலத்தில் புஷ்பதந்தருக்கும் சனி மண்டலத்தில் முனிசூவரதருக்கும், இராகு மண்டலத்தில் நேமிநாதருக்கும் கேது மண்டலத்தில் பார்சுவநாதருக்கும் ஆலயங்கள் உள்ளதாக நம்பப்படுகிறது, கோள்கள்மீது கொண்ட நம்பிக்கையே இதற்குக் காரணமாகும்.

## 3. நாள் மீன் வழிபாடு

கோள்களை வழிபட்டதைப் போல நாள் மீன்களையும் தமிழர் வழிபட்டுள்ளனர் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன.

### அ. ஓணம்

**கணம்கொள் அவுணர் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நல்நாள் (மதுரை.590:591)**

திருமாலோடு தொடர்புபடுத்தப்படும் நாள்மீன் இது. மாவலி சக்ரவர்த்தி திரும்பி வரும் நாளே ஓணவிழாவாக கொண்டாடப்படுகிறது (மதுரை.590591) என்பதை மதுரைக் காஞ்சி கூறுகிறது.

### ஆ. ஆதிரை

இது சிவபெருமானோடு தொடர்புபடுத்தப்படுகிறது. திரு என்று அடைமொழியுடன் 'திருவாதிரை விழா' கொண்டாடப்படுகிறது. அந்நாளில் திருவாதிரைக் களி படைக்கப்படுகிறது. இவ்விழா பற்றிய குறிப்பு மதுரைக் காஞ்சியிலும் பரிபாடலிலும் உள்ளது.

நீரும் நிலனும் தீயும் வளியும்
மாகவிசும்போடு ஐந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக
மாசுஅற விளங்கிய யாக்கையர்
சூழ்சுடர வாடாப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார்
அந்தி விழவில் தூரியம் இறங்க (மதுரை.453:460)

கனைக்கும் அதிர்குரல் கார்வானம் நீங்க,
பனிப்படு பைதல் விதலைப் பின்குளத்து
மா இருள் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்க (பரி.11:74-78)

இவ்விழா பலநாள் கொண்டாடப்பட்ட விழாவாக அறியமுடிகிறது. அந்தணர்களால் தொடங்கப்பட்டுள்ளது என்பதும் தெரிகிறது. இன்றும் இவ்விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

## இ. அறுமீன்

ஆகாயத்தில் வடதிசையில் உறையும் ஏழு முனிவர்களின் மனைவியருள் அருந்ததி ஒழிந்த மற்ற ஆறுபெண்களும் அக்னிவாய்பெய்த அவி உணவை உண்டனர். முருகப்பெருமானைக் கருவினில் தாங்கினர். பின்பு இமயமலையிலுள்ள 'சரவணம்' என்ற சுனையில் பெற்றெடுத்தனர். இக்கார்த்திகைப் பெண்டிர் ஒன்று கூடும் கார்த்திகைத் திருநாள். இதுபற்றிய குறிப்புகள் அகநானூற்றிலும் (141), பரிபாடலிலும் (5), திருமுருகாற்றுப் படையிலும் (225), மலைபடுகடாமிலும் (100) கிடைக்கின்றது.

மழைகால் நீங்கிய மாக விசும்பல்
குறுமுயல் மறுநிறம் கிளர, மதி நிறைந்து
அறுமீன் சேரும் அகல் இரு நடுநாள் (அகம்.141:6-8)

வடவயின் விளக்கு ஆல், உறை எழுமகளிருள்
கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய
அறுவர் மற்சாறயோரும் அந்நிலை அயின்றனர் (பரி.5:43-49)

அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ (திருமுருகு.225)

என்பவை இதனை உணர்த்துகின்றன.

ஈ. **வடமீன்**

ஏழு முனிவருள் வசிட்டரின் பத்தினியே அருந்ததி. கற்புக்குரிய அரசியாக இவள் போற்றப்படுகின்றாள். அக்கினிவாய் பெய்த கருவினை, உண்ண மறுத்ததால் இவள் கற்பு போற்றப்படுகின்றது. இதனைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

வானத்த அணங்கு அருங்கடவுள் (அகம்:17–18)

இருண்டு தோன்று விசும்பின் உயர்நிலை உலகத்து
அருந்ததி அனைய கற்பின்
குரும்பை மணிப்பூண் புதல்வர் தாயே (ஐங்.442:3–6)

வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கிய கற்பினாள் (கலி.2:2)

மீனொடு புரையும் கற்பின்
வாள்நுதல் அரிவையொடு காண்வரல் பொலிந்தே (பதிற்.89:19–20)

பெருநல் வானத்து- வடவரின் விளங்கும்
சிறுமீன் புரையும் கற்பின் நறுநுதல் (பெரும்.302–303)

தீதிலா வடமீனின் திறம் இவள் திறம் (சிலம்பு.1.27)

என்பவற்றால் இதனை அறியலாம்.

தமிழ்ச் சமுதாயத்தில் இன்றும் அருந்ததியைத் தொழும் மரபு உள்ளது. இந்துமத திருமணங்களில் திருமண நாளன்று திருமணம் முடிந்தவுடன் நடத்தப்படும் சடங்குகளில் முக்கியமானவை அம்மி மிதித்தலும் அருந்ததி பார்த்தலுமாகும். மணப்பெண்ணை, மணமகன் அம்மியினை மிதிக்கச் செய்தப்பின் வானத்தை நோக்கிப் பார்க்கச் சொல்வார். 'வானிலே இருக்கும் அருந்ததியைப் பார்' என்று இதற்குப் பொருள்.

பிறர் கருவை ஏற்காமல் கணவனுக்கு உண்மையாய் வாழ்ந்தவள் அருந்ததி. அத்தகைய கற்பு நெறியை ஒவ்வொரு பெண்ணும் மேற்கொள்ள

வேண்டும். அங்ஙனம் மேற்கொண்டால் அவள் தெய்வமாகப் போற்றப்படுவாள் என்பதே இச்சடங்கின் தத்துவமாகும்.

இதனால் ஐம்பெரும் பூதங்களான நிலம், நீர், காற்று, விசும்பு, தீ போன்றவற்றையும் சூரியன், திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேதுவாகிய நாகங்கள் போன்றவற்றையும் சங்ககால மக்கள் வழிபட்டனர் என்பது தெரிகிறது. அத்துடன் நாள் மீன்களாகிய ஓணம், ஆதிரை, அறுமீன், வடமீன் போன்ற நாள் மீன்களும் வழிபடப்பட்டுள்ளன. இன்றும் வழிபடப்படுகின்றன.

இவ்வுலகிலுள்ள எல்லா உயிர்களின் தோற்றத்திற்கும் இறைவனே காரணம் என்று நம்பினர். வியக்கவைக்கும் பொருள்களிளெல்லாம் இறைவன் உறைவதாக நம்பினர். அவனின்றி அணுவும் அசையாது என்ற நம்பிக்கை மேலோங்கி இருந்தது. அதனால் மரங்கள், குன்றுகள், மலைகள், விலங்குகள், கடல் போன்றவற்றை இறைவனின் அம்சமாகக் கருதினர்.

## 4. மர வழிபாடு

ஆதி மனிதனுக்கு உணவாகவும் உடையாகவும் உறைவிடமாகவும் மரங்கள் பயன்பட்டன. மரங்களின் அடிவாரங்களில் வழக்குகள் விசாரிக்கப்பட்டன. மரங்களையே தெய்வமாகக் கருதியதால் தெய்வத்தின் முன்னிலையில் வழக்குகள் விசாரிக்கப்பட்டன. விவாதங்கள் நடைபெற்றன. பொதுமன்றங்களாக அவை செயல்பட்டன.

முற்றம், பொதியில், மன்றம் போன்றவை மர அடிவாரங்களையே குறித்தன.

"வெவ்வேறு மரங்களில் கடவுளர் உறைகின்றனர் என்ற நம்பிக்கையாலும் மூதாதையர் நினைவாலும் அரிய வகைத் தாவரங்கள் அழிந்துவிடாமல் பாதுகாக்கும் ஆர்வத்தாலும் பல தலைமுறையாக மக்கள் பின்பற்றி வரும் நம்பிக்கையாலும் மரங்களைத் தலமரங்களாக வழிபடுகின்றனர்." (க.ப. அறவாணன், 1999, ப.139)

ஆலமரம், அசோகமரம், வேம்புமரம், கடம்பமரம், வன்னி மரம் போன்ற மரங்களில் தெய்வங்கள் உறைவதாக சங்ககால மக்கள் நம்பி வழிபட்டனர்.

இன்றும் இந்நம்பிக்கையோடு வணங்கப்படுகிறது. அரசும் வேம்பும் இணைந்து வளருமிடங்கள் சிறப்பாக வழிபடப்படுகின்றன.

வேம்பு மரத்தில் அம்மன் உறைவதாகவும் கடம்ப மரத்தில் முருகன் உறைவதாகவும் நம்புகின்றனர்.

"அரச மரத்தைத் திருமாலின் அவதாரம் எனவும், மராமரத்தைச் சிவன் இருப்பகம் எனவும் பலா மரத்தை(சமதை) பிரம்மாவின் உறைவிடம் எனவும் அசோக மரத்தை சீதையுடன் தொடர்புபடுத்தியும் இலக்கியங்கள் கூறுவது இங்கு நோக்கத் தக்கது." (இராமலிங்கத் தம்பிரான், 1970, ப.142)

ஆலமரத்தின் அடியில், சோறு சமைத்து இலையில் படையல் போடப்பட்டு இருந்ததாகவும் காக்கைகள் தம் கூட்டத்தோடு அச்சோற்றை நிறைய உண்டதாகவும் அவ்வழியே வரும் ஆநிரைகள் அம்மரத்தின் புறத்தைத் தடவியதாகவும் என்பதையும் நற்றிணைப் பாடல் பதிவு செய்துள்ளது.

தாறுஎறு மறுகின் ஆவுறந்தீண்டும்
நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து
உகுபலி அருந்திய தொருவிறற் காக்கை **(நற்.343)**

ஆலமரம் தெய்வமாக கருதப்பட்டமை, மரத்திற்குச் சோறுபடைத்துப் பலியிடுதல் போன்றவை அக்காலத்தே இருந்தமையை இப்பாடல் உணர்த்துகிறது.

இயற்கையிடமும் மரணத்திற்குப் பின்வரும் நிலைமையிடமும் மனிதன் கொண்ட அச்சமே வழிபாட்டிற்கு அடிப்படைக் காரணம் என்று கருதப்படுகிறது. (கலைக்களஞ்சியம், தொகுதி எட்டு. ப.448) தெய்வங்கள் உறையும் மரங்களைத் தமிழகத்தில் 'இயற்கை கோயில்கள்' என்றழைக்கின்றனர். இத்தகு மரவழிபாடு உலகின் பல்வேறு நாடுகளிலும் வழக்கில் உள்ளது.

சிரியா, துருக்கி ஆகிய தேசங்களில் மரவழிபாடு அதிகம். நம் நாட்டின் பல பகுதிகளிலும் இவை வெவ்வேறு பெயர்களால் குறிப்பிடப்படுகின்றன. மராட்டியத்தில் இவை 'தேவரை' எனவும், இராஜஸ்தானில் 'ஓரான்ஸ்' எனவும் கர்நாடகத்தில் 'சிதாரவனம்' எனவும் கேரளத்திலும் தமிழ்நாட்டிலும் 'காவுகள்' எனவும் அறியப்படுகின்றன. தென் தமிழகப் பகுதிகளில் இவற்றை 'இயற்கை

கோயில்கள்' என்று குறிப்பிடுதல் சாலப் பொருந்தும். இவை தொன்றுதொட்டு சமயங்களோடும் காவல் தெய்வங்களோடும் தொடர்புபடுத்திப் பார்க்கப்படுகின்றன. இவை அடங்காத புதர்காடுகளைப் போல காட்சி தருவன." (க.ப. அறவாணன், 1999, ப.134)

இத்தகு இயற்கை கோயில்கள் தமிழகம் முழுவதும் கிராமங்கள்தோறும் சிறுதெய்வங்களாகவும் தல வழிபாடாகவும் வணங்கப்பட்டாலும் குமரி மாவட்டத்தில் விளவங்கோடு, கல்குளம் வட்டங்களில் அதிகமாக காணப்படுகின்றன. குமரி மாவட்டத்தில் மட்டும் 300க்கும் மேற்பட்ட இயற்கை கோயில்கள் அமைந்துள்ளன என்று களஆய்வுகள் கூறுகின்றன. இவ்விடத்தில் மேற்கொள்ளப்பட்ட களஆய்வில் இயற்கை கோயில்களின் அமைப்பு கூறப்பட்டுள்ளது.

அனைத்து இயற்கை கோயில்களின் அருகிலும் நீர் ஆதாரங்களான கிணறுகளும் குளங்களும் வேறு சிலவற்றில் பொங்கிவரும் நீர் ஊற்றுக்களும் நீராழிகளும் இருக்கின்றன. பழங்குடி மக்கள் வசிக்கும் காட்டுப்பகுதியில் உள்ள கடவுள் சிலைகளின் வாள், கத்தி போன்றவை இருப்பதோடு, ஆடு, மாடு, பன்றி போன்றவற்றைப் பலியிட்டு வழிபட்ட பலிப்பீடமும் உள்ளது. (மேலது)

**மர வழிபாட்டுச் சடங்குகள்**

மரங்களின் அடியில் பீடம் அமைத்து தெய்வச் சிலைகளை வைத்து வழிபடும் வழக்கம் இன்றும் உள்ளது. மரங்களுக்கு மஞ்சள் பூசி, குங்குமம் இட்டு, பட்டாடை உடுத்தி சூலாயுதத்தை நட்டு வழிபடுவர். இன்றும் இவ்வழக்கம் கிராமங்களில் சிறுதெய்வ வழிபாட்டில் கடைபிடிக்கப்படுகிறது. குறிப்பாக அம்மன் வழிபாட்டில் சிறப்பாகப் பின்பற்றப்படுகிறது.

குமரி மாவட்டத்தில் சாஸ்தா பிள்ளையார், லெச்சி, மாடன், சிவலிங்கம் ஐயப்பன் மற்றும் பாம்புச் சிலைகளும் நிறுவப்பட்டு வழிபாடு செய்யப்படுகின்றது.

சங்கத் தமிழரின் வழிபாட்டில் மரவழிபாடு சிறப்புற்றிருந்ததைத் தொல்காப்பியம் பதிவு செய்துள்ளது. கருப்பொருள்களில் ஒன்றாக கூறப்படுவதோடு, புறத்திணைகளின் இலக்கணங்களையும் உட்பிரிவுகளையும்

கூறுமிடத்து, வெட்சி முதலாகக் கூறப்படும் ஒவ்வொரு திணைக்கும் ஒரு காவல் மரம் சிறப்புற சுட்டப்படுகின்றது. ஒவ்வொரு காவல் மரமும் ஒவ்வொரு காவல் தெய்வமாகவே கருதப்பட்டது. காவல் மரத்தை அழிப்பதே வெற்றியாகக் கருதப்பட்டது.

தலமரங்கள் அமைந்துள்ள இடங்களில் எல்லாம் கிணறுகளோ, குளங்களோ கட்டாயம் அமைக்கப்பட்டுள்ளது. புண்ணியத் தீர்த்தமாகவும் மக்களின் தேவைகளுக்காகவும் தெய்வத்திருமேனிகளை நீராட்டுவதற்கும் அவை பயன்படுகின்றன. மரங்களுக்கு ஆடைகட்டி அலங்கரித்தச் சூழலில் பிற்காலத்தில் உருவ வழிபாடுகள் தோன்றிய பிறகு தெய்வங்களின் திருமேனிகளுக்கு அலங்காரம் செய்யும் சடங்காக மாறியது.

“தலமரங்களனைத்தும் மூலவர்களாகவோ அல்லது மூலவரிருந்த மரத்தடிகளாகவோ இருந்திருக்கின்றன. சில இடங்களில் தல பெயர்களாகவும் இன்றும் வழக்கிலுள்ளன. மாமரம் - கச்சிஏகம்பன், புன்னைமரம் - புன்னை வனம், மருதமரம் - திருவிடை மருதூர், பாதிரி - திருப்பாதிரிப்புலியூர், பனை - திருப்பனைந்தாள், முல்லை - திருமுல்லைவாயில், கடம்பு - கடம்பவனம்” (கு.ப. அறவாணன், 1984)

தற்காலத்தில் அறிவியலின் வளர்ச்சி அதிவேகமாக வளர்ந்தாலும் ஒரு பக்கத்தில் ஆன்மிகம், நம்பிக்கைகள் சார்ந்த சடங்குகளும் வேரூன்றியே உள்ளன.

## 5. மலர் வழிபாடு

மரங்களில் தெய்வம் உறைவதாக கொண்ட நம்பிக்கையைப் போன்றே சில மலர்களும் தெய்வீகத் தன்மையுடையனவாகக் கருதப்பட்டுள்ளன.

திருமுகம் அவிழ்ந்த தெய்வத் தாமரை **(சிறுபாண். 73)**

தாமரை மலர் தெய்வம் உறையுமிடமாகக் கருதப்பட்டுள்ளது. ஆனால் எத்தெய்வம் என்று சுட்டப்படவில்லை. பரிபாடலில், ‘பிரமன் தாமரைப் பூவிலே தோன்றியவன்’ என்றும் அவன் நாவிலே தோன்றியவையே நான்கு வேதங்கள் என்றும் கூறப்பட்டுள்ளது.

பூவினுட் பிறந்தோன் நாவினில் பிறந்த
நான்மறைக் கேள்வி நல்குரல் எடுப்ப (பரி. திரட்டு. 7)

தாமரை மலர் தெய்வம் உறையுமிடமாகக் கருதப்பட்டதால் அவற்றைக் கண்ணால் காண்பதன்றி சூடிமகிழ்தல் கூடாது என்று நம்பப்பட்டது.

நீத்துடை நெடுங்கயம் தீப்படமலர்ந்த
கடவுள் ஒண்பூ அடைதல் ஓம்பி (பெரும்பாண்.290)

இதனால் இம்மலர் 'கடவுள் ஒண்பூ' எனச் சிறப்பிக்கப்பட்டது. துளபமாலையில் திருமகள் உறைவதாக நம்பப்படுகிறது.

## 6. மலைவழிபாடு

மலைகள் தெய்வங்கள் உறையுமிடங்களாக நம்பப்பட்டன. வானத்துத் தெய்வங்களின் குறியீடாக மலைகள் இருக்கின்றன என்ற அடிப்படையில்,

அணங்கொடு நின்றது மலை (நற் 165)

அணங்குடை நெடுவரை உச்சியில் (அகம்.23:1)

அணங்குடை வரைப்பு (அகம்.372:1)

குறவரும் மருளும் குன்றம்

என்று தெய்வங்களோடு தொடர்புபடுத்தப்படுகின்றன.

சூருடைச் சிலம்பில் சுடர்ப்பூ வேய்ந்து
தாம் வேண்டு உருவின் அணங்குமார் வருமே (அகம் 158:8-9)

மலையுறை தெய்வம் தாம் வேண்டும் உருவமெடுக்கும் என்றும் நம்பப்பட்டது.

இன்றும் மலைகளும் குன்றுகளும் இறைவன் உறையுமிடங்களாக உள்ளன. அறுபடை வீடுகள் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருஆவினன்குடி, சுவாமி மலை, திருத்தணி, பழமுதிர்சேலை என்று சொல்லப்படும் கோயில்களை முருகப்பெருமான் உறையுமிடங்களாக வழிபடுகின்றனர். இன்றைய ஆந்திராவில் திருப்பதியில் பெருமாள் கோவிலும் திருவண்ணாமலையில்

அருணாச்சலேஸ்வரர் கோயிலும் அவர்கள் உறையும் இடங்களாகப் போற்றப்படுகின்றன. மலைகள் (அ) குன்றுகள் இருக்குமிடங்கள் எல்லாம் குமரன் இருக்கும் இடங்களாக வழிபடும் சூழலில் காஞ்சிபுரத்தில் தரையில் உள்ள முருகன் கோவில் 'குமரக்கோட்டம்' பிரசித்திப் பெற்றது.

## 7. பல்லி வழிபாடு

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றோடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே (தொல்.பொருள்.571)

என்று தொல்காப்பியம் உயிர்களின் பரிணாம வளர்ச்சியைக் கூறுகின்றது, பழந்தமிழர் வழிபாடும் இயற்கைப் பொருளோடு. பறவை. விலங்கு போன்றவற்றை அஃறிணைகளையும் வழிபட்ட நெறியினைக் காட்டுகிறது, நீரில் வாழும், மச்சம், நீரிலும் நிலத்திலும் வாழும் கூர்மம். நிலத்தில் வாழும் வராகம் போன்றவற்றை திருமாலின் அவதாரங்களாகக் கற்பித்து வழிபட்ட முறையும் இயற்கை வழிபாட்டையே காட்டுகிறது, உயிர் வளர்ச்சியில் கண்ட இறை வடிவத்தையே காட்டுகிறது. பல்லி, கருடன், காகம், பசு போன்றவற்றை இறைவனோடு தொடர்புபடுத்தி சங்ககால மக்கள் வழிபட்டுள்ளனர்.

உலகில் தோன்றிய உயிர்களில் முதன்முதலில் நிலத்தில் வாழும் ஆற்றல் பெற்ற உயிர் பல்லி என்பதை அறிவியல் அறிஞர்கள் நிறுவுகின்றனர். இந்த அடிப்படையில் ஊர்ந்து செல்லும் இயல்புடைய பல்லி, தென்னிந்திய மக்களால் பெரிதும் மதிக்கத்தக்கதாய் உள்ளது. நிமித்தங்களைச் சொல்லக் கூடியதாக கருதப்படுவனற்றுள் மற்ற உயிர்களைக் காட்டிலும் பல்லி சிறப்பிடம் பெற்றுள்ளது.

இது கௌளி, கவுளி, கேள்வி என்றெல்லாம் பேச்சு வழக்கில் வழங்கப்படுகிறது, இலக்கிய வழக்கில் 'பல்லி,' 'ஓந்தி' என்றெல்லாம் வழங்கப்படுகின்றது, பல்லியின் குரல், நற்சொல்லாக ஏற்கப்பட்டதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. பிராணிகளில் பல்லி இனத்திற்கே முதன்முதலில் வாயினால் சப்தம் செய்யும் சக்தி உண்டானதாலும் நிலத்தில்

வாழும் வல்லமை பெற்ற முதல் பிராணி என்பதாலும் இதனைப் படைப்புகள் கர்த்தாவாகக் கருதி வழிபடுகின்றனர். வீடுகளிலும் நடுகற்களிலும் எழுப்பும் ஓசைகள் நன்னிமித்தமாக கொள்ளப்பட்டன. பல்லி விழும் இடங்கள், திசைகள், கிழமைகள் போன்றவற்றுக்குப் பலன்கள் நிச்சயித்துக் கூறுகின்ற அளவுக்கு கௌளி சாஸ்திரம் அமைந்துள்ளது.

விரிச்சி சொல்கின்றவர்களை, முதுவாய்ப் பெண்டிர், முதுவாய் வேலன், கணியன் என்று அழைத்ததைப் போன்று, பல்லியும் முதுவாய்ப்பல்லி, கணிவாய்ப் பல்லி, வாய்மாண்ட பல்லி என்றெல்லாம் அழைக்கப்பட்டுள்ளது.

பதுக்கைத் தாய செதுக்கை நீழற்
... ... ... ...
உறுவது கூறும் சிறுசெந் நாவின்
மணியோர்த்தன்ன தெண்குரற்
கணிவாய்ப் பல்லிய காடிறந் தோரே (அகம்.15111 -15)

இரைநசைஇக் கிடந்த முதுவாய்ப் பல்லி (அகம்.38714 -16)

என்பனவற்றால் இதனை அறியலாம்.

நிமித்தப் பொருளாக கருதப்படுவதோடு, அது ஒலிக்கும் திசையைத் தொழுத செய்தியையும் அகநானூறு பதிவு செய்துள்ளது.

ஓங்கிய நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுழகு மாலை நின்றோ ளெய்தி (அகம்.918-20)

பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி (அகம்.289-15)

மேற்கண்ட சான்றுகள் சங்க கால மக்கள், பல்லியை வழிபட்டனர் என்பதைக் காட்டுகின்றன. இன்றும் இவ்வழக்கம் உள்ளது. காஞ்சிபுரத்திலுள்ள வரதராஜ பெருமாள் கோயிலில் 'பல்லி' பக்தர்களால் வழிபடப்படுகின்றது.

## காக்கை

பறவை இனங்களில் நிமித்தப் பறவையாக விளங்குவது காக்கை ஆகும். பின் நிகழ்வை முன் காட்டும் ஆற்றல் உடையவை பறவைகள் என்பதற்கு இது சிறந்த சான்றாக கருதப்படுகிறது. மானிடவியலார் 'ஷாமான்கள்' என்று இத்தகைய மனிதர்களைக் குறிக்கின்றனர். 'முன்னறிதல்' என்று உளவியலார் குறிக்கின்றனர். காகம் கரைவது விருந்தினர் வருகையை உணர்த்துவதாக இன்றுவரை நம்பப்படுகிறது. இதனை சங்க இலக்கியங்களில் குறுந்தொகை (210), ஐங்குறுநூறு (391) ஆகியவற்றில் காணமுடிகிறது. காக்கைக்கு சோறு படைக்கும் வழக்கமும் இருந்து. இறந்தவர்கள் காக்கை உருவில் வந்து, பிண்டச் சோற்றை உண்பர் என்ற நம்பிக்கையிருந்தது. அதன் அடிப்படையில் அமாவாசையன்று படைக்கப்படும் உணவின் ஒரு பகுதியை, படையலிட்டு முடித்தவுடன் எடுத்துச் சென்று காக்கையை அழைத்து உணவு படைக்கப்படுகிறது. அது உண்டால் இறந்தவரே வந்து உண்டார் என்று நம்பப்படுகிறது. இன்றும் இவ்வழிபாடு உள்ளது. காக்கைக்கு பலி கொடுக்கும் இவ்வழக்கம் முன்னோர் வழிபாட்டுடன் தொடர்புடையதாக வணங்கப்படுகிறது. இறந்தவர்க்கு, இடுகாட்டில் இரண்டாம் நாள் வைத்துப் படைக்கப்படும் பிண்ட உணவும், 15 நாள் வரை படைக்கப்படும் உணவும் காக்கை உண்ணும் வரை காத்திருந்த பிறகே, கொள்ளியிட்டவர் உண்கிறார். கேரளத்தில் அண்டங்காக்கையும் தமிழகத்தில் ஊர்க்காக்கையும் முதலில் உண்ண வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இவற்றுக்குத் தனியே கோயில்கள் இல்லை. சனி பகவானின் வாகனமாகவும் கருதப்படுகிறது. இதற்கு அவரவர் வீடுகளிலும் இடுகாடுகளிலும் பலியிடப்படுகிறது.

## தொகுப்புரை

சங்ககாலச் சமுதாயம் இனக்குழுச் சமுதாயமாக இருந்தது. இயற்கையோடு இணைந்த வாழ்வை மேற்கொண்டது. இயற்கையின் ஒவ்வொரு கூறிலும் இறைவனைக் கண்டது.

நிலம், நீர், காற்று, விசும்பு, தீ ஆகிய ஐம்பெரும் பூதங்கள் வணங்கப்பட்டன. அவற்றுள் நீர் வழிபாடே முதன்மைப் பெற்றிருந்தது.

ஞாயிறு, திங்கள் வழிபாடு மிக்கிருந்தது. செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி போன்ற கிரகங்களைப் பற்றிய குறிப்புகள் தமிழகத்தில் நாக

வழிபாடு மேற்கொள்ளப்பட்டதைத் தெரிவிக்கிறது. எனவே சங்க காலத்தில் நவகிரக வழிபாடு இருந்துள்ளது என்பது தெளிவாகிறது.

நாள் மீன்களான ஓணம், ஆதிரை, அறுமீன், வடமீன் போன்றவை தெய்வங்களோடு தொடர்புபடுத்தப்பட்டு வணங்கப்பட்டுள்ளது.

தொன்மையான வழிபாடுகளில் குறிப்பிடத்தக்கது மர வழிபாடு. ஆல், அரசு, அசோகம், வேம்பு, கடம்பு, வன்னி போன்ற மரங்கள் தெய்வங்கள் உறைவதாக நம்பப்படுகின்றன. அவற்றுக்கு பலியிட்டு வழிபட்டுள்ளனர். முரவழிபாடே பின்னாளில் தலவிருட்ச வழிபாடாக ஏற்றம் பெற்றுள்ளது. மரங்கள் பொது மன்றங்களாகவும் கோயில்களாகவும் நீதிமன்றங்களாகவும் செயல்பட்டன.

தாமரை மலரும் துளப மாலையும் தெய்வம் உறைவனவாக கருதப்படுகின்றன.

மலைகளும் தெய்வத்தின் அம்சமாக கருதப்படுகின்றன. சேர்யோன், திருமால் உறையுமிடங்களாக நம்பி, தொழப்பட்டன.

இவைத் தவிர, உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியிலேயேயும் இறைவனைக் கண்டுள்ளனர். நீரில் வாழும் மச்சம், நீரிலும் நிலத்திலும் வாழும் கூர்மம், வராகம் போன்றவற்றைத் திருமாலின் அவதாரங்களாகக் கருதி வழிபட்டுள்ளனர்.

ஊர்வனவற்றுள் முதலாவதாக தோன்றிய பல்லியைப் பழந்தமிழர் வணங்கியுள்ளனர். பறக்கின்ற இனங்களில் காகம், சனி பகவானோடும் கருடன் திருமாலோடும் தொடப்புபடுத்தப்பட்டு வணங்கப்படுகிறது.

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும் (தொல். அகம். 5)

என்று தொல்காப்பியரால் சுட்டப்படுகின்ற திணைநிலைத் தெய்வங்களான மாயோன், சேயோன், இந்திரன், வருணன் பற்றிய செய்திகள், அவற்றின் வடிவங்கள், தெய்வங்களுக்கான குடும்ப உறவுகள், அவர்களுக்கான கோயில்கள், 'வழிபாடுகள்' என்ற பிரிவுகளின்கீழ் ஆராயப்படுகின்றன. மாயோன், சேயோன் வடிவங்களில் கொடியும் ஊர்தியும், அவர்களின் 'மாலையும் ஆயுதங்களும்,' 'நிறம்' போன்றவை விளக்கப்படுகின்றன. திணைநிலைத் தெய்வங்கள் குறித்து சங்க இலக்கியங்களில் கிடைக்கும் தகவல்கள் அவர்களுக்கானத் தொன்மங்கள், விழாக்கள் போன்றவையும் இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

சங்க இலக்கியங்கள் தமிழர்களின் தரத்தைப் பறைசாற்றுவன. அவை சமய சார்பற்றவை என்றாலும் சமயங்களை மறக்காதவை. சங்ககாலப் புலவர்களின் நோக்கம் சமயக் கருத்துக்களைப் பரப்புவதன்று. மனித வாழ்வைப் பிரதிபலிக்கச் செய்வது. தெய்வங்கள் வாழ்க்கையின் ஒரு பகுதியாக இருந்ததே அன்றி, சமயமே வாழ்க்கையாக வலிமை பெறுமளவுக்கு விளங்கவில்லை.

மக்கள் வாழ்வும் திணைகளை அடிப்படையாக கொண்டதாகவும் நிலங்கள் சார்ந்த வாழ்வாகவும் இருந்தது குறிப்பிடத்தக்கது. சங்கத் தமிழர் தம் வாழ்வை, பொருளை அடிப்படையாகக் கொண்டு, அகமென்றும் புறமென்றும் பகுத்தனர். வாழ்வோடு தொடர்புடைய பொருள்களை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்று மூன்றாக வகுத்தனர். முதற்பொருள் என்பது நிலமும் பொழுதும் சார்ந்ததாக இருந்தது..

கருப்பொருள் உருவாக அடிப்படைக் காரணமாக அமைந்தது முதற்பொருளே. தொல்காப்பியர் காலத்தில் கடவுள் முழுமுதற் பொருளாகக் கருதப்படவில்லை. முதற்பொருளோடு தொடர்புடையதாகவே உள்ளது. தெய்வம் தனித்தன்மை உடையதாக இல்லாமல், பறவை, மரம், விலங்கு, யாழ், பறை போன்றவற்றோடு இணைத்தே சொல்லப்படுகின்றது. உரிப்பொருள் என்பது உணர்வு சார்ந்ததாக அமைந்துள்ளது.

ஒவ்வொரு நிலத்தின் அமைப்பு, வளம், வாழ்வாதாரம், வாழ்க்கைமுறை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அவ்வவ் நிலத்தின் ஒழுக்கங்கள் வரையறை செய்யப்பட்டுள்ளன.

பழந்தமிழர் கடைபிடித்த விழுமியங்களில் ஒன்று 'மக்கள் நுதலிய அகனைந்திணையும்' பெயர் சுட்டா மரபில் அமைக்கப்பட்டவை என்பதாகும். மக்கள் பெயரைச் சுட்டா மரபு கடைபிடிக்கப்பட்டபோதும் நிலம் சார்ந்த தெய்வங்களின் பெயர்களைச் சுட்டுகின்ற மரபு இருந்துள்ளதைத் தொல்காப்பியம் பதிவு செய்துள்ளது.

தொன்மம் என்பதன் விளக்கம், அதன் வகைகள், திருமால், வாமனனாக, கண்ணனாக இராமனாக, வராகமாக, அன்னமாக, பரசுராமராக, கீழிரங்கி வந்ததாகிய தொன்மங்கள், முருகன் குருகுமலையைப் பெயர்த்தது, சூரபத்மனை அழித்தது. வள்ளி, தெய்வயானையையும் மணந்தது, அயனைச் சபித்தது போன்ற முருகன் குறித்த தொன்மங்கள், இந்திரன் சாபம் பெற்ற தொன்மம் போன்றவையும், இத்தெய்வங்களுக்கான கோயில்கள் அவற்றுக்கு எடுக்கப்பட்ட திருவிழாக்கள் வழிபாட்டுமுறைகள் போன்றவற்றையும் இவ்வியல் விளக்குகிறது.

சங்க இலக்கியங்களில் காணப்படும் தொன்மங்களையும் அதன் அடிப்படையில் எழுந்த திருவிழாக்களையும் தெய்வங்களை வழிபட்ட முறைகளையும் தெய்வம் சார்ந்த நம்பிக்கைகளையும் சடங்குகளையும் விளக்குகிறது. தொன்மம் என்ற சொல்லுக்குத் தொல்காப்பியர் 'பழமை' என்று பொருள் வகுத்துள்ளார். தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே" என்கிறது தொல்காப்பியம். 'Myth' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையாக இன்று 'தொன்மம்' என்ற சொல் வழங்கப்படுகின்றது. 'தொன்மவியல்' என்பது 'Mythology' என்ற சொல்லுக்கு இணையாக வழங்கப்படுகிறது.

தொன்மங்கள் இலக்கிய வளர்ச்சிக்கு மட்டுமன்றி, ஒரு சமுதாயத்தின் பண்பாடுகளையும் சமய நம்பிக்கைகளையும் மக்களின் அறிவாற்றலையும் விளக்குகின்றன. தொன்மங்கள் தனிக் கதைகளாகவோ, அக்கதைகளின் ஒரு கூறாகவோ இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. வாய்மொழி மரபில் இன்றும் ஏராளமான தொன்மங்கள் உள்ளன.

தொன்மங்கள் உயர்ந்த மனிதர்களைக் கடவுளாக்குகின்றன. தெய்வங்களைப் பேராற்றல் மிக்கனவாகக் காட்டுகின்றன. நம்பகத் தன்மையை (ஆன்மீகவாதிகளுக்கு) ஏற்படுத்துகின்றன. மொழிக் கலப்பினாலும் பண்பாட்டுக் கலப்பினாலும் தமிழ்மரபு தொன்மங்களில் வடமொழி மரபும் வடமொழி மரபுத் தொன்மங்களும் விரவியிருக்கின்றன. தமிழ்மரபிற்கே உரிய சில தொன்மங்களையும் சங்க இலக்கியங்களில் காண முடிகின்றது. தொன்மம் உலகின் பெரும்பாலான மொழிகளில் உள்ளன. அவை தெய்வங்கள் குறித்தனவாக அமைகின்றன. சமயக் காழ்ப்புணர்ச்சி இல்லாத சங்க காலத்தில் திருமால், முருகன், சிவன், இந்திரன், சந்திரன், பிரமன், குறித்து பல தொன்மங்கள் வழக்கிலிருந்துள்ளன என்பது சங்க இலக்கியங்களைக் காணும் போது புலப்படுகின்றது.

தொன்மங்கள் குறித்து ஆய்வுசெய்த கதிர் மகாதேவன் அவற்றை நான்கு வகையாகப் பாகுபடுத்துகிறார்.

1. மெய்ப்பொருள் இயக்கம், 2. பரவெளி தரும் உருவளவை, 3. சமூகவியல் சார்பு தொன்மம், 4. அறிவுகொளுத்தும் தொன்மம்.

இத்தொன்மங்கள் வரலாற்றுக்கு முற்பட்டவையாகவும் உள்ளன. உலகத் தோற்றம், வழிபடுதெய்வம், திருவிழாக்கள், நம்பிக்கைகள் குறித்து இவை எழுந்துள்ளன. தெய்வங்களின் தோற்றம், ஆயுதம், வாகனம், மறுமை, ஊழ் பற்றிய சிந்தனைகள் போன்ற அனைத்தும் தொன்மங்களாகவே உள்ளன.

சங்க இலக்கியங்களில் புராணக்கதைகளைக் கதைகளாகவே கூறுதல், கதைக் குறிப்பை மட்டும் கூறுதல், உவமைகளாகப் பயன்படுத்துதல் என்ற நிலைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளன. மூன்று நிலைகளில் தொன்மங்கள் இந்நில உலகில் வளர்ந்துள்ளன. அவை,

1. இயற்கை என்றும் தொன்மம் என்றும் வேறுபாடின்றி வருணனையாய் அமையும் திறம்.

2. தொன்மம் கதைகளைக் காப்பியங்களாகவும் புராணங்களாகவும் சமயப் படிமக் கருத்தைப் பரப்பும் கருவூலங்களாகவும் கூறும் திறம்.

3. தொன்மங்களை இலக்கிய விளக்க உத்திகளாகப் பயன்படுத்தும் வித்தகமும்" (கதிர் மகாதேவன், 2008, ப.54)

இம்மூன்று நிலைகளில் தொன்மங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**திணை நிலைத் தெய்வங்கள்**

முல்லைக்குரிய தெய்வம் மாயோன் என்றும், குறிஞ்சிக்குரிய தெய்வம் சேயோன் என்றும், மருதத்திற்குரிய தெய்வம் வேந்தன் என்றும் நெய்தலுக்குரிய தெய்வம் வருணன் என்றும் தொல்காப்பியரால் சுட்டப்பட்டுள்ளது.

இத்திணைநிலைத் தெய்வங்கள் தவிர பிற தெய்வங்களையும் அம்மக்கள் வழிபட்டுள்ளனர். சங்க இலக்கியப் பாடல்களும் திணைகளை மையமிட்டே அமைக்கப்பட்டுள்ளன. தனிப்பாடல்களாயிருந்து தொகுக்கப் பட்ட இலக்கியங்கள் காதலையும் வீரத்தையும் போற்றியதால் தெய்வங்களைப் பற்றிய குறிப்புகள், தொன்மங்கள், தெய்வங்கள் சார்ந்த விழாக்கள் பற்றியவை குறிப்புகளாகவே உள்ளன. பரிபாடல், செவ்வேளையும் திருமாலையும் முன்னிலைப்படுத்திப் பாடுகின்றது. திருமுருகாற்றுப்படை, இலக்கிய பாடுபொருள் வரலாற்றில் புதுமையைப் புனைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. பொருள் வேண்டி ஆற்றுப்படுத்தும் நெறியிலிருந்து மாறி, அருள் வேண்டி செல்வ வளம் பெற ஆற்றுப்படுத்தும் புது நெறியைப் புகுத்தியுள்ளது திருமுருகாற்றுப்படை.

**1. மாயோன்**

மாயோன் மேய காடுறை உலகமும் (தொல். அகம். 5)

என்பதால் காடுறை உலகமாகிய முல்லைத் திணைக்கும் நிலத்திற்குமுரிய கடவுளாக 'மாயோன்' திகழ்ந்ததைத் தொல்காப்பியம் கூறுகிறது. சங்க நூல்களில் திருமால், மால், மாயோன், நெடியோன் போன்ற பெயர்களால் இத்தெய்வம் சுட்டப்படுகின்றது.

தெய்வங்களின் வடிவங்களும் குணங்களும் அவை சார்ந்த சமூகத்தின் தேவைகளையெல்லாம் ஒட்டி அமைந்தவைதான். கால்நடை வளர்ப்போரின் தெய்வம் மாடுகள், கன்றுகள் சூழ்ந்தபடி கையில் புல்லாங்குழலுடன் தான் இருக்க முடியும். உழவர்களின் தெய்வம் மழை தருகின்ற இந்திரனாக அல்லது

கையிலே கலப்பையை ஏந்திய பலராமனாகத்தான் இருக்கமுடியும். சுருக்கமாகச் சொன்னால் ஒரு குறிப்பிட்ட இனக்குழு என்ன வகையான உற்பத்தி முறையினைச் சார்ந்திருக்கிறதோ அதைப் பொறுத்து அத்தெய்வங்களின் வடிவங்களும் குணங்களும் அத்தெய்வத்தைப் பற்றிய கதைகளும் அமையும்." (தொ. பரமசிவன், 2006, ப.4).

அவ்வாறே காடும் காட்டைச் சார்ந்த இடங்களில் ஆநிரை மேய்த்தலில் ஈடுபட்ட ஆயரிடையே முகிழ்த்த மாயோனாகிய திருமால் வழிபாடு தமிழ் வேத நெறிகளின் கலப்பால் பக்தி இயக்கக் காலத்தில் முழுமுதற் கடவுளாக ஏற்றம் பெற்றது.

பகைவரிடமிருந்து காக்கும் மாயோன், பகைவரைத் தாக்க வீரமளிக்கும் சேயோன்' எனப் போர் வாழ்க்கைக்கு இரு கடவுள்கள் வான்வழி அச்சம் நீக்க ஓர் இந்திரன் நீர்வழி அச்சம் நீக்க ஒரு வருணன் என பொதுவாழ்க்கைக்கு இரு கடவுள்கள். இங்ஙனம் நான்கு நிலத்தெய்வங்களும் அச்சத்தினின்று காக்கவே தொடக்கத்தில் தோன்றியிருக்க வேண்டும்" (ஆ. இராமகிருஷ்ணன், 1996, ப.99).

தம்மையும் தம் உடைமைகளையும் காப்பதற்காக ஆயர்களால் வணங்கப்பட்ட மாயோனுக்கும் அணிகள், உடைமைகள், ஆயுதங்கள் போன்றவற்றைப் புனைந்துரைத்து தெய்வங்களாக வழிபட்டனர். இவை பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் உள்ளன.

'மை' என்ற வேர்ச்சொல்லிலிருந்து பிறந்ததே மாய் மாயோன் ஆகும். மை என்ற சொல்லுக்குக் 'கருமை நிறம்' என்ற பொருள். கரிய நிறமுடையவன் என்ற பொருளிலும், மயக்கத்தைத் தரக் கூடியவன், மாயங்களைச் செய்யக் கூடியவன் என்ற பொருள்களிலும் மாயோன் என்று வழங்கப்பட்டுள்ளன. மை, மால், மாகம் போன்ற சொற்கள் 'கருமை' நிறத்தையே குறிக்கின்றன. கிரேக்கம் (மைத்தோள்), வடமொழி (மைதுனம்), ஆங்கிலம் (மைத் (அ) மித்) ஆகிய மொழிகளிலும் 'கருமை' யையே குறிப்பதாக ம. சோ. விக்டர் கூறுகிறார் (தொல்காப்பியச் சிந்தனைகள், 2007, ப.101).

மாடு என்ற சொல்லிற்கு 'செல்வம்' என்ற பொருள் வழங்கப்பட்டது முல்லை நிலத்தில்தான். இன்றும் கிராமப்புறங்களில் அதிக எண்ணிக்கையில்

கால்நடைகள் வைத்திருப்பவர்களைச் 'செல்வந்தர்களாக' கருதும் நோக்கு இருப்பது எண்ணத்தக்கது.

நச்சினார்க்கினியர் முல்லை நிலத்துக் கோவலர் பல்லா பயன் தருவதற்கு மாயோன் ஆகுதி பயக்கும் ஆ பல காக்கவெனக் குரவை தழீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு அவன் வெளிப்படும்" என்கிறார்.

## 1.1 வடிவங்கள்

நெடியவன் என்ற சொல் திருமாலுக்கும் முக்கண்ணனுக்கும் பொதுவாகவே பல இடங்களில் சுட்டப்படுகின்றது. பிற்காலத்தே தோன்றிய சைவ, வைணவ மரபுகளுக்கான வித்தாக சங்க இலக்கியங்கள் அமைந்துள்ளன. குறிப்பாகப் பரிபாடலில் வைணவக் கொள்கைகளாக, இன்று நடைமுறையிலிருக்கும் கருத்துக்களைக் காணமுடிகிறது.

இறைவனுக்குரிய வடிவங்கள் ஐந்து என்பது வைணவர் கொள்கை.

1. பரத்வம் விண்ணாட்டுநிலை (வைகுந்தத்தில் இருப்பது).

2. வியூகம் அணிவகுப்பு நிலை (பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பது).

3. விபவம் பிறப்பு நிலை (தேவர், மனிதர், விலங்கு, தாவரம் முதலிய உருவத்தைத் தன் விருப்பினால் ஏற்றுக்கொண்டு வருவது.

4. அந்தரீயாமித்வம் உள்ளுறை நிலை (பொருள்தோறும் மறைந்து நிறைந்திருத்தல்)

5. அர்ச்சை வழிபடுநிலை (அடியவர் அமைத்த வடிவத்தையே தனக்குத் திருவுருவாகக் கொண்டிருப்பது)

பெருமானை வழிபடுவோர்க்குத் துறக்கம் அல்லது வைகுண்டம் உறுதி என்று பரிபாடல் எடுத்துரைக்கின்றது. இது விண்ணாட்டு நிலையாகும்.

தொழுவோர்க்கு உரிது அமர் துறக்கமும் உரிமை
நன்கு உடைத்து" (பரி.13:12-13)

திருமால் திருப்பாற்கடலில் ஆதிசேடனின் மீது பள்ளிகொண்டிருக்கும் செய்தியும் கூறப்பட்டுள்ளது. இது அணிவகுப்பு நிலையாகும்.

**தன்உரு உறழும் பாற்கடல் நாப்பண்**
**மின்அவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த**
**கவைநா அருந்தலைக் காண்பின் சேக்கைத்**
**துளபம் சூடிய அறிதுயி லோனும்** **(பரி.13:26-29)**

பாற்கடலில் நான்கு வடிவங்களில் படுத்திருக்கிறான் என்பதும் அந்நிலையில் வாசுதேவன், சங்கருணன், அரத்யும்நன், அநிருத்தன் என்ற பெயர்களில் அழைக்கப்படுவான் என்றும் வைணவர் கூறுவர்.

பரிபாடலும்,

**செங்கண் காரி கருங்கண் வெள்ளை**
**பொன்கண் பச்சை, பைங்கண் மாஅல்** **(பரி.3:81-82)**

என்ற நான்கு பெயர்களைச் சுட்டுகின்றது.

திருமால் தன் விருப்பம் போல் எடுத்த பிறவிகள். கீழிறங்கி வருதலை அவதாரம் என்பர். பத்து அவதாரங்கள் சிறப்புற்றிருந்தபடியால் 'தசாவதாரம்' எனப்படுகிறது. வைணவ இலக்கியங்கள் காட்டும் அவதாரங்களில் வராகம், ஆளரி, பலராமன், கூர்மம், கிருஷ்ணன் ஆகிய அவதாரங்களைப் பற்றிய செய்திகளைப் பரிபாடல் சுட்டுகிறது.

வாமன அவதாரத்தை முல்லைப்பாட்டு பெரும்பாணாற்றுப்படை, கலித்தொகை ஆகிய நூல்களில் காணமுடிகிறது. பரசுராம அவதாரம் அகநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**திகழ்ஒளி முந்நீர் கடைந்த அக்கால் வெற்புத்**
**திகழ்புஎழ வாங்கித் தம்சீர்ச் சிரத்து ஏற்றி**
**மகரமறி கடல்வைத்து நிறுத்து** **(பரி. திரட்டு)**

என கூர்ம அவதாரமும்,

**கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய ஊழி** **(பரி.2:16-17)**

என்று வராக அவதாரமும்,

தடிதடி பலபட வகிர் வாய்த்த உகிரினை (பரி.4:21)

என்று ஆளரி (நரசிம்மம்) அவதாரமும்,

ஞாலம் மூன்று அடித் தாய முதல்வன் (கலி.124:1)

என்று வாமன அவதாரமும்,

மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்
அருங்கடி நெடுந்தூண் போல (அகம்.220:5-8)

என்று பலராமன் அவதாரமும்,

வெல்போர் இராமன் (அகம்.70:13-15)

என்று இராம அவதாரமும்,

நீயே வளையொடு புரையும் வாலியோற் கவன்
இளையவன் என்போர்க்கு இளையை ஆதலும் (பரி.2:20-21)

என பலராமன் அவதாரமும்,

கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல்
எரிசினம் கொன்றோய் (பரி.3:31-32)

என கிருஷ்ண அவதாரமும் இலக்கியங்களில் குறிக்கப்படுகின்றன.

வாமணன், மீன், இராமன், கல்கி போன்ற அவதாரங்களைப் பற்றிய செய்திகள் பரிபாடலில் இல்லை.

இறைவன் எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருப்பவன் என்பது உள்ளுறை நிலையாகும். முத்தொழிலும் செய்பவன் என்பதும் பரிபாடலில் விளக்கப்பட்டுள்ளது.

தீயினுள் தெறல்நீ பூவினுள் நாற்றம் நீ
.... .... .... ....,
அனைத்தும் நீ அனைத்தின் உட்பொருளும் நீ' (பரி.63-68)

திருமாலின் திருவுருவமாக அடியவர் நினைக்கும். வண்ணமும் திருக்கோலக் காட்சியும் வழிபடு நிலையாகும்.

திருமாலிருஞ்சோலையில் பலராமனையும் திருமாலையும் ஒன்றாக வைத்து வழிபட்டனர். ஆனால் இன்று அவர்கள் ஒன்று சேர்ந்த கோலம் அங்கு இல்லை.

இவை தவிர வீடுபேறினை அருளுபவன் திருமாலே என்பதும் இவர்களுடைய நம்பிக்கை. இதனை.

நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம் (பரி. 15:15-16)

என்கிறது பரிபாடல்.

### அ. கொடியும் ஊர்தியும்

திருமாலுக்குரிய கொடி கருடக்கொடி, ஊர்தியும் அதுவே என்பதைச் சங்கப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

செவ்வாய் உவணத்து உணர்கொடியோயே (பரி. 2: 60)

புள்ளணி பொலங் கொடியை ( பரி. 15)

சேவல் ஓங்கு உயர் கொடிச் செல்வ (பரி.13)

ஓங்கு உயர்கொடி சேவலோய் (பரி.3:18)

பொன்னோக்கும் உடையவை
புள்ளின் கொடியவை (பரி.1)

சங்க இலக்கியங்கள் திருமாலைப் பற்றிய செய்திகளை மிகுதியாகத் தருவது பரிபாடல் என்பது குறிப்பிடத்தக்கது. அந்நூல் திருமாலின் பெருமைகள், அவனுடைய ஊர்தி, படைகள், உடைமைகள் குறித்து பல்வேறு தகவல்களை எடுத்துரைக்கிறது.

சேவல் ஓங்குயர் கொடியோயே
சேவல் ஓங்கு உயர் கொடி
நின்னொன்றுயர் கொடி நாஞ்சில்
நின்னொன்றுயர் கொடி யானை
நின் ஒன்றா உயர்கொடி ஒன்று இன்று
விடமுறை அரவின் உடல் உயிர் அருங்குவணம் (பரி.4)

பனைக்கொடி, கலப்பைக்கொடி, யானைக்கொடி போன்ற அனைத்தும் திருமாலின் கொடிகளே என்ற கூறுமிடத்து திருமாலை முதல்வனாக ஆக்கும் முயற்சி தொடங்கியதை அறிய முடிகின்றது. புறநானூறு, இதனைப்

விண்ணுயர் புட்கொடி விறல் வெய்யோனும் (புறம் 56)

என்று கூறுவதை அறியமுடிகிறது.

ஏஎர் வயங்குபூண் அமரரை வெளவிய அமிழ்தின்
பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளினைப்
பயந்தோள் இடுங்கண் களைந்த புள்ளின்
நிவந்து ஓங்கு உயர்கொடிச் சேவலோய் (பரி. 3:15 - 18)

............... கொற்றப்புள்
ஊர்ந்து உலகம் தாவின் அண்ணலே யாயினும் (பழமொழி. 177)

என்ற பாடல் திருமாலின் ஊர்தியும் கருடனே என்பதை உணர்த்துகிறது.

### ஆ. மாலையும் ஆயுதங்களும்

திருமாலுக்குரியது துழாய் மாலை.

கமழ்குரற் றுழாஅய் ( பதி. 4ஆம் பத்து.1)

நக்கலர் துழாஅய் நாறிணர்க் கண்ணியை (பரி. 4: 58)

நேர் கதிர் நிரைத்த நேமியஞ் செல்வன்
போர் அடங்க அகலம் பொருந்திய தார்போல் (அகம். 175)

செருமிகு நேமியான் தார்போல (கலி. 127)

திருமாலின் ஆயுதங்களாக, வில், வாள், சங்கு, சக்கரம், தண்டு குறிக்கப்படுகின்றன. இவ்வாயுதங்களைப் பொன்னால் செய்து தம் குழந்தைகளுக்குக் கட்டினர். இதனால் திருமால் தம் குழந்தைகளைக் காப்பான் என்று நம்பினர்.

முகிழ் நிலாத் திகழ்தரும் பூவாத்திங்கள்
பொன்னுடைத் தாலி என்மகன் ஒன்றி (அகம். 54)

இவ்வாறாக பொன்னாலான ஐம்படைத்தாலியைக் குழந்தைகள் அன்றி, பெரியவரும் அணிந்திருந்தனர். தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியனைக் கண்ட இடைக் குன்னூர் கிழார் பாடியுள்ளார்.

நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்கவலன் கண்ணிதார் பூண்டு
தாலி களைந்தன்று மிலனே (புறம். 77)

வலது கரத்தில் சக்கரத்தையும் இடது கையில் சங்கையும் உடையவர் திருமால் என்பதும் அவை சூரிய, சந்திரனைப் போன்றிருந்தன என்று பரிபாடல் (13:79) கூறுகிறது. ஆழ்வார்கள் காலத்து சக்கரத்திற்கு 'சுதர்சனம்' என்றும் சங்கினைப் 'பாஞ்சசன்னியம்' என்றும் பெயரிட்டு வழங்கும் வழக்கம் ஏற்பட்டது. சங்கு, சக்கரங்களின் திறத்தைப் பரிபாடல் சிறப்பாகக் கூறுகிறது. (பரி2:3651)

நேர்எதிர் நிரைத்த நேமியஞ் செல்வன் (அகம். 175)

செருமிகு நேமியான் (கலி. 127)

பொலம்புனைபுகழ் நேமி (கலி. 104: 9)

நனந்தலை யுலகம் வலைஇ நேமியொடு (முல்லை. 1)

பொன்னணி நேமி வலங்கொண்டு (பரி. 1)

நோனார் உயிரொடு முரணிய நேமியை (பரி. 4)

இருவேறு மண்டிலத் திலக்கம் போல
நேமியும் வளையும் ஏந்திய கையால் (பரி. 13)

## இ. நிறம்

திருமால் கரிய நிறமுடையவன்.

மண்ணுறு திருமணி புரையு மேனி (புறம். 56)

கருத்திறல் அஞ்சன உருவன்' (புறம். 174)

மணிவரையன்ன மாயோன் (புறம். 229)

செங்கட் காரி (பரி. 3)

கார் பூவைமலர் கடல் இருள்மணி அவை (பரி. 13)

நீனிற உருவின் நெடியோன் (பெரும்பாண். 402)

கார், மலர்ப்பூவை, கடலை, இருள், மணி
அவை ஐந்தும் உறழும் அணிகிளர் மேனியை (பரி. 13)

சிந்துவெளி முத்திரையில் காணப்படும் 'இருளன்' கரிய நிறம், ஆயர்களுடன் உள்ள தொடர்பு, இளமையானவன் என்றெல்லாம் கூறப்படுவதால் இவனே கிருஷ்ணன். இவனை வழிபட்டவர்களையே பிற்கால ரிக்வேதம் கிருஷ்ணர்கள் என்று குறிப்பிட்டிருக்க வேண்டும். அவ்வேதம் 50,000 கிருஷ்ணர்கள் இந்திரனால் கொல்லப்பட்டனர் (ரிக்வேதம், சூக்தம் 96, 13 15) என்று கூறுகிறது. இருளன் = கிருஷ்ணன் இரண்டும் ஒருபொருள் தரும் இருமொழிச் சொற்கள். இவனை, ஆயபா, பாலா (237) என்று முத்திரை குறிப்பிடுவது இதை உறுதி செய்கிறது. மேலும் சணாவை ஆரலன் என்று குறிப்பிடுகிறது ஒரு முத்திரை. சணா கார்த்திகை விண்மீனுடன் தொடர்புபடுத்திச் கூறப்படுவதால் இன்று நாம் காணும் முருகன், திருமால் இருவரும் கலந்த ஒரு தெய்வமாக சணா இருளன் விளங்கியிருக்க வேண்டும்" (பூரண சந்திர ஜீவா, ப.81) (சணா சிந்துவெளி முத்திரை தெய்வம். புறநானூற்றில் (201, 202) இடம்பெறும் இருங்கோவேள் என்ற அரசனின் பெயரையும் இருங்கோவேள் மூதாதையர் துவரையை (துவாரகையை) ஆண்டுள்ள செய்தியையும் 'புலிகடிமால்' என்ற தொடரையும் சிந்துவெளி முத்திரையையும் தொடர்புபடுத்தி, இருங்கோவேளின் முன்னோர் இருளனைத் (கிருஷ்ணனை) தங்கள் குலதெய்வமாக முன்னோனாகக் கொண்டிருந்தனர் என்றும்

இருங்கோவேளின் முன்னோர் துவாரகையிலிருந்து இடம் பெயர்ந்து வந்தவர்கள் என்றும் சிந்துவெளி மக்களுடன் தொடர்புடையவர்கள் என்றும் நிறுவுகிறார் பூரண சந்திர ஜீவா. (சிந்துவெளியில் தமிழ்மொழி, புதிய ஆய்வுகள்)

எனவே சங்ககால சேரமன்னனான இருங்கோவேள் பரம்பரையினர் இருளனாகிய மாயோனை வழிபட்டனர் என்பது தெளிவாகின்றது.

## 1.2 உறவுகள்

வெவ்வேறு ஆண், பெண் தெய்வங்களைக் குடும்பமாக இணைத்து வழிபட்டதையும் சங்க இலக்கியங்கள் உறுதிசெய்கின்றன.

ஆண் தெய்வங்களுக்கு இணையாக பெண் தெய்வங்களை இணைத்து, கடவுளரையும் குடும்ப உறவுடையவர்களாக ஆக்கும் போக்கை பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, பெரும்பாணாற்றுப்படை போன்ற இலக்கியங்களில் காணமுடிகிறது.

திருமகள் உறையும் மார்பினன் (பதி. 4 ஆம் பத்து)

மாயவன் மார்பில் திருப்போர் அவள்சேர (கலி. 145)

திருமறு மார்பு (பெரும்பாண். 29)

திருநெமிர்அகலம் (பதி. 31:7)

செய்யோன் சேர்ந்த மார்பு (பரி. 2: 31)

மாவுடைய மலர் மார்பு (பரி. 1: 3-8)

இதனால் திருமாலின் மனைவியாகத் திருமகள் இணைக்கப்பட்டது தெரிகிறது.

திருமாலின் மகனாகப் பிரமன் இணைக்கப்படுகிறார்.

நீணிற உருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டில் காண்வரத் தோன்றி (பெரும்பாண் 402-404)

இதனால் பிரமனாகிய நான்முகன் திருமாலின் கொப்பூழில் தோன்றியவன் என்பது விளக்கப்படுகிறது.

இவனும் திருமாலின் மகனாகவே இணைக்கப்பட்டுள்ளான். (கலி. 140) காமனின் மனைவி ரதி (பரி.19) என்பதையும் பரிபாடல் விளக்குகிறது. காமனின் தம்பியாக சாமன் இணைக்கப்படுகிறான். (கலி.26:34, 94:3334)

## 1.3 கோயில்கள்

திருமால் உறங்குவது பாம்பணையாகிய படுக்கையில் என்பதையும் காஞ்சிபுரத்திலுள்ள திருவெஃகாவில் இக்காட்சியைத் தருபவன் என்பதையும் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

……… நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறு படிந்தாங்கும்
பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன் ஆங்கணி (பெரும்பாண்372-374)

பிற்காலத்தில் இத்தலம் 108 வைணவத் திருப்பதிகளுள் ஒன்றாகச் சேர்க்கப்பட்டுள்ளது. 'கச்சி' என்றழைக்கப்படும் காஞ்சியின் பெருமையைக் கூறும் யாப்பருங்கலவிருத்தியில் 363 ஆம் பாடல் திருமாலின் கிடந்த கோலத்தைச் சுட்டுகிறது.

ஆடவர்கள் எவ்வாறகன்றெழிவார் வெஃகாவும்
பாடகமூ ரகமும் பஞ்சரமா நீடிய மால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மன்றார் மதிட் கச்சி மாண்பு

பரிபாடலில் ஆதிசேடனாகிய ஆயிரம் தலைகளையுடைய பாம்பணையின் மேல் திருபாற்கடலில் துயில்கின்றவன் திருமால் என்று கடலில் துயில்பவனாக காட்டுகிறது.

தன்உரு உறமும் பாற்கடல் நாப்பண்
மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த
கவை நா அருந்தலைக் காண்பின் சேக்கைத் (பரி. 13)

## 1.4 மாயோன் வழிபாடு

முல்லைநில மக்கள் மாயோனை வழிபட்ட முறையினைப் பதிற்றுப்பத்து கூறுகிறது.

> வண்டூச பொலிந்தார்த் திருஞெம ரகலத்துக்
> கண்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅய்
> அலங்கற் செல்வன் சேவடி பரவி
> நெஞ்சுமலி யுவகையர் துஞ்சுபதிப் பெயர

ஆடகமாடம் என்பது திருவனந்தபுரம் என்ற அரும்பதவுரையாசிரியர் குறிப்பினைக் கருத்தில் கொண்டு அலங்கற் செல்வன் என்பது திருவனந்தபுரத்துத் திருமாலையே குறிக்கும் என்ற உ.வே.சா கூறுகிறார். (உ.வே.சா, 1994, பக். 74) திருமாலை மக்கள் எவ்வாறு வழிபட்டனர் என்பதையும் திருமாலுக்குரிய மாலை 'துழாய்' மாலை என்பதும் பதிற்றுப்பத்தில் சுட்டப்பட்டுள்ளது.

1. மக்கள் தம் கைகளைத் தலைமேல் ஏந்தி தம் குறைகளை எடுத்துக்கூறி வேண்டினர். அந்த ஆரவாரம் அவ்விடத்திலே மிகுந்திருந்தது. கோயிலில் மணியை ஒலிப்பவர் வடிமணி எறியுநர் எனப்பட்டனர். அவர்கள் தீர்த்தமாடுவதற்கு இது முகூர்த்தம்மென்று அறிந்து வருவதற் பொருட்டு அம்மணியை எறிந்து ஆரவாரித்தனர்.

2. மக்கள் வரம் வேண்டி உண்ணா நோன்பிருந்து வழிபட்டனர். குளிர்ந்த பனித்துறைகளில் நீராடிப் பட்டினி கிடந்து வழிபட்டனர். உண்ணாப் பைந்நிலம் என்பதற்கு உ.வே.சா. பட்டினி கிடக்கும் மக்களின் தொகுதி. பைந்நலம் பந்நிலமென்றும் வழங்கும் என்ற பொருள் கூறுகிறார். (பதிற்றுப்பத்து. 1994, பக்.75) முல்லைநில மக்கள் காமனையும் வழிபட்டுள்ளனர்.

கடவுளை வழிபடும் பொருட்டு வேள்வி செய்யப்பட்டது. வேள்வித்தீயின் ஆவுதியும் விருந்தினர் உண்ணவேண்டி எழுந்த மையெழுந்த ஆவுதியும் கமழும் நாற்றமுடைய நாடு என்று பதிற்றுப்பத்து கூறுகிறது. (3ஆம் பத்து 1)

நெய்தல் நில மக்கள் சுறாவின் கொம்பினை நட்டு வழிபாடு செய்ததைப் போன்றே முல்லைநில மக்கள் இல்லுறைத் தெய்வமாக, எருமைக் கொம்பினை

நட்டு வழிபட்டுள்ளனர். குவிந்த மணலைப் பரப்பி, செம்மண் பூசி, கொம்பினை நட்டு வழிபாடு செய்துள்ளனர். இவ்வழக்கு இன்றும் கிராம மக்களிடையே உள்ளது.

தருமணல் தாழப்பெய்து இல்பூவல் ஊட்டி
எருமை பெடையோடு எமர் ஈங்கு ஆயரும்
பெருமணம் எல்லாம் தனித்தே ஒழிய
வரிமணல் முன்துறைச் சிற்றில் புனைந்த (முல்லைக்கலி. 114)

மாயோனுக்குரிய ஓண நாளில் புனிற்றிளம் பெண்டிர் குளிர்ந்த நீரிலே நீராடி, செவ்வழிப் பண்ணை இசைத்து, பூசைக்கு வேண்டிய பல பொருள்களோடு விளக்கினை ஏற்றி பாற்சோறு முதலிய உண்டிகளோடு மெதுவாக நடந்து தெய்வத்தைக் கைகுவித்து தொழுது, தேவராட்டியாலே தம் பரவுக் கடனைச் செலுத்துவர்.

பலவுடன் ஒண்சுடர் விளக்கம் முந்துற
கடுஞ்சூல் மகளிர் கைதொழுது பெருந்தோட்
சாலினி மடுப்ப (மதுரைக்காஞ்சி)

## 1.5 விழாக்கள்

சங்க காலத்தில் மாயோனுக்கென்று திருவிழாக்கள் கொண்டாடப்பட்டுள்ளன. அன்று முதல் இன்று வரை அவை பெருவழக்கிலுள்ளன. அவற்றுள் முதன்மையானது ஓணவிழா ஆகும்.

### அ. ஓணம்

அவுணர்களைக் கொன்ற திருமால் உலகத்தே பிறந்த திருவோணமாகிய நாளில் இவ்விழா கொண்டாடப்பட்டது. அந்நாளில் களிறுகளை ஒன்றோடு ஒன்று போரிடுமாறு செய்தல் வழக்கம்.

கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தர் மாயோன்
மேய ஓண நன்னாள் (ஐங்.590-591)

இப்போர் நிகழ்வதற்கு ஏதுவாக மதுரை நகரில் உயரிய கரை எடுத்திருந்தனர். யானைகள் அவற்றின் மீது ஏறின் சருக்கி விழும்படியும்

பரல்கற்கள் போடப்பட்டிருந்தன. மக்கள் மேட்டு நிலங்களின் மீதோ, குன்றின் மீதோ அமர்ந்து களித்தனர். 'குன்றேறி யானைப்போர் கண்டற்றால்' என்று திருக்குறளும் இதனைப் பதிவுசெய்துள்ளது குறிப்பிடத்தக்கது.

திருமால் பிறந்த நாள் ஓணம் என்பதைப் பெரியாழ்வார் மொழியால் பின்னாளில் உரைக்கப்பட்டது.

நின்ற மராமரம் ஏழும் சாய்த்தோம் பிறந்த திருவோணம்
இன்று நீ நீராடவேண்டும் எம்பிரான் (பெரியாழ்வார்.2)

ஓணவிழாவின்போது போர்மறவர் விளையாட்டுப் போர் நிகழ்த்தினர் (மதுரை.590-595) இவ்விழா ஆவணி மாதம் பௌர்ணமி நாளில் கொண்டாடப்பட்டது. (மதுரை.546:8) இவ்விழாவும் ஏழு நாட்கள் நடைபெற்று உள்ளது. அவுணனாகிய மகாபலியை அடக்கி உலகளந்த திருமாலின் பெருமைகளைச் சொல்லும் இவ்விழா கேரளாவில் இன்றும் ஏழு நாட்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

கேரளாவில் இறுதிநாளில் 'ஆறாட்டு' என்ற விசேடமும் பெருவிருந்தும் அளிக்கப்படுகிறது. கனி வகைகளோடு இன்று 'ஸர்வாதித்தம்' என்று பெருவிருந்து வழங்கி கொண்டாடப்படுகிறது. சங்ககாலத்தில் சைவர், வைணவர், சமணர், பௌத்தர் என அனைவரும் இவ்விழாவில் கலந்துகொண்டனர். (மதுரை.455-87) 'இக்கோயில் இருந்த பகுதி 'இருந்தையூர்' எனப்பட்டது.

### ஆ. தைந்நீராடல்

பக்தி இயக்கக் காலத்தில் பெருமளவு பேசப்பட்ட பாவை நோன்பு தைந்நீராடல் குறித்த செய்திகள் சங்ககாலத்திலேயே இருந்துள்ளன. இத்தைந்நீராடலே திருப்பாவை, திருவெம்பாவை இலக்கியங்கள் தோன்ற அடிப்படையாய் அமைந்தன. கலித்தொகையில் மூன்று தாழிசைகளில் (59) செய்திகள் காணப்படுகின்றன.

தையல் நீராடிய தவந்தலைப் படுவாயோ தாய்
அருகா நின்று தவத்தை நீராடுதல் (பரி.11:9)

ஐங்குறுநூற்றிலும் குறிப்பு உள்ளது.

பரத்தையர் தழுவும் தலைவனுடைய மார்புக்கு இது உவமையாக கூறப்பட்டுள்ளது.

னருவீ னயம்பான் மகளிராடுந்
தைஇத் தண்கயம் போல
பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே (ஐங்.84)

பாவை நோன்பு, தைந்நீராடல் ஆகியன வைணவர்களுக்குரியதாக இன்று வளர்ந்திருப்பதைக் காணமுடிகிறது. வைணவர்களால் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. 'தைந்நீராடல்' என்பது தைப்பொங்கல் விழாவாக இன்று கொண்டாடப்படுகிறது.

## 1.6 மாயோன் பற்றிய தொன்மம்

திருமால் குறித்த பல தொன்மங்களைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. திருமாலின் அவதாரங்களாகக் கூறப்படும் செய்திகள் யாவும் தொன்மங்களே. திருமாலை தன்னிகரில்லாத் தலைவனாகக் காட்டும் முயற்சியின் விளைவே அவதாரக் கதைகள் ஆகும். செய்யும் தொழிலே தெய்வம் என்றாற் போல, தம் வாழ்வாதாரத்திற்கும் பயன்பட்ட விலங்குகளையும் தெய்வமாக தெய்வத்தின் ஒரு கூறாக கருதியுள்ளனர். மச்சம், கூர்மம், வராகம் போன்ற அவதாரங்கள் இதனையே உணர்த்துகின்றன.

### அ. கூர்ம அவதாரம்

ஊழிக்காலத்தில் பாற்கடலைக் கடைந்தபோது, கூர்மமாக அவதரித்து பூமியைத் தூக்கிக் காத்தவன் திருமால். சத்ய யுகத்தில் நிகழ்ந்தது இது.

திகழ்ஒளி முந்நீர் கடைந்த அக்கால் வெற்புத்
திகழ்புஎழ வாங்கித் தம்சீர்ச் சிரத்து ஏற்றி
மகரமறி கடல்வைத்து நிறுத்து (பரி.திரட்டு)

என்ற பாடல் இதனை விளக்குகின்றது. உயிர்களின் வளர்ச்சியில் நீரிலும் நிலத்திலும் வாழும் இயல்புடையது கூர்ம அவதாரம் இரண்டாவது அவதாரமாகும்.

### ஆ. வராகம்

நீரால் சூழப்பட்ட உலகிலிருந்து நிலம் தனியே பிரிந்த நிலையினை இவ்வதாரம் காட்டுகிறது. வராகம் நிலத்தில் மட்டும் வாழும் உயிரி.

பேரூழிக் காலத்தில் நீரில் மூழ்கியிருந்த இவ்வுலகினை வெளியே கொணர்ந்து காத்தவன் திருமால். வராக அவதாரமெடுத்து இவ்வுலகைக் கொணர்ந்து காத்தலால் 'வராக கற்பம்' (பரி.2:16-19) என்று இவ்வுலகம் பெயர் பெற்றது.

**கேழல் கோலமொடு திகழ்வரப் பெயரி ஊழி (பரி.2)**

இவ்வவதாரத்தில் திருமகளை மணந்தான் என்பதைப் பரிபாடல் (பரி.2, 3) விளக்குகிறது.

### இ. வாமன அவதாரம்

முல்லைநில மக்களின் வாழ்வியலைச் சிறப்பிக்கும் முல்லைப்பாட்டின் தொடக்கமே திருமாலின் பெருமைகளை உரைக்கின்றது.

**நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு**
**வலம்பொறி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல, நிமிர்த்த மாஅல் போல (முல்லை. 1-3)**

என்று முல்லைப்பாட்டு இதனை உணர்த்துவதைக் காணலாம்.

'நெடியோன்' (பெரும்பாண. 402, கலி. 124, பரி.3) என்ற சொல்லாட்சி திருமாலின் தோற்றத்தையே குறிக்கிறது.

மாபலி சக்ரவர்த்தியின் ஆணவத்தை அடக்குவதற்காக எடுக்கப்பட்ட இவவ்வதாரம் ஐந்தாவது அவதாரமாகும். ஓரடியால் உலகை அளந்து. மாபலியை அழித்தான் திருமால்.

### ஈ. பரசுராமன்

'செல்லூரின்கண் வேள்வி செய்தவன்'. அரசர் குலத்தை வேரறுத்தவன். இதனால் 'மழுவாள் நெடியோன்' (அகம்.220) எனப்பட்டான். அவதார

நிகழ்ச்சிகளே அன்றி, திருமால் தொடர்பான பிற செய்திகளையும் சங்க இலக்கியங்களில் அறிய முடிகிறது.

## உ. இராமன்

ஏழாவது அவதாரமான இராமஅவதாரத்தில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் சில நிகழ்வுகள் சங்க இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளன.

1. தலைவனும் தலைவியும் களவொழுக்கத்தில் ஈடுபட்டபோது அலர்தூற்றிய ஊர், அவர்கள் மணம் முடித்து கற்பொழுக்கத்தில் கணவன், மனைவியாக வாழ்கின்ற நிலை கண்டு அடங்கியதற்கு, இராமன் சேதுவை மேடிருத்தி, இலங்கை செல்ல முற்பட்டு, ஆலமரத்தடியில் தம் சேனையுடன் ஆலோசித்துக்கொண்டிருந்தபோது, ஆலமரத்தின் மேலிருந்த பறவைகளின் ஆரவாரம், அவர்தம் கைகளை மேல்நோக்கி அமர்த்தியபோது அடங்கியது என்ற நிகழ்ச்சி உவமையாக கூறப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

வெவ்வேல் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலியவிந் தன்று இவ்வழுங்கள் ஊரே (அகம். 70)

2. சோழமன்னன் இளஞ்சேட் சென்னியிடம் பரிசில் பெற்ற விறலியர் ஆபரணங்களை அணியும் ஆர்வத்தில் இடம்மாற்றி அணிந்தனர் என்பதற்கு, இராவணன், சீதையை வான் வழியே கவர்ந்துச் சென்றபோது சீதை கழற்றி எறிந்த அணிகலன்களைக் கண்ட குரங்குகள், அதை எடுத்து அணியத் தெரியாமல் அணிந்தன என்ற நிகழ்ச்சி உவமையாக கூறப்பட்டுள்ளன.

கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வவ்விய ஞான்றை
நிலஞ்சேர் மதர்அணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப் பொலிந்தாங்கு (புறம். 318)

குறிஞ்சி நிலத்தில் உள்ள யானை ஒன்று வேங்கை மரத்தைக் கண்டு, புலி எனக் கருதி, அதனைக் கொல்லும் நோக்கோடு, தன் தந்தத்தால் வேங்கைமரத்தை வேரொடு சாய்க்க முற்பட்டபோது, அதன் தந்தங்கள் மீட்கமுடியாமல் அலறியதற்கு, சிவனும் உமையுமிருந்த திருக்கயிலாய மலையைப்

பெயர்க்க முற்பட்டுத் தன் கைகளை மீட்க முடியாமல் கதறிய இராவணன் நிலை உவமையாக குறிப்பிடப்பட்டுள்ளது.

இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமையமர்ந்து உயர்மலை இருந்தனன் ஆக
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற் கீழ்ப்புகுந்து அம்மலை
எடுக்கல் சொல்லாது உழைப்பவன் போல (கலி. )

இவ்வாறாக சங்க காலத்தே பாரதக்கதையும், திருமால் அவதாரக் கதைகளும் வாய்மொழிமரபில் இருந்துள்ளன என்பது புலனாகிறது. சங்ககால இலக்கியங்களின் தொன்மங்களைப் பயன்படுத்த வேண்டிய இடங்களில் நிகழ்ச்சிகளாகவும் உவமைகளாகவும் புலவர்கள் நலம்பட புனைந்துள்ளதை அறியமுடிகிறது.

**ஊ. கண்ணன்**

ஒன்பதாவது அவதாரமான கோவலனைக் குறித்து பல நிகழ்வுகள் இடம் பெற்றுள்ளன.

1. திருமால் கண்ணனாக அவதாரம் செய்தபோது கம்சனால் ஏவப்பட்ட மல்லரைக் கொன்று அழித்தான்.

மல்லரை மறம் சாய்த்து மலர்த்தண்தார் அகலத்தோன்
ஒல்லாதார் உடன்று ஓட உருத்து உடன் எறிதலின்
கொல்யானை அணிநுதல் அழுத்திய ஆழிபோல் (கலி. 1-3)

2. யமுனை ஆற்றின் கரையில் நீராடிய ஆயமகளிரின் ஆடைகளைக் கவர்ந்து கொண்ட கண்ணன், பலராமன் வருவதைப் பார்த்து குருந்த மரத்தை வளையும்படி மிதித்து, அவர்கள் தழையணி அணியுமாறு மானம் காத்தான் (அகம். 59).

வண்புனல் தொழுநை வார்மணல் அகன்துறை
அண்டர் மகளிர் தண்கழை உடீஇயர்
மரம்செல மிதித்த மாஅல் போல (அகம். 59)

என்று விளக்குகிறது அகநானூறு.

3. ஆய மகளிரோடு குடக்கூத்து ஆடி, மகிழ்ந்தவன். இதனை,

இடவல குடவல கோவல காவல
காணா மரப நீயா நினைவ
மாயா மன்ன உலகு ஆள் மன்னவ (பரி. 3)

என்று பரிபாடலில் திருமாலின் செயல்களாகப் புலப்படுத்துகின்றது.

4. கம்சனின் ஏவப்பட்ட குதிரையை (அசுரனை) அழித்த திருமாலின் திறனை,

கூந்தல் என்னும் பெயரொடு கூந்தல்
எரிசினம் கொன்றோய் (பரி.3)

என்கிறது பரிபாடல்.

'கேசம்' என்ற வடசொல்லின் அடியாக அமைந்ததால் அதனைத் தமிழ் மரபுக்கு ஏற்றாற்போல அதன் பொருண்மை பற்றி கூந்தல் என்று உரைக்கப்பட்டுள்ளது. இதனால் வடசொல் மரபுகள் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளதையும் புலப்படுத்துகிறது.

5. கௌரவர்கள், பாண்டவர்கள் , அவர்களுக்கும் கண்ணனுக்குமுள்ள தொடர்புகள் குறித்த குறிப்புகள் கிடைக்கின்றன.

'ஈரைம்பதின்மர்' (பதிற்று. 2ஆம் பத்து) என்பது துரியோதனன் உள்ளிட்ட கௌரவர்கள் நூற்றுவரைக் குறிக்கின்றது.

2. வலிமிக்க யானை புலியைக் கொன்றதற்கு, துரியோதனனை அழித்த பீமன் கதை உவமையாக்கப்பட்டுள்ளது.

மறம்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குறங்கு அறுத்திடுவான் போல் கூர்நுதி மடுத்து அதன்
நிறம்சாடி முரண் தீர்ந்த நீள்மருப்பு எழில் யானை (கலி.5)

3. பாரதப்போரில் கண்ணன் அர்ச்சுனனுக்குக் கீதையை உபதேசித்தான். இதனை,

**தொல் ஆணை நல் ஆசிரியர்**
**புணர் கூட்டு உண்ட புகழ்சால் சிறப்பின்**
**நிலந்தருதிருவின் நெடியோன் போல (மதுரை. 761-763)**

என்று மதுரைக்காஞ்சி சுட்டுகிறது.

திருதராட்டிரன் 'வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர் பெற்ற முகத்தவன்' (கலி. 251) எனப்படுகிறான்.

4. துரியோதனன் பாண்டவர்களை வரவழைத்து அரக்கு மாளிகையில் தீவைத்தபோது, வீமன் தன் உறவினரைக் காத்தான் என்பதை,

**வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற**
**முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்**
**ஐவர் என்று உலகு ஏத்தும் அரசர்கள் அகத்தரா**
**கைபுனை அரக்கு இல்லைக் கதழ்எரி சூழ்ந்தாங்கு (கலி. 25:1-8)**

என்று கலித்தொகைக் காட்டுகிறது.

6. சபையில் திரௌபதி துயிலுரியப்பட்டதால், பாண்டவர்கள் அனைவரும் சபதம் ஏற்றனர். (கலி. 101:18 20) அக்குரன் என்பவன் கௌரவர் படைக்குத் துணையானான். இந்த அக்குரன் குறித்து உ.வே.சா. கூறும்போது, அக்குரன் பாரதத்தில் கூறப்படுவனும் கடையேழு வள்ளல்களுள் ஒருவனுமாகிய அக்குரன் என்பவனே கர்ணன் என்று நினைத்தற்குமிடமுண்டு. ஆதாரமில்லை" என்கிறார். (பதிற்று, ப. 14)

7. பாரதப்போரில் 'உதியஞ்சேரலாதன்' பெருஞ்சோறு வழங்கினான். (புறம். 2:1)

8. வீமன், துச்சாதனனைக் கொன்றான். (கலி.101) துரியோதனையும் வஞ்சினத்தின்படி கொன்றான். (கலி.52) இதனை கலித்தொர்கையில் காணமுடிகிறது.

9. பாண்டவர் போரில் வெற்றிபெறுதல் (பெரும்பாண்.415420) போன்ற செய்திகள் பெரும்பாணாற்றுப்படையில் இடம்பெற்றுள்ளன.

**எ. நரசிம்ம அவதாரம்**

நரசிம்மன் தன்னை வணங்கியதால் துன்புறுத்தப்பட்ட பிரகலாதனின் தந்தையாகிய இரணியனைத் தன் கூரிய நகங்களால் கிழித்துக் கொன்ற நரசிம்ம அவதாரமும் பரிபாடலில் கூறப்பட்டுள்ளது.

இது நான்காவது அவதாரமாகும். இரணியனை வதம் செய்வவற்காக எடுத்த அவதாரம் நரசிம்ம அவதாரம். வைவாசி மாத வளர்பிறை சதுர்த்தசி திதியில் இது நடந்தால் அந்த நாளே நரசிம்ம ஜெயந்தி விழாவாக கொண்டாடப்படுகிறது. இந்த அவதாரம் நிகழ்ந்த இடம் ஆந்திர மாநிலத்திலுள்ள அகோபிலம் ஆகும். இங்கு இரணியன் ஆட்சிபுரிந்த இடம், பிரகலாதன் வாழ்ந்த இல்லம், கல்வி கற்ற இடம் போன்றவை இன்றுமுள்ளன. இரணியனை வதம் செய்ய நரசிம்மர் வெளிப்பட்ட தூண் உக்கிர ஸ்தம்பம் என்ற பெயரில் அங்கு இன்றுமுள்ளது, இம்மலைப்பகுதி ஆதிஷேஷன் போன்ற தோற்றத்திலுள்ளது. இம்மலைத் தொடரின் ஒர பக்கத்தில் திருப்பதி திருமலை உள்ளது. இம்மலையில் வாழும் செஞ்சு எனும் வேடுவமக்கள் குலத்தில் பிறந்த பெண்ணை நரசிம்மர் சிறையெடுத்து மணந்ததாக ஐதீகம் உள்ளது. கருடனுக்கு ஒன்பது நரசிம்ம வடிவங்களில் இங்கு காட்சி தந்தார்.

> செயிர்தீர் செங்கட் செல்வ' நிற்புகழ
> புகைந்த நெஞ்சின், புலர்ந்த சாந்தின்
> ............ ............ ............ ..........
> தடிதடிபலபட வகிர் வாய்த்த உகிரினை (பரி. 4-10:21)

என்ற பாடல் இதனை விளக்குகிறது.

**ஏ. அன்னம்**

ஏழு மேகங்களும் இடையறாது மழைபொழிந்து உலகை அழிக்க முற்பட்டபோது அன்னப்பறவையாக அவதாரமெடுத்து இவ்வுலகைக் காத்ததாகப் பரிபாடல் சான்றுபகர்கின்றது.

மா விசும்பு ஏழுகுபுனல் வறள அன்னச்
சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோய் (பரி. 3:25-26)

என்ற பாடல் மூலம் அறியலாம்.

### ஐ. கருடவாகனம்

தெய்வங்களின் தோற்றங்கள் குறித்த கதைகளோடு அவற்றுக்கான வாகனங்கள், கொடிகள் பற்றியும் தொன்மங்கள் கூறப்படுகின்றது. ஆணவத்தை அடக்கி ஆளும் திறமாகவே அவை அமைகின்றன. திருமாலின் வாகனமான கருடக்கொடி பற்றியும் தொன்மம் பேசப்பட்டுள்ளது.

காசியப்ப முனிவரின் மனைவி சத்துருவின் வஞ்சனையால் மற்றொரு மனைவியான விந்தை ஏமாற்றப்பட்டு அடிமையாக்கப்படுகிறாள். விந்தையின் மகனான கருடன் தன் தாயை விடுவிக்க வேண்ட, இந்திரனின் அமிழ்தம் தந்தால் விடுவதாக சத்துரு கூறுகிறாள். கருடன் இந்திரனை வென்று அமிழ்தத்தைக் கொண்டு வரும்போது திருமாலுடன் போர் செய்து திருமாலால் பாராட்டப்பட்டு அவருக்கு வாகனமாகிறான். அமிழ்தத்தைக் கொடுத்து தன் தாயையும் மீட்கிறான்.

பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளினை (பரி. 3:16)

இத்தொன்மக்கதை காஞ்சிபுரத்திலுள்ள முத்தீஸ்வரர் ஆலயத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. கருடன், 'கருடேஸ்வரராக' வணங்கப்படுகிறது. கருடனின் அணிகளாக பாம்புகள் இருப்பதற்கும் தொன்மங்கள் இக்கோயிலில் இருக்கிறது. சத்துருவின் புதல்வர்களான பாம்புகளைக் கொல்ல, முத்தீஸ்வரரை வணங்கி தன் பெயரால், 'கருடேசம்' என்ற சிவலிங்கத்தை நிறுவி, வரம் பெற்றான் என்றும் இத்தல கல்வெட்டுக் கூறுகிறது.

### பிற

1. அவுணர்கள் சூரியனை மறைத்துவிட்டபோது, அவுணர்களோடு போரிட்டு சூரியனை மீட்டான். (புறம். 174: 1-5)

2. மதியைத் துன்புறுத்திய அரவிடமிருந்து மதியை மீட்டான். (கலி.104:37-38)

3. தேவர்களுக்கு அமுதம் வழங்கி, அவர்களுக்கு இறவாத் தன்மையைத் தந்தான். (பரி.2.69-71)

4. பெண்ணாக அவதாரமெடுத்து அமுதம் வழங்கினான். (பரி.3:33-34)

போன்ற தொன்மங்களும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

## 2. சேயோன்

சங்க இலக்கியங்களில் சுட்டப்படுகின்ற திணைநிலைத் தெய்வங்களில் முருகனாகிய சேயோனுக்குச் செய்யும் சடங்குகளைப் பற்றி நிறைய பாடல்கள் உள்ளன. சேயோனுக்கான கோயில்களைப் பற்றியும், வழிபாட்டு முறைகளைப் பற்றியும் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. குறிஞ்சி நில மக்களின் குலத்தெய்வமாக விளங்கிய முருகன் செவ்வியல் தெய்வமாக ஏற்றம் பெற்ற நிலையையும் காண முடிகிறது.

**சேயோன் மேய மைவரை உலகமும் (தொல். 5)**

என்றதனால் 'சேயோன்' குறிஞ்சிநில மக்களின் குல தெய்வமாக விளங்கியவன் என்பது தெளிவு. மலைக் கடவுளாக விளங்குபவன்.

நீரால் சூழப்பட்ட இவ்வுலகில் முதலில் வெளிவந்தது மலையே என்பது அறிஞர் துணிபு. ஆதலால் மலையுறைக் கடவுளாகிய சேயோன் தமிழ்ச்சமுதாயத்தின் தொன்மையான தெய்வம் என்பதில் ஐயமில்லை.

அறுபடை வீடுகள் எனப்படுகின்ற ஆறு இடங்களிலும் முருகனுக்குச் சங்ககாலத்தில் கோயில்கள் இருந்துள்ளன. இன்றும் அவை சிறப்பாக கொண்டாடும் தலங்களாக உள்ளன.

சங்க இலக்கியங்கள் 'சேயோன்' (தொல்.5) முருகு (நற்.225:3, அக.118:5, 138:10, 288:4, புறம். 56:14, ஐங். 245:3, 247:3, 249:2), முருகன் (புறம் 23:4, 299:6, அகம். 1:3, முருகு 269), வேள் (பதிற். 11: 6) செவ்வேள் (பட்டின. 154, முருகு: 269), நெடுவேள் (நற். 173:10, 288:10, அக. 98:27, 120:1, 272:15, 385:5, பெரும்.75, குறிஞ்சி.174, மதுரைக். 164, முருகு. 278, குறுந்.111:2), குமரன் (பரி.91: 8132, இயவுள் (முருகு.274) மதவலி (முருகு.275) என்றெல்லாம் குறிப்பிடுகின்றன.

ஆரியத் தொடர்பால் ஏற்பட்ட கதைகளையொட்டி, வேறு பெயர்களையும் திவாகர நிகண்டு குறிப்பிடுகிறது.

முருகன், சூர்ப்பகை, செட்டி, குமரன், அறுமீன் காதலன், சேவற்கொடியோன், கார்த்திகேயன், கடம்பன், சுவாமி, வேலுடைக்கடவுள் , மேவலர்க்கிறைவன், வரைபகை எறிந்தோன், வள்ளி மணாளன், அரன்மகன், குறிஞ்சிமன், சரவணத் துதித்தோன், ஆறுமுகன், விஜயன், குகன், சேய், செவ்வேள், தேவர் சேணாபதி, மயிலாளி, சேந்தன், கந்தன், காங்கேயன், வேள். (நூற்பா. 6)

தனித்தனியே சுட்டப்பட்ட நிலை, குடும்பஉருவாக்கம், திருமாலுக்கு இணையாக சுட்டுதல் என்று இருந்த நிலையிலிருந்து முருகனைத் தனித்தன்மை உடையவனாக, தனித்தலைவனாக, அவனுக்கான உறைவிடங்களைப் பெருக்கி, உடைமைகளைப் பெருக்கி, உயர்த்திக் காட்டுவது திருமுருகாற்றுப்படை, குறுந்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடல் முருகப் பெருமானைப் பற்றியே அமைக்கப்பட்டுள்ளது.

சங்க இலக்கியங்களிலேயே தனியொரு தெய்வத்துக்காக எழுதப்பட்ட ஒரே நூல் திருமுருகாற்றுப்படை. இந்நூல் முருகனுக்கான புனைவுகளை மிகைப்படுத்தி, குறிஞ்சி மக்களின் குலதெய்வமாக இருந்த நிலையிலிருந்து அனைத்து மக்களையும் முருகன்பால் ஆற்றுப்படுத்துகிறது. அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட கடவுளாக உயர்ந்து நிற்கிறான் முருகன். வேறு எந்த கடவுளைப் பற்றியும் தனிநூல் எழுதப்படவில்லை.

இந்திரனால் ஆறுகூறுகளாய் சிதைந்த கரு ஒன்றானது என்ற பழைய மரபிலிருந்து மாறி, ஆறு முகங்களையுடையவனாக, ஆறு மலைகளுக்கு உரிமையுடையவனாக 'சேயோன்' ஏற்றம் பெற்றுள்ளான். பக்தர்களை ஆறுமுகன்பால் ஆற்றுப்படுத்தும் மிகப் பெரிய முயற்சியே இந்நூலாக்கம் என்பது உறுதியாகிறது.

## 2.1 வடிவங்கள்

முருகப்பெருமானின் திருஅவதாரத்தைப் பற்றி பரிபாடல் கூறுகின்றது. திராவிடக் கடவுளாய் விளங்கிய முருகனை ஆரிய பரிணாமத்திற்கு மாற்றும்

முயற்சியாக அவன் சிவனுக்கும் உமைக்கும் பிறந்தவனாக புனையப்படுகிறான். அதோடு இந்திரனின் பலத்தை வீழ்த்தி, அவன் மகளை மணந்தான் என்பதனால் இந்திரனுக்கு விஞ்சியவனாக வலுப்படுத்தப்படுகிறான்.

**அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ (முருகு.255)**

**மறுமிடற்று அண்ணற்கு மாசிலோர் தந்த செல்வன் (பரி.8:126-127)**

இச்செய்தி கலித்தொகையிலும் (81:9, 83:14) கூறப்பட்டுள்ளது.

மலைக்குரிய கடவுளாகவே சுட்டப்படுவதால் இத்தெய்வம் உறையுமிடம் மலை ஆகும்.

**குறிஞ்சிக் கிழவன் (முருகு.267)**

**வெறிகமழ் நெடுவேள் (அக.98:27)**

**பிறங்குமலை மீமிசைக் கடவுள் (குறிஞ்சி.208)**

**மலை மீமிசைக் கடவுள் (குறிஞ்சி.46-61)**

தவிர கடம்பமரத்தில் உறைவதாகவும் நம்பி வழிபட்டனர்.

**பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்**
**விருந்து உண்டு எஞ்சிய மிச்சில்**

என்று மதுரைக்காஞ்சி கூறுகின்றது.

### அ. ஊர்தியும் கொடியும்

'பிணிமுகம்' என்ற யானையும் மயிலும் ஊர்திகளாகும். இவையே கொடிகளாகவும் உள்ளன. (குறு.12, பதிற்.11:16, பரி.5:2, 17:44, 21:12, முருகு.7882, புறம்.56:8) இவைத்தவிர சேவற்கொடியும் கடம்பமாலையும் சிறப்பாக சுட்டப்படுகின்றன. (நற்.34.8) முருகு.4344)

### ஆ. மாலையும் ஆயுதங்களும்

முருகன் பன்னிரு கைகளையும் ஆறு முகங்களையும் உடையவன். (பரி.5:11 12, 14:21)

வேல் சிறந்த ஆயுதமாக குறிப்பிடப்படுகிறது.

**வேல் வல்லான்** (கலி.104:14)

**வல்வேல் கந்தன்** (புறம்.380:12)

**வேல் வலான்** (கலி.108:17)

வேலெறிந்து போரிடும் வீரர் முருகனுக்கு உவமையாக கூறப்பட்டனர்.

**வேல் ஆற்றும் மொய்ம்பனின் விரைமலர் அம்பினோன்**
**போல் ஆற்று முன்பின் புனை கழல் மைந்தர்** (பரி.22:26-27)

இந்திரனைத் தோற்கச் செய்த முருகனின் வீரத்தைக் கண்டு வியந்து தேவர்கள் அளித்த ஆயுதங்களைப் பரிபாடல் பட்டியலிடுகின்றது. (பரி.1:25, 5:63 70)

## இ. நிறம்

நிறம் செந்தீயை ஒத்தது. ஆதலால் 'சேயோன்' எனப்பட்டான்.

**உடையும் ஒலியலும் செய்யை: மற்று ஆங்கே**
**படையும் பவளக்கொடிநிறம் கொள்ளும்** (பரி.19:97-98)

இந்திரனை வீழ்த்தி தேவர்படையின் தலைவன் என்று முருகனை உயர்த்துகின்றது.

**வானோர் வணங்குவில் தானைத் தலைவ** (முருகு.260)

என்பதால் இதனை அறியலாம்.

## 2.2 உறவுகள்

குறிஞ்சிக் கிழவனாகிய முருகனுக்குத் தாய், தந்தை, மனைவியர் என்று குடும்ப உறவுகளை உருவாக்கம் செய்து, வழிபட்ட நெறியினையும் அறிய முடிகிறது. சங்கத்தமிழர் தாம் வாழ்ந்த குடும்ப அமைப்பைப் போலவே தாம் வழிபட்ட இறைவனுக்கும் குடும்பத்தை உருவாக்கி மகிழ்ந்தனர்.

சேயோன் குறிஞ்சி நிலத் தெய்வமாதலால் குறிஞ்சி நிலப் பெண்ணாகிய வள்ளியைக் களவுமணம் புரிந்தான். பழந்தமிழர் வாழ்வில் களவுமணம் கற்புமணம் என்ற நிலையிருந்தது போல முருகனிடத்தும் அம்முறையைப் புகுத்தியிருப்பது கருதத்தக்கது.

இந்திரன் தன் மகளை முருகனுக்குக் கொடுத்தான் என்பதைப் பின்வரும் பாடல் விளக்குகிறது.

> நிலவரை அழுவத்தான் வான் உறை புகல் தந்து
> ..................... ................. .................
> காறுகொள் துறக்கத் தவனொடு
> மாறுகொள்வது போலும் மயிற்கொடி வதுவை (பரி.19:1-7)

என்பதனால் இந்திரன் மகளாகிய தெய்வயானை முருகனுக்கு மனைவியாக ஆக்கப்பட்டாள் என்பது தெரிகிறது. தமிழர் பண்பாட்டின்படி வள்ளியை முருகனே களவுமணம் புரிகின்றான்.

> முருகு புணர்ந்து இயன்ற வள்ளிபோல நின்
> உருவுகண் எறிப்ப நோக்கல் ஆற்றலெனே (நற்.22:4-5)

முருகனின் மூத்தசகோதரனாக, விநாயகன் குறிப்பிடப்படவில்லை.

முருகனை மால் மருகனாக கற்பிக்கின்ற நிலை, சைவம், வைணவம் என்ற காழ்ப்புணர்ச்சியின்றி திருமாலும் முருகனும் ஒரே குடும்பத்தினராகக் கருதப்பட்ட நிலையினைக் காட்டுகிறது.

> மாஅல் மருகன் (பரி.19:57)

என்ற பாடல் இதனை உறுதி செய்கிறது.

## 2.3 கோயில்கள்

முருகனின் இருப்பிடங்களாக ஆறு இடங்கள் சுட்டப்படுகின்றன. அவை

1. திருப்பரங்குன்றம், 2. திருச்சீரலைவாய், 3. திருவாவினன்குடி, 4.திருவேரகம், 5. குன்றுதோராடல், 6. பழமுதிற்சோலை.

முருகனை ஒரு தத்துவப் பொருளாகக் காணும் நிலையினை இந்நூல் காட்டுகிறது. ஆறுமுகங்கள், பன்னிருகைகள், அறுபடை வீடுகள் ஆகியவை சிறப்பிக்கப்படுகின்றன.

இறைவனைத் தத்துவப் நோக்கில் நோக்கும் பண்பட்ட நெறியினை இந்நூல் உணர்த்துகிறது.

## 2.4 வழிபாடுகள்

தமிழகத்திலிருந்து பழமையான வழிபாட்டில் முருக வழிபாடு குறிப்பிடத்தக்கது. முருகு, முருகன், கந்தன், வேலன் என்ற பெயர்கள் பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றன. இச்சொற்கள் குறித்தும் அறிஞர்கள் பலவாறு கூறுகின்றனர். பி.எல்.சாமி, முருகன் என்ற சொல்லுக்குச் சீற்றம், சினம், வலிமை என்று பொருள் கூறுகிறார். அகம்.59, 158, 181, 1, புறம்.14, 23 முருகன் என்ற சொல்லே (அகம்.158, பொருநர்.131132, புறம்.16, 23, அகம்.1, 59) பல இடங்களில் பயின்று வந்துள்ளது. முருகு என்ற சொல்லும் (அகம்.28, 137, 288, பரி.21, பட்டி.31, 38) பல இடங்களில் பயின்று வந்துள்ளது. மணம் என்ற பொருளிலேயே பலவிடங்களில் வந்துள்ளது. இளமை, அழகு என்ற பொருள்களில் குறித்ததாகத் தெரியவில்லை. முருகனைத் தமிழகம் பல நிலைகளில் வழிபட்டு வந்ததைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

1. குறிஞ்சி மக்களின் குலதெய்வமாக வழிபடப்பட்டது முதல் நிலை.

2. தனி வழிபாடாகவும் குழு வழிபாடாகவும் அது இருந்தது. குறவர்கள் குழுவாகவே வழிபட்டனர்.

3. தலைவிக்கு வரும் நோய்க்கு, (இளம் பெண்களுக்கு) முருகனே காரணமென்று நம்பினர். ஆடவரை வருத்துவதாக எங்கும் குறிப்பில்லை. பெண்களுக்கான . நோய் வந்த காரணத்தை அறியவும் முருகனால் அணங்கப்பட்டாளா’ என்பதை அறியவும் உறுதிசெய்யவும் முருகனுக்கு வெறியாட்டு நிகழ்த்தப்பட்டது. ஆடவருக்காக வெறியாட்டு நிகழ்த்தப்படவில்லை. நிகழ்த்தப்பட்டமைக்கு எங்கும் சான்று இல்லை. முருகு அணங்கினானா? எனக் கண்டறிய செய்யப்பட்ட வழிபாடு, நாளடைவில் வழிபாட்டுச் சடங்குகளில் ஒன்றாக மாறிவிட்டது.

சங்ககாலத் தமிழர் தாம் போற்றிய கடவுளர்க்குக் கோயில்களெழுப்பிச் சடங்குகள் செய்தனரென்பதை பல சான்றுகள் உணர்த்துகின்றன.

மரஞ்சேர் மாடத்து
எழுதணி கடவுள் போகலின் புல்லென்று
ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்திணை (அகம். 167)

கந்துடைப் பொதியில் (பட்டி. 249)

குறிஞ்சி மக்கள் முருகனைத் தம்குலத் தெய்வமாக வழிபட்டனர். வேங்கை மலர்களைக் கொண்டு வழிபட்டனர். அது, தனிநபர் வழிபாடாகவும் குழு வழிபாடாகவும் விளங்கியது.

குன்றக் குறவன் காதல் மடமகள்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தி (ஐங்குறு. 259:1-3)

தினையை விதைத்து, முளைத்த முதல் கதிரைத் தெய்வத்திற்குப் பலியாக இடும் மரபிருந்தது.

புனவன் துடவைப் பொன்போற் சிறுதிணைக்
கடியுண் கடவுட்கிட்ட செழுங்குரல்னூ (குறுந். 105)

வேப்பமரத்திற்கு வெட்சி வீரர் பசுவினைப் பலியிட்டு உதிரத்தைத் தூவினர். (அகம்.39.45) உயிர்ப்பலி கொடுத்தப்பின் அக்குருதியைத் தினையுடன் கலந்துத் துவி, முருகனை வழிபட்டனர். (குறுந்.263, அகம்.22, திருமுருகு.22) முருகவழிபாடு இனக்குழு வழிபாடாக இருந்தபோது தமிழ் மரபு வழிபாடுகளே நடைபெற்றன.

கடம்பமரத்தையும் வேலையும் வணங்கினர். களவுமணத்தின் காவல் தெய்வமாக வணங்கினர்.

2. பரிபாடல் காலத்தில் முருகன் வீடுபேறை அருளுபவனாகவும் உலகப் பற்றற்றவனாகவும் கருதி வணங்கப்பட்டான் என்று உரையாசிரியர் சோமசுந்தரனார் கூறுவதை நா. வானமாலை மறுத்து, உலக இன்பத்தை விரும்பியே மக்கள் முருகனை வழிபட்டனர் என்கிறார்.

பரிபாடல் கடம்பமரவழிபாட்டையும் கூறுகிறது. கோயிலில் பெருந்தெய்வமாக்கப்பட்டு வழிபட்டதையும் கூறுகிறது. வெறியாட்டு நிகழ்த்தி, வழிபட்ட முருகனைச் சிவனின் மைந்தனாக கற்பித்து, வழிபட்டனர். 'பழையோள்,' 'சிறுவன்,' 'கொற்றவை செல்வன்' என்றே முருகன் பெயர்கள் வழங்கப்பட்டன. 'அரசர்கள் ஆணாதிக்க பரம்பரையைச் சேர்ந்தவர்கள் பிற்காலத்தில் கொற்றவை மகனான முருகனுக்கு ஆண் பரம்பரையைத் தேடினார்கள்.' (நா. வானமாமலை, 2008, ப.30) அதன் விளைவாக வடமொழி மரபினைப் பின்பற்றி, (அக்னி வணக்கம் தமிழகத்தில் அருகியிருந்ததால்), அக்னியின் மகனாகக் காட்டாமல் சிவனின் மகனாகக் காட்டி வழிபட்டனர்.

முருகனைப் போர்க்கடவுளாகக் காட்டினர். வடமொழி ஸ்கந்தனை முருகனோடு இணைத்தனர். பாமர மக்களின் வழிபாடாக இருந்து (பாண்டிய மன்னன்) அரசர் சென்று வழிபடும் இடமாக கோயில்கள் எழுந்தன.

பலநிறங்களையுடைய சாந்து வகைகள், புகைத்தற்பொருட்கள், காற்றால் அவியாத காப்புடைய விளக்குகள், பூக்கள், முழவுகள், மணிகள், நூற்கயிறுகள் எடுத்துச் சென்றனர். பொன்னால் செய்யப்பட்ட மயில் கோடாரி, பிணிமுகமென்ற யானை போன்றவற்றை காணிக்கையாகச் செலுத்த திருப்பரங்குன்றிற்குக் கொண்டு சென்றனர் என்று பரிபாடல் பதிவு செய்துள்ளது. (பரி.8:90-102).

**பலியிடுதல்**

சங்ககால தெய்வங்களுக்கும், அவை உறைவதாகக் கருதப்பட்ட மரங்களுக்கும், உயிருள்ள பொருட்களையும் உயிரற்ற பொருள்களையும் பலியிட்டு வழிபட்டுள்ளனர். பலி என்பதற்குத் தமிழ்ப் பேரகராதி பின்வருமாறு விளக்கம் கூறுகிறது. பலி யாகம் முதலியவற்றில் தேவர், பிதிரர் முதலியோரை உத்தேசித்து இடும் உணவுப் பொருள்.

பலிகண் மாறிய பாழ்படு பொதியில் (புறம். 52)

பலியிடுதற்குரிய பிராணி முதலியன. காக்கை முதலியன உண்ண இடுஞ்சோறு. பூசையில் அச்சிக்கும் பூ முதலியன. தேம்பலி செய்த வீர்நறுங்கையள்" (ஐங்.259). கிராம தேவதைகளுக்குப் பலியிடுவதன் பொருட்டு விடப்பட்ட மானியம்.' (தமிழ்ப் பேரகராதி, ப.2537)

இங்ஙனம் பலியிடுதலும், நம்பிக்கைச் சார்ந்ததாகவே இருந்தது. பாமர மக்களிடம் இன்றும் நடைமுறையிலுள்ள மந்திரச் சடங்குகள் அக்காலத்திலும் பெருவழக்கிலிருந்ததை அறிய முடிகிறது. மோகினிப் பேய்கள் ஆண்களைப் பற்றிக் கொள்ளும் என்ற நம்புவதைப் போல, 'முருகு' பெண்களைப் பற்றிக் கொண்டதாக நம்பினர்.

**வெறியாடுதல்**

இந்நம்பிக்கையின் காரணமாக முருகனுக்கு வெறிஅயர்ந்தனர். முருகு வழிபாட்டின் முக்கியமான சடங்காக இது இருந்துள்ளது.

**வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
**வெறியாட்டயர்ந்த காந்தளும் (தொல். 60)**

வெறியாட்டை நிகழ்த்தியவர்வேலன் எனப்பட்டார். முருகனே அவ்வேலன் மீது இறங்கி வந்து அருள் கூறுவதாக நம்பினர். முருகனின் வேலை இவன் ஏந்தியதால் 'வேலன்' எனப்பட்டான். 'படிமம்' செய்துகொடுத்ததால் 'படிமத்தான்' எனவும் வழங்கப்பட்டான். செவ்வேலின் வேலை ஏந்தி நிற்றலால்வேலன் என்றார். காந்தளை உடைமையானும் பனந்தோடுடைமையானும் மகளிரை வருத்துதலானும் வேலன் வெறியாட்டயர்ந்த என்றதனாலும் வேலன் ஆடுதலே பெரும்பான்மை. ஒழிந்தோர் ஆடுதல் சிறுபான்மை" (தொல். நச்சி. உரை, 2007, ப.162)

வெறியாடுவதற்கு முதலில் களம் அமைக்கப்பட்டது. இது 'களமிழைத்தல்' எனப்பட்டது. இக்களம் வியன் களம், ஆடுகளம் எனப்பட்டது. சாணத்தால் இதனை மெழுகினர். வெறியாடும்போது கடம்பமரமும் யானையும் பாடப்பட்டது. கடம்பிற்கு மாலையிட்டனர். வேல்நட்டு மாலையிடப்பட்டது. அரளிமாலையும் கடம்பமாலையும் சூட்டப்பட்டது. வெறியாடும் பெண் கட்டுவிச்சி எனப்பட்டாள். வெறியாடுவோர் பனந்தோட்டையும் கடம்பமாலையையும் கையில் அணிந்தனர்.

முருகன் கோட்டத்தில் வேலன், களமெழுதி வேலனைக் கீழேகொண்டு வருகிறார்கள். அவனுக்கு ஆடியவள் புலைத்தி, முருகு மெய்ப்பட்ட புலைத்திபோல" என்பது சங்க இலக்கியத்தில் உவமையாகக் காட்டப்படுகிறது. புலைத்தி என்டவள் யார்? என்பதையும், புலைத்தி கழீஇய தூவெள் அறுவை"

என்று கூறுகிறது. இதனால் முருகன் கோயில்களில் 'புலைத்தியே'(வன்னார் இனத்தவர்) சாமியாடியிருக்கிறாள். முருகன் புலைத்திமேல் இறங்கி வந்திருக்கிறான் என்பதும் உறுதியாகிறது. தந்தைவழிச் சமூகமாக மாற்றம் பெறத் தொடங்கியதும் பெண்களிடமிருந்து ஆண்களின் கைக்கு வெறியாட்டு மாறியுள்ளது. வெளியாட்டு நிகழ்த்துபவன் 'வேலன்' ஆனான். அதற்கு துணைபுரிபவர்களாக பெண்கள் தள்ளப்பட்டனர்.

பெரிய உச்சி, சிறிய பை, பலதலைகளையுடைய கோல், தலைப்பாகை, குடுமி, கோல் ஆகியவற்றை உடையவனாகப் படிமத்தான் இருந்தான்.

வெறியாடுகளத்தில் செம்மறியாடு பலியிடப்பட்டது. (அகம்.242, 292, நற்.47) பலியிட்டப்பின் அக்குறுதியைத் தினையுடன் கலந்து தூவி முருகனை வழிபட்டனர். முதுவாய்ப் பெண்டீரே களமமைத்தனர். அரிசியைப் பல பகுதிகளாகக் கூடையிலே வைத்து பலியிட்டனர். (அகம்.98).

இனக்குழு மக்களின் சடங்கு முறைகளில் ஒன்றாக மானிடவியலார் கூறும் மந்திர சடங்குகளாக இவை உள்ளன. மந்திர சடங்குகளில் 'பலிசோறெறிதல், ஆகாசப் பூசை' ஆகிய சடங்குகள் வெறியாட்டயர்தலில் காணப்படுகின்றன. குருதியுடன் கூடிய தினையரிசி தூவப்படும்போது அதனை வருத்துகின்ற தெய்வங்கள் பிரித்து உண்டு, சாந்தியடையும் என்ற நம்பிக்கையே இதற்குக் காரணமாகும். மறியின் இரத்தத்தை மண்ணுடன் கலந்து தலைவியின் நெற்றியிலே தடவும் மரபும் சங்க காலத்தே இருந்தது. (குறுந்.362)

பேய் பிடித்துள்ளதாகக் கூறியும் வெறியாட்டு நிகழ்த்தப்பட்டுள்ளது.

வேற்றுப்பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்தி
பேஎயக் கொளீஇய ளிவளெனப் படுதல்
நோதக் கன்றே (குறுந். 263)

பேயினால் வரும் அச்சம் தீரவும் பேய்களுக்குப் பலியிட்டுள்ளனர். (பதிற். 71, 33) முன்பழந்தமிழ் இலக்கியங்களில், இனக்குழு மக்களின் இயல்பான வழிபாட்டு முறையே இருந்தது.

**வைதீக வழிபாடு**

பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகிய பின் பழந்தமிழ் இலக்கியங்களில் வைதீக மரபில் அமைந்த வழிபாட்டு முறைகளே மிகுதியாக உள்ளன. இங்கு வேலனாக இருந்து அந்தணர்கள் பூசை செய்கின்றனர். வெறியாட்டுப் பின்னுக்குத் தள்ளப்படுகிறது. அறுபடை வீடுகளில் நடைப்பெற்ற வழிபாடு முற்றிலும் வைதீக மரபில் அமைந்ததேயாகும்.

அந்தணர்கள் அந்திநேரத்தில் செய்யவேண்டிய கடமைகளைச் செய்தனர். மாலையில் விளக்கேற்றினர். முருகனுக்கு ஆறுமுகங்களும் பன்னிரு கைகளும் கற்பிக்கப்பட்டன. முகங்களுக்கும் கரங்களுக்கும் தத்துவப் பொருள் கற்பிக்கப்பட்டதை நச்சினார்க்கினியர் விளக்குகிறார். (திருமுருகு.31)

இல்லறத்தார்க்குரிய தெய்வமாக வணங்கப்பட்ட இறைவன் துறவிகளுக்கானவனாகவே காட்டப்படுகிறான். முப்பத்துமூன்று தேவர்களும் (உருத்திரர், ஆதித்தர், வசுக்கள், மருத்துவர்) பதினெண் கணங்களும் வந்து இறைஞ்சும்படி தேவாதிதேவனாக முருகன் உயர்த்தப்படுகிறான். (திருவாவினன்குடி)

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுவகை இலக்கணத்தின் வழுவாமல் இருபிறப்பாளராகிய அந்தணர் தாம் வழிபடும் காலமறிந்து, முப்புரிநூலணிந்து, நீராடி, புலராத ஆடையுடன், ஆறெழுத்து மந்திரமாகிய ‘குமாராயநம’ எனும் நாமத்தை தலைமேல் கைகுவித்து, உச்சரித்து பூக்களால் வழிபட்டனர். முருகன் அதற்கு விரும்பி ஏரகத்தில் இருப்பவன் என்றும் கூறப்படுகிறது. மந்திரங்கள், ஆகவனீயம், தக்கிணாக்கினி, காருகபத்தியம் எனும் முத்தீ வழிபாடு, ஆகியன திருஏரக வழிபாட்டில் சுட்டப்படுகின்றன.

அந்தணர்களை உயர்த்தும் முயற்சியும் தெரிகிறது. இருபிறப்பாளர் உபநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இரு பிறப்பு (நச்சி. ப.90) என்கிறார் நச்சினார்க்கினியர்.

திருத்தணியாகிய வீட்டில் வேலன் வெறியாட்டு நிகழ வழிபாடு நடைபெறுகிறது. குறவர், குறத்தியரோடு முருகனும் குரவையாடினான்.

தினையரிசியைப் பூக்களோடு கலந்து ஆட்டுக்கிடாவை அறுத்து கோழிக்கொடியுடனே விழாவிற்குரிய இடத்தை நிரப்புவர். மலையும் மயிலும் அலங்கரிக்கப்பட்டது. வெண்சிறு கடுகை நெய்யுடன் கலந்து வாயிற்படி முதலிய இடங்களில் தடவி, குமார மந்திரத்தை ஒலித்தனர். சிவந்த நூல் கையில் காப்பாகக் கட்டிக் கொண்டனர். பலியிடத்தில் ஆட்டுக்கிடா குருதியுடன்கூடிய தினையைப் பரப்பினர். நான்கு திசைகளிலும் ஆகாயத்திலும் பரப்பி வித்துக்களை படையலிட்டு மஞ்சள், சந்தனத்தோடு கலந்துத் தெளித்தனர். ஊதுகொம்புகள் ஊதப்பட்டன. குருதி கலந்த தினையைப் பரப்பி, தெய்வமாடும் மகளிர் அதன்மேல் அமர்ந்து துடி முதலியன வாசிக்கச் செய்தனர். மரங்களுக்கும் பலியிட்டனர். வெட்சி வீரர்கள் வேப்பமரத்திற்குப் பசுவினைப் பலியிட்டு உதிரத்தைத் தூவினர். (அகம்.39:45)

உழவர்கள் நெற்களத்தில் பலிகொடுத்துள்ளனர். **(பெரும்பாண்.233)**

**காக்கைக்குப் பலியிடல்**

பலியுண் காக்கை **(நற். 281)**

இவ்வழக்கம் இடையரிடம் வழக்கிலிருந்தது. பின் எங்கும் பரவியது. திராவிட மரபோடு, வைதீக மரபு கலந்த வழிபாடாக மாறியது.

**குரவையாடுதல்**

முருக வழிபாட்டிலிருந்த முக்கியமான கூறு குரவையாடுதல். ஏழு அல்லது ஒன்பது பேராடும் இக்கூத்தை மகளிர் தனியேயும் ஆடவரோடு சேர்ந்தும் ஆடினர். (மலை. 320 322) குறிஞ்சி மக்கள் மட்டுமின்றி நெய்தல் மக்களும் (அகம். 20) முல்லை மக்களும் விழாவின்போது குரவையாடினர்.

தைமாதத்தில் பாவையை நீர்த்துறையில் வைத்தபோதும் (அகம்.269) வெறியாட்டு நிகழ்த்தும்போதும் ஏறுதழுவிய பிறகும் குரவையாடப்பட்டது. (கலி.103)

திருவிழாக்களின் போது பரத்தையர் சேரிகளிலும் ஆடப்பட்டது. முருகனுக்கான 27 பெயர்களைத் திருமுருகாற்றுப்படை பட்டியலிட்டு வழங்குகின்றது.

தமிழரின் வழிபாட்டு முறையான 'வெறியாட்டு' நிகழ்த்துதலிலிருந்து அந்தணரின் வைதீக நெறிக்கு வழிபாடு மாறியிருப்பதைக் காட்டுகிறது. கடா, சேவல் போன்றவற்றைப் பலியிட்டு வணங்கும் பழந்தமிழர் வழிபாட்டினைப் புறந்தள்ளி, முற்றிலும் ஆரிய மயமாக்கப்பட்ட முத்தீ வழிபாடு, ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற இலக்கணத்தோடு வழுவாத, முப்புரி நூலணிந்து இருபிறப்பாளராகிய அந்தணர் பூப்பலியிட்டு வழிபடும் ஏரகம் என்றதால் அந்தணர் மேலோங்கி வழிபட்ட தலமாக அது விளங்கியது தெரிகிறது.

இங்கு வேலன் வெறியாட்டு நிகழ்ந்து மறி அறுத்து வழிபட்ட தமிழர் வழிபாடு சுட்டப்பட்டாலும் வைதீக நெறி வேரூன்றிய நிலையினைக் காணமுடிகிறது. முருகனுக்குக் கோயில் இருந்தமைக்குப் புறநானூறு சான்றாகிறது

அணங்குடை முருகன் கோட்டத்து (புறம்-299)

என்ற பாடல் மூலம் அறியலாம்.

## 2.5 விழாக்கள்

கார்த்திகை விழா, பங்குனி உத்திர விழா, பூந்தொடை விழா, உள்ளி விழா போன்றன முருகனுக்கு எடுக்கப்பட்ட விழாக்களாகும்.

### அ. கார்த்திகை விழா

வீடுகளிலும் தெருக்களிலும் விளக்குகளை ஏற்றி சந்திரன் கார்த்திகையைச் சேரும் நள்ளிரவில் கார்த்திகை விழா நடைபெற்றுள்ளது.

அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்
மறுகு விளக்குறுத்து (அகம்.141)

மலைகளிலுள்ள இலவ மரங்களின் மலர்களுக்குக் கார்த்திகை விளக்குகள் உவமையாக கூறப்பட்டுள்ளன. (அகம். 185)

பெருவிழா விளக்கம் போல (அகம்.185)

பெருவிழா என்று குறிக்கப்படுகின்றது. இது பெண்கள் மகிழ்ந்து எடுத்த விழா (அகம்.11) முருகனுக்காக கார்த்திகைத் திங்களில் எடுக்கப்படும் விழா, மாலை நேரத்தில் இல்லங்களில் விளக்கேற்றி வழிபட்டனர். இன்றும் திருவண்ணாமலையில் பரணி ஜோதி .ஏற்றப்பட்டு மூன்று நாட்கள் வெகு விமரிசையாக (கார்த்திகை பௌர்ணமி நாளில்) கொண்டாடப்படுகிறது. முதல்நாள் தீபம் கார்த்திகைப் பெண்டிர்க்காகவும் அடுத்த இரண்டு நாட்கள் அக்னிவடிவான சிவனுக்கும் ஏற்றப்படுகிறது.

### ஆ. பங்குனி உத்தர விழா

சோழர்களின் உறையூரில் காவிரியாற்றின் சோலையில் பங்குனி மாதத்தல் முழுமதியும் உத்திரநாளும் கூடுகின்றநாளில் விழா எடுத்தனர். விழாவன்று சோறு சமைத்து உண்பர். (அகம். 137) பங்குனி முயக்கம் எனப்படும் இவ்விழா முருகனுக்காக எடுக்கப்பட்ட விழாவாகும்.

### இ. பூந்தொடை விழா

மறவர்கள் தாங்கள் வில்வித்தையில் தேர்ச்சி பெற்றதை அறிவிக்க 'பூந்தொடை விழா' கொண்டாடினர் என்பதை அகநானூறு(368) பதிவு செய்துள்ளது. வேதகாலத்து ஆரியர்கள் மரபிலும் இவ்விழாக்கள் கொண்டாடப்பட்டுள்ளன. வீரம் சார்ந்த விழாவாக இவ்விழா கொண்டாடப்பட்டுள்ளது.

### ஈ. உள்ளி விழா

கொங்கர்களால் இடையில் மணியைக் கட்டிக் கொண்டு முருகனுக்காக எடுக்கப்பெற்ற விழா இது.

> ....... கொங்கர்
> **மணிஅரை யாத்து மறுகின் ஆடும்**
> **உள்ளி விழவின் அன்ன** (அகம்.**368:16-18)**

விழாக்காலங்களில் உறங்காது பலநாள் கொண்டாடினர். இனி ஊர் துஞ்சாமை என்பது. ஊர் கொண்ட பெருவிழா நாளாய்க் கண்பாடு இல்லையாகவும் இடையீடாம் என்பது. அவை மதுரை ஆவனி அவிட்டமே. உறையூர் பங்குனி உத்திரமே. கருவூர் உள்ளி விழாவே என இவையும் இவை

போல்வன பிறவும் எல்லாம் அப்பெற்றியான பொழுது இடையீடாம் என்பது" என்று இறையனார் களவினுள் தவிர்ச்சி (கள.16) சூத்திர உரையில் கூறியிருப்பதால் உள்ளி விழாவும் பெருவிழாவாகவே இருந்ததைக் காட்டுகின்றது. விழாக்களின் போது கோயில்களில் ஆன்மீகச் சொற்போர் நிகழ்த்தப்பட்டுள்ளது. பெண்களும் பங்கேற்றனர். (பரி.19) வேள்வியின்போது பசுக்களைப் பலியிட்டனர். ஆட்டுக்கிடாக்களும் பலியிடப்பட்டன. (பரி. செவ்வேள். 17) என்பதையும் பரிபாடல் கூறுகிறது.

## 2.6 சேயோன் பற்றிய தொன்மம்

குறிஞ்சி நில மக்களின் களவுவாழ்வின் தெய்வமாக சேயோன் வணங்கப்பட்டுள்ளன.

பழங்காலக் குறவர், எயினர், தானவர் போன்ற குறிஞ்சிநிலமக்கள் (குடிடின முயவாநசநேளள) புன்செய் அல்லது நன்செய் பயிர்த்தொழிலை மேற்கொண்ட ஆரம்பகாலத்தில் தோன்றிய கடவுட் கருத்து முருகன் ஆகும்" (நா. வானமாமலை, 1970, ப.462) குறவர் இளம் பெண்டிற்கு உண்டாகும் நோய்க்கு இவனே காரணமென்றும் அந்நோய் தீர்க்கும் மருந்து என்றும் நம்பினர். களவுத் தெய்வமான முருகனோடு வள்ளி இணைக்கப்பட்டாள். முருகனைக் குறித்த தொன்மங்களைக் காணும்போது வடமொழி மரபைப் பின்பற்றியும் தமிழ்மரபுக்கு ஏற்றாற்போன்றும் அவை மாற்றம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றன.

குறிஞ்சி மக்களின் குலத்தெய்வமாக இருந்த முருகன் அம்மக்களால் வழிபட்டான். குறவர்கள் குரவை கூத்து ஆடி வழிபட்டனர். கடம்பினை வணங்கினர். அந்நிலையிலிருந்து அவன் பிற நில மக்களும் தொழும் தெய்வமாக ஏற்றம் பெற்றமைக்குக் காரணம் அவனைப் 'போர்த்தெய்வமாக உயர்த்தியதே ஆகும். குறவர்களின் வேட்டைக்கருவியான வேலே அவனுக்கும் ஆயுதமாகியது. போரிலே வெற்றி பெற்ற வேந்தர்கள் முருகனோடு ஒப்பிடப்பட்டுள்ளனர்.

### குடும்ப உருவாக்கம்

முருகனைப் போர்த்தெய்வமாக உயர்த்தியபிறகு அவனுக்கான பின்னணியை வலுவானதாக அமைக்க முயன்ற முயற்சியின் விளைவே முருகனுக்கான குடும்ப உருவாக்கம். முருகனின் பெற்றோர் குறித்து வடமரபில்

பல தொன்மங்கள் உள்ளன. பிறப்பு பற்றியும் வேறுவேறு தொன்மங்கள் கூறப்படுகின்றன. ஆனால் அவற்றை உள்வாங்கிக் கொண்டு, தமிழ் மரபிற்கு ஏற்றாற்போன்று தொன்மங்கள் மாற்றிக்கொள்ளப்பட்டன.

முருகன் திராவிடத் தெய்வமான கொற்றவையின் மைந்தனாகக் கூறப்பட்டான் (திருமுருகு. 258). கார்த்திகைப் பெண்டிரின் மகனாக, பார்வதியின் மகனாக, உமையின் மகனாக என்று பல்வேறு பரிமாணங்களில் முருகன் பிறப்பு வடமொழியில் சுட்டப்படுகின்றது.

சிவனுக்கும் உமைக்கும் பிறந்தவன் (பரி.5,8) துணங்கையஞ் செல்வியின் மகன் (பெரும்பாண்.457457).

காஅய் கடவுட் சேஎய் (பரி. 5)

முருகனின் தந்தையாக சிவனும் தாயாக கொற்றவை, உமை போன்றோரை இணைக்கின்றனர். போர்க்கடவுளான கொற்றவைக்கு மகனாக சுட்டப்படுவது பிற்காலச் சிந்தனை ஆகும். முன்பழந்தமிழ் இலக்கியங்களில் 'அயிரைத்தெய்வம்' வெற்றித் தெய்வமாக வணங்கப்பட்டாலும் அயிரையின் மகனாக எங்கும் சுட்டப்படவில்லை.

முருகனின் பிறப்பைக் குறித்து பரிபாடல் (5) விரிவாகக் கூறுகின்றது. கார்த்திகைப் பெண்டிரால் பெற்றெடுக்கப்பட்டவன் என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. முருகன் வடமொழி தொன்மத்திலிருந்து தமிழ்ப் பண்பாட்டிற்கு ஏற்ற மாற்றம் பெற்று வழங்கப்படுகிறான். கார்த்திகைப் பெண்டிரையும் கற்புடையவர்களாகத் தமிழ்மரபு காட்டுகின்றது .

இந்திரனை முருகன் தோற்கடித்தான். இந்திரன் தன் மகளைத் தர, முருகன் மணந்துகொண்டான் வள்ளி, தெய்வயானைக்குமிடையே பூசல் ஏற்பட்டதாகவும் அதனால் இருவரின் தோழியரும் தம்முள் கைகலப்பு நிகழ்த்தினர் என்பதையும் பரிபாடல் (9) விரித்துரைக்கின்றது. ஆரிய மரபிற்கும் தமிழ் மரபிற்குமிடையே நிகழ்ந்த பூசலாகவே இது தோன்றுகிறது. மலையைப் பிளத்தலும் சூரபத்மனை அழித்தலும் கூறப்பட்டுள்ளன.

முருகன், குன்றை வேல் எறிந்து பிளந்த செய்தியைப் பரிபாடல் (5, 8, 19, 21) திருமுருகாற்றுப்படை 266-67) ஆகியவற்றில் காணமுடிகிறது.

குருகு என்றது அன்றிலை. அதற்கு வடமொழிப்பெயர் அதுவாதலின்" (உ.வே.சா. பதிப்பு, 1980, ப.44). குருகு அன்றில் அதற்கு வடமொழியில் கிரௌஞ்சம் என்று பெயராகலின் அப்பறவையின் பெயர்பெற்ற 'கிரௌஞ்சகிரி' என்றவாறு (பொ.வே. சோமசுந்தரனார், 1957, ப.18). இவ்வாறாக முருகனின் பிறப்பு, பெயர் பற்றிய வரலாறு சங்க உரைகளில் கூறப்பட்டுள்ளன.

## தேவர்களை வெல்லுதல்

முருகன் அயனைச் சபித்ததால் அரி, அரன், இந்திரன், யமன், வருணன், சோமன் உள்ளிட்ட தேவர்கள் அனைவரும் பழனிக்கு வந்து இறை இறந்தனர் என்ற தொன்மமும் திருமுருகாற்றுப்படையில் கூறப்பட்டுள்ளது (பரி. 150-174).

இதனால் அவன், அரி, அயன் உள்ளிட்ட அனைத்து தேவர்களையும் கட்டுப்படுத்தியவன். அனைவருக்கும் மேலானவன் என்ற கருத்தாக்கம் உருவானதை உணர்த்துகின்றது. முருகன்பால் ஆற்றுப்படுத்தும் நூலாக இந்நூல் அமைந்துள்ளது.

முருகன் பிறந்தவுடன் தன்னைக் கொல்ல வந்த இந்திரனை ஆயுதமின்றியே போரிட்டு வெற்றி கொண்டதால் தேவர்கள் தம் உடலின் ஒரு கூறினை எடுத்து முருகனுக்குப் பரிசாகக் கொடுத்தனர். அவற்றையே முருகன் தன் பன்னிரு கரங்களில் போர்க்கருவிகளாக ஏந்தியுள்ளான். இந்திரன் மயிலையும் தீக்கடவுள் கோழிச்சேவலையும் எமன் மறியினையும் பிறதேவர்கள் வில், தோமரம், வாள், ஈட்டி, குடாரி, கணிச்சி, கனலி, மாலை, மணி ஆகியவற்றைத் தந்தனர் என்ற தொன்மம் பரிபாடலில் கூறப்பட்டுள்ளது. (பரி.5)

## சூரபத்மனை அழித்தல்

'சூர்' என்ற சொல் மலையுறைத் தெய்வம், வருத்தும் தெய்வம், அச்சம், என்று பொதுவாகவும், சூரரமகளிர், சூர்மகள் என்று பெண்தெய்வமாகவும் குறிக்கப்பட்டுள்ளன. முருகனின் தொன்மங்களில் 'சூர்' என்பது பிற்காலத்தில் 'சூரபத்மன்' என்ற அசுரனாக கற்பிக்கப்பட்டு அவனை முருகன் அழித்ததாக கூறப்படுகின்றன. குறிஞ்சியின் களவுத் தெய்வமாக இருந்த நிலையில் அணங்கு முருகனுடன் சேர்க்கப்பட்டது போல அரசு உருவாக்கச் சூழலில் வீரத்தெய்வமான நிலையில் முருகனுடன் சூர் இணைத்து கூறப்பட்டது. முருகனுக்குப் பகைவன் ஒருவன் கற்பித்துக் கொள்ளப்பட்டான் திராவிடக்

கூறான சூர் முருகனின் எதிரியாக உருவகிக்கப்பட்டான். (பெ. மாதையன், 2001, ப. 79)

சூரபத்மன் கடலுக்கடியில் மறைந்திருந்தான் என்பதை பதிற்றுப்பத்து (31.11.31), புறநானூறு (23.4.5) முதலான நூல்கள் குறிப்பிடுகின்றன.

வெண்டிரைப் பரப்பில் கடுஞ்சூர்
கொன்ற பைம்பூண் சேஎய் பயந்த மாமோட்டுத்
துணங்கையம் செல்விக்கு அணங்கு நொடித்தாங்கு(பெரும்பாண்.457)

மாமரமாய் நின்றவன் என்பது திருமுருகாற்றுப் படையிலும் (60-61) பரிபாடலிலும் (21:28-29), கலித்தொகையிலும் (104-113) கூறப்பட்டுள்ளது. அவன் உருவம்,

இருபே ருருவி னொருபே ரியாக்கை
யறுவேறு வகையி னஞ்சுவர மண்டி
................ ............... ............
மாமுத றடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய் (பரி.57-61)

என்று பரிபாடலில் கூறப்படுகிறது.

## 3. இந்திரன்

'வேந்தன் மேய தீம்புனல் உலகமும்' (தொல். 5) என்பதால் சங்க காலத்தில் மருதநில மக்களின் தெய்வமாக இவன் விளங்கினான் என்பது தெரிகிறது. வேதகால கடவுளாக இந்திரன் வழிபடப்பட்டுள்ளான். இந்திரன் தேவர்களின் தலைவன் என்ற பொருளில் 'வேந்தன்' எனப்பட்டான். ஆனால் 'வேந்தன்' என்ற சொல் சங்க காலத்தில் 'அரசனையே' குறித்தது. தொல்காப்பியம் தவிர வேறு எங்கும் இச்சொல் 'இந்திரனாக' ஆளப்படவில்லை.

இந்திரனுக்குக் கோயில் இருந்தமைக்குச் சங்க இலக்கியங்களில் குறிப்பு இல்லை. ஆனால் சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் குறிப்புகள் உள்ளன.

இந்திரனைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் ஐங்குறுநூறு, புறநானூறு, பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகிய நூல்களில் கிடைக்கின்றன.

துறக்கம் பற்றிய நம்பிக்கை பழந்தமிழரிடையே இருந்தது. அதற்குரிய தலைவனாக இந்திரனைக் கருதினர்.

துறக்கத்து அமரர் செல்வன் (பரி.5:69)

அமரர் செல்வன் (பரி.5:51)

விண்ணோர் வேள்வி முதல்வன் (பரி.5:30)

அருநிலை உயர்தெய்வத்து அணங்கு (பரி.9:12)

வானத்து வளங்கெழு செல்வன் (பரி.5:59)

**3.1 வடிவங்கள்**

நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து (முருகு.155-156)

ஐயிரு நூற்று மெய்ந்நயனத்தவன் (பரி.9:9)

என்பதால் ஆயிரம் கண்ணுடையவன் என்பது உறுதியாகிறது. இப்பெயர் பின்னர் மாற்றம் பெறுகிறது.

**அ. கொடியும் ஊர்தியும்**

ஐராவதமென்னும் யானையை ஊர்தியாக உடையவன் இந்திரன்.

**ஆ. மாலையும் ஆயுதங்களும்**

வச்சிராயுதத்தை ஏந்தியவன் இவன்
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள் (புறம்.241:3)

வச்சிரத்தான் வான வில்லு (பரி. 18:39)

'நெடியோன்' என்ற சொல் இங்கு 'இந்திரனுக்கும் ஆளப்பட்டுள்ளது. 'நெடியோன் கோயில்' என்பது தேவர் உலகத்தைக் குறிக்கிறது.

இவன் கையிலுள்ள வில் 'இந்திரவில்' எனப்படுகிறது. தவிர, வானவில் (பரி. 18: 39) 'விசும்பின் வில்' (அகம்:192:34) திருவில் (புறம்,20:10, அகம்:84:1) 'குறைவில்' (பெரும்பாண். 292) எனவும் வழங்கப்படுகின்றது.

### இ. நிறம்

இந்திரனின் நிறம் பற்றிய குறிப்பு சங்க இலக்கியங்களில் காணப்பெறவில்லை.

### 3.2 உறவுகள்

இந்திரன் முருகனின் பிறப்போடும் தொடர்புபடுத்தப்படுகின்றான். இந்திரன் மகளை முருகன் மணந்தான். (முருகு.6)

### 3.3 வழிபாடுகள்

சைவம், வைணவம், சமணம் ஆகிய மூன்று சமயங்களோடு இந்திரன் தொடர்புபடுத்தப்பட்டு உள்ளான். இந்திரன் சொர்க்கத்தின் அதிபதி என்பதைச் சமண சமயமும் ஏற்கின்றது.

அருகப்பெருமான்" பிறக்கின்றபோது இந்திரன் ஆசனம் அசைகின்றது. அருகப்பெருமானின் பிறப்பை உணர்ந்த இந்திரன் அவரை வரவேற்க தயாராக இருக்கிறான். அவன் மனைவி இந்திராணி, அருகப்பெருமான் பிறந்து தரையில் விழுவதன் முன், அதை தங்கத் தட்டில் ஏந்தி வந்து இந்திரனிடம் கொடுக்க, அவன் அக்குழந்தையை ஐராவதத்தின் மீது வைத்துக் கொண்டு மந்திர மலையை அடைகிறான். அங்குள்ள பாண்டுக சிலை பீடத்தில் அந்தக் குழந்தையை அமர்த்தி, பாற்கடலிலிருந்து ஆயிரமாயிரம் பொற்கலசங்களில் நீரைக் கொணர்ந்து திருமுழுக்காட்டுகின்றனர். இதற்கு 'ஜென்மாபிஷேக கல்யாணம்' என்று பெயராகும்." (க. அருணவசந்தன், 2001, பக்.78) இதனால் சமணமும் இந்திரனைப் போற்றுவதை அறியமுடிகிறது.

### 3.4. விழாக்கள்

இந்திர விழா, முந்நீர் விழா, புதுப்புனல் விழா போன்ற விழாக்கள் முருகனுக்கு எடுக்கப்பட்ட விழாக்களாகும்.

### அ. இந்திர விழா

மருத நிலத்துப்பேரூர்களில் இந்திரனுக்கு விழா எடுக்கப்பட்டுள்ளது. பல்வகைப் பூக்களால் மழைவளம் வேண்டி, வழிபட்டுள்ளனர்.

இந்திரவிழவிற் பூவின் அன்ன (ஐங்.62-1)

இந்திர விழாவினைப் பற்றியச் செய்திகள் சங்க இலக்கியங்களில் மிகுதியாக இல்லை. நற்றிணை, அகநானூறு, பரிபாடல், ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்தில் மட்டுமே உள்ளன. சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றில் இவ்விழா பற்றி விரிவான செய்திகள் உள்ளன.

ஐங்குறுநூறு, பரிபாடல் தவிர பிற இலக்கியங்களில் 'இந்திரன்' என்ற பெயர் சுட்டப்படவில்லை. வேனிற்காலத்தில் நடைபெற்ற இந்திரவிழா மக்களுக்கு அறிவிக்கப்பட்டது. அறிவித்தவன் குயவன் எனப்பட்டான்.

சாறெனை நுவலும் முதுவாய்க் குயவ (நற். 200:4)

பரத்தையர் ஒழுக்கம் மிகுந்திருந்த மருத வாழ்வில் விறலி தூதாக வருகிறாள்.

விழவுக்களம் பொலிய வந்து நின்றனளே (நற்.170)

இந்திரவிழாவின் பொருட்டு மக்கள் தூய்மையான உடைகளையே உடுத்தினர்.

ஆடியல் விழவன் அழுங்கள் மூதூர்
உடையோர் பான்மையின் பெருங்கை தூவா
வறனில் புலத்தி (நற்.90:1-3-9)

விழவும் உழந்தன்று முழவுந் தூங்கின்று (நற்.320:1)

விழவொழி களத்த பாவை போல (நற்.360:2)

இவ்விழாவின் போது தழையாடையணிந்து பரத்தையர் தலைவனோடு கொண்டாடினர்.

ஐதகல் அல்குல் அணிபெறத் தைஇ
விழவிற் செலீஇயர் வேண்டும் மன்னோ (நற்.390:5-6)

தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே (குறுந்.295:2-3)

விழவொடு மகளிரொடு தழூஉவணிப் பொலிவந்து (அகம்.176:15)

காதலர் உழைய ராகப் பெரிதுவந்து
சாறுகொ ளூரிற் புகல்வேன் மன்ற (குறுந்.41:1-2)

பேரூர் கொண்ட ஆர்கலி விழவில்
பொய்தல் மகளில் விழவணிக் காட்டு
மவ்வய னண்ணிய வளங்கே ழுரனைப் (அகம்.26:3-4)

விழவு, சாறு என்பன ஒருபொருட் கிளவிகள்.

தலைவன் புதுப்புனலில் நீராடவில்லை என்பதைத் தெய்வத்தின்மேல் ஆணையிட்டுக் கூறுகிறான்.

ஐயத்தா லென்னைக் கதியாதி தீதின்மை
தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு (கலி.91:7-8)

வையைப் புதுப்புன லாடத் தவிர்ந்ததைத்
தெய்வத்தின் தேற்றித் தெளிப்பேன் (கலி.98:31-32)

சங்க காலத்தே இருந்த இந்திர விழா எத்தனை நாட்கள் நடைபெற்றது என்பது தெரியவில்லை. ஆனால் சிலம்பும் மணிமேகலையும் 28 நாட்கள் நடைபெற்றதாகக் கூறுகின்றன. இன்றும் பேரூர் நொய்யல் ஆற்றுப் பகுதியில் வாழும் தேவேந்திர குல வேளாளர் குலத்தினர் இந்திரனை வழிபட்டு வருகின்றனர். நாற்று நடவு எனும் இந்திர விழா பின்னாளில் சிவனுடன் தொடர்புபடுத்தப் பட்டது. இந்நாற்று நடவு விழா ஆடி 14 ஆம் நாள் தொடங்கி ஆனி 22 வரை நடைபெறுகிறது. 23 ஆம் நாள் நடராசப்பெருமானுக்கு உத்திர மகா அபிஷேக தரிசனமாகவும் நடைபெறுகிறது என்று தே. ஞானசேகரன் 'இந்திர விழா நாற்றுநடவுத் திருவிழா' என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

மழைக்கடவுளான இந்திரன் இன்று மாரியம்மனாக மாற்றம் பெற்று மக்கள் மத்தியில் வழிபடப்பட்டு வருகிறான். மாரியம்மனை 'ஆயிரங் கண்ணுடையாள்' என்று வாழ்த்தியும் மழைக்கஞ்சி வழங்கியும் வழிபாடு நிகழ்த்துவது இந்திர வழிபாட்டையே காட்டுகிறது.

சமயச்சார்பற்ற சமரசம் திகழ்ந்த காலம் சங்ககாலம் என்றாலும் 'பரிபாடல்' காலகட்டத்தில் சைவமும் வைணவமும் தனித்தனியே வளர்வதற்கான அடையாளமாகச் செவ்வேளைப்பற்றியும் திருமாலைப்ப பற்றியும் சிறப்பிக்கும் பாடல்கள் மிகுதியாக உள்ளன. திருமாலை முழுமுதற் கடவுளாக்கும் முயற்சியும் இக்காலத்தே நடந்துள்ளது. முருகனின் சிறப்புக்களைக் கூறும் முயற்சியும் நடந்துள்ளது. திருமாலின் பெருமைகளை விரிவுபடுத்த வேண்டி, மற்ற திணைநிலைத் தெய்வங்களான வருணன், இந்திரன் குறித்த செய்திகள் குறைவாகவும், இழிவாகவும் சுட்டப்படுவதைக் காணமுடிகிறது. மருத நில மக்களின் குலத் தெய்வமாக இருந்த இந்திர வழிபாட்டை அவர்களே மறந்துவிட்டார்களா என்று ஆராய சமுதாய பின்புலத்தை ஆராயவேண்டியுள்ளது.

திருமாலின் அவதாரமான இராம அவதாரத்தைச் சிறப்பிக்க, இந்திரன் பிறன்மனை நயந்தவனாகக் காட்டப்பட்டு, இழிவு செய்யப்பட்டுள்ளான். 'ஆயிரம் கண்களை உடையவன்' என்று மாற்றப்பட்ட நிலையைக் காணமுடிகிறது. கௌதவ முனிவனால் சபிக்கப்பட்டவன் என்று கதைகளைப் பதியவைத்துள்ளனர். அக்கதை கோயிலில் சுவர்களில் செதுக்கப்பட்டிருந்த செய்தியைப் பரிபாடல் கூறுகிறது. எல்லாத் தொன்மங்களும் வடிக்கப்படவில்லை. சிற்பங்களை, ஓவியங்களை வரைவதிலும் ஒரு தணிக்கை முறையைக் கையாண்டுள்ளனர். இராவணன் புறக்கணிக்கப்பட்டதைப் போல இந்திரன் புறக்கணிக்கப்பட்டு, பெயர் மாற்றம் பெற்றுள்ளான்.

> இந்திரன் பூசை, இவள் அகலிகை இவன்
> சென்ற கவுதமன் சினன் உறக் கல்உரு
> ஒன்றியபடி இது என்று உரை செய்குவோரும் (பரி.19:50-52)

என்பதால் இந்திரன் வெறுக்கப்பட்டது உறுதியாகிறது.

### ஆ. முந்நீர் விழா

கடல் தெய்வத்திற்கு முந்நீர் விழா எடுத்து வழிபட்டுள்ளனர். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிபெருவழுதி காலத்தே இவ்விழா எடுக்கப்பட்டுள்ளது.

> முந்நீர் விழவின் நெடியோன்
> நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே (புறம்.9)

இந்திரனுக்காக எடுக்கப்பட்ட விழாக்களில் ஒன்று இந்திரவிழா. முடிந்து கொடி இறக்கப்பட்டபின் சித்திரைத் திங்கள் 30ஆம் நாள் இவ்விழா நடைபெற்றுள்ளது.

### இ. புதுப்புனல் விழா

இவ்விழா கார்காலத்தில் கொண்டாடப்பட்டது. வையை ஆற்றின் வெள்ளப் பெருக்கினைக் கண்டு ஆடவரும் பெண்டிரும் ஆரவாரித்த விழாவாக பரிபாடல் காட்டுகிறது. நாட்டை வளப்படுத்தும் நீர் நிலைகளைத் தொழுது வழிபட்டதை இது காட்டுகின்றது. வையைக்குக் கையுறையாக பொன்மீன், புதுமலர், நறுஞ் சுண்ணம் முதலிய மங்கலப் பொருட்களை வையை ஆற்றில்விட்டு வாழ்த்தி தொழுதனர். திருப்பரங்குன்றில் தலைவியர் தம்மைப் பிரிந்து சென்ற தலைவர் மீண்டு வரும் பொருட்டு செய்யும் தெய்வ விழா என்பர். (கு.வை. இளங்கோவன், 1995, 131)

## 3.5 இந்திரன் பற்றிய தொன்மம்

முருக அவதாரத்தில் இந்திரன் இணைக்கப்படுகிறான். உமாதேவியின் கருவை இந்திரனின் வேண்டுகோளுக்கு இணங்கி, சிவன் சிதைக்க , அக்கருவினை ஏழு முனிவர்கள் பெற்று அக்கினியில் சொரிய, அம்முனிவரின் பத்தினியருள் அருந்ததி நீங்கலாக மற்று அறுவரும் பெற்று சரவணப் பொய்கையில் தாமரைப் பூவில் கருவுயிர்த்தனர். இந்திரன் தன் வச்சிராயுதத்தால் அக்குழந்தையை ஆறு துண்டாக்க ஆறு உறுப்பு ஓருருவாகி இந்திரனோடு போரிட இந்திரன் தோற்றான், முருகனைத் தன் படைக்குத் தலைவனாக்கித் தன் மகள் தெய்வயானையைக் கொடுத்தான். (பரி. 5.21:70) வள்ளியை மணந்தபோது தெய்வயானை அழுதாள் என்று உலகியலும் கூறப்பட்டுள்ளது. (பரி.9:9) பரிபாடல் காலகட்டத்தில் ‘ஆயிரம் கண்ணுடையான்’ என்ற சொற்றொடர் இந்திரனைக் குறித்து ஆயிரம் வேள்விகளைச் செய்தவன் என்ற பொருள் மறைந்து அவன் ஒழுக்கம் தவறியவனாக பிறன் மனைவியை நயந்தவனாகக் காட்டப்பட்டு அத்தொன்மமே இன்று வரை நிலைத்துவிட்டது.

கவுதம முனிவரின் மனைவிமேல் காமங்கொண்டு அம்முனிவரைப் போன்று உருகொண்டு அகலிகையைக் கூடினான். அதனால் முனிவரால்

அகலிகை கல்லானாள் என்பதும் இந்திரன் ஆயிரம் கண்ணுடையவனாக ஆனான் என்பதும் பரிபாடல் காலத்தில் வழக்கிலிருந்துள்ளன. இதனைக் கோயில் சித்திரங்களில் வரைந்து வைத்தனர் (பரி.19:5053) இன்றும் திருமணங்களில் நிகழ்த்தப்படும் 'அம்மி மிதித்தல்' என்ற சடங்கு இதன் பிரதிபலிப்பே ஆகும். இந்திரனைக் குறித்து அபிதான சிந்தாமணி 93 செய்திகளைத் தருகிறது. (பக்.154159)

## 4. வருணன்

வருணன் மேய தீம்புனல் உலகமும் (தொல்.5)

என்று தொல்காப்பியம் நெய்தல் நில மக்களின் தெய்வமாக வருணனைச் சுட்டுகிறது. மீன் பிடித்தல், மீனை விலைக்கு விற்றல், கடலில் முத்து, பவழம் போன்றவற்றை எடுப்பதும் விற்பதும் பரதவர்களின் தொழிலாக இருந்தபோதும் கடலிலிருந்து பெற்ற அனைத்தையுமே அவர்கள் வழிபடவில்லை. தம் வாழ்வாதாரமாகிய கடலையே தெய்வமாக வணங்கினர். கடலாகிய தெய்வத்தின் மேல் சூளுரைக்கும் அளவிற்கு அவர்களின் இறை நம்பிக்கை இருந்தது.

பெருங் கடற்றெய்வம் நீர் நோக்கித் தெளித்து என்
திருந்திழை மென்தோள் மணந்தவன் செய்த (நெ.கலி.131)

என்பதால் இதனை அறியமுடிகிறது.

### 4.1 வடிவங்கள்

நெய்தல் நில மக்களாகிய பரதவர் தாம் கடினப்பட்டு வலைவீசிப் பிடித்த சுறா மீனின் கொம்பையே தாம் வணங்கும் தெய்வத்தின் குறியீடாகக் கருதினர். இதனை.

வீழ்த்தாழைத் தாள் தாழ்ந்த
வெண் கூதாளத்துத் தண்பூங் கோதையர்
சினைச் சுறவின் கோடு நட்டு
மனை சேர்த்திய வல்லணங்கினான்
மடல் தாழை மலர் மலைந்தும்
பிணர்ப் பெண்ணை பிழி மாந்தியும் (பட்டி.85-89)

என்று பட்டினப்பாலைப் பதிவு செய்துள்ளது.

வருணன் மேற்கு திசைக்கு உரிய திசைக் கடவுளாக வணங்கப்பட்டுள்ளான்.

வருணனுக்கு கொடி முதலிய செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை.

பரதவர்களின் வழிபாடு உருவ வழிபாடு சார்ந்ததாக இல்லை. சினையையுடைய சுறாமீனின் கொம்பினை நட்டு, அக்கொம்பினையே தாம் வணங்கும் தெய்வத்தின் குறியீடாகக் கொண்டனர்.

நாற்பெருந் தெய்வத்து நல்நகர் நிலைஇய உலகம் (திருமுருகு.160)

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர் நான்காகிய பெரிய தெய்வத்தையுடைய ஊர்கள் என்றும் நாற்பெருந்தெய்வங்களாவன" இந்திரன், யமன், வருணன், சோமன் என்னும் தெய்வங்கள் என்றும் கூறுவது கருதத்தக்கது. உரையாசிரியர் பரிதியும் நாற்பெருந்தெய்வங்கள் என்பதற்கு மேற்கூறிய நால்வரையே குறிக்கின்றனர். பெருந்தெய்வங்களுள் ஒன்றாக வருணன் குறிக்கப்பட்டாலும் வருணன் குறித்த தரவுகள் குறைவாகவே உள்ளன.

## 4.3 வழிபாடுகள்

பரதவமக்கள் தாழையின் மலரைச் சூட்டிப் பனங்கள்ளை வைத்து படையலிட்டு நிறைமதி நாளான உவாநாளிலே கடலுக்குச் செல்லாமல் இவ்வருண வழிபாட்டை மேற்கொண்டனர். தாமும் தாழையின் மலரைச் சூடினர். படைத்த கள்ளினைப் பருகினர். தாம் விரும்பும் உணவை உண்டனர். வீட்டு முற்றத்தில் பூக்களைத் தூவி வழிபட்டனர்.

செம்பூத்தூய செதுக்குடை முன்றில் (பெரும்பாண்.)

நிலம் காற்பகுதியாக, நீர் முற்காற் பகுதியாகிய கடலுக்குத் தெய்வம் ஆகலின் வருணனை, வல்லணங்கு என்றார். தாழை மலரையும் பனங்கள்ளும் வருண பகவானுக்குச் சூட்டியும் படைத்தும் பின் சூட்டினராகலின் அணங்கினான் என ஏதுவாக்கினார் . பைந்தழை மாமகளிர் என்றது வருணனை வழிபடும் திருநாளாகலின் பசிய தழை ஆடையை உடுத்துள்ள பரத்தியர்

நிறைமதி நாளில் வருணனை வழிபட்டுள்ளனர்." (பொ. வே. சோமசுந்தரனார், 1962, ப.)

கொற்கைத்துறை பழையர் மகளிர் தழையணிந்து கடலாகிய தெய்வத்தை வழிபட்டனர் என்பதை அகநானூறு பதிவு செய்துள்ளது.

**தழையுடை பொலிந்த கோடு எந்து வில்குல்**
**பழையர் மகளிர் பணித்துறைப் பரவ (அகம்.201)**

என்பதால் இதனை அறியலாம்.

பிற மக்கள் வருண பகவானை வழிபட்ட செய்தி சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்படவில்லை. பரதவ மக்களால் வணங்கப்பட்ட வருண வழிபாடும் சங்ககாலத்திற்குப் பிறகு நின்றுவிட்ட நிலையினை உணர முடிகிறது.

**இனமீன் இகல்மாற வென்ற சினமீன்**
**எறிசுறா வான்மருப்புக் கோத்து நெறிசெய்த**
**நெய்தல் நெடுநார்ப் பிணித்து யாத்து**
**பெருங்கடற் தெய்வம் நீர் நோக்கித் தெளித்துஎன்**
**திருந்திழை மென்தோள் மணந்தவன் செய்த (கலி.நெய்.131)**

வருணனுக்கென்று கோயில் இருந்ததாக சங்க இலக்கியங்களில் குறிப்பில்லை.

வருணனுக்கென்று சங்க காலத்தில் திருவிழாக்கள் நடைபெற்றதாக குறிப்புகள் இல்லை.

## 4.5 வருணன் பற்றிய தொன்மம்

நெய்தல் நிலத்தெய்வமான வருணன் குறித்து சங்க இலக்கியங்களில் தொன்மங்கள் எதுவும் குறிப்பிடப் படவில்லை. முருகனின் சாபத்தால் பூமியை அடைந்த பிரம்மனுக்காகவும் தம் தொழில்களை மீண்டும் பெறுவதற்காகவும் தேவர்கள் முருகனை நாடி வேண்டினர். அப்போது திருமால், இந்திரன் உள்ளிட்ட தேவர்களோடு வருணனும் முருகனை நாடி நின்றான் என்று திருமுருகாற்றுப்படைக் கூறுகிறது.

**தொகுப்புரை**

நெடியவன் என்ற சொல் மாயோன், முக்கண்ணன், இந்திரன் ஆகிய மூவருக்குமே ஆளப்பட்டுள்ளது. திணை நிலைத் தெய்வங்களாக மாயோன், சேயோன், இந்திரன், வருணன் ஆகிய நால்வரையும் குறிப்பிடுகின்றது தொல்காப்பியம். இவர்களுள் மாயோன், சேயோன் குறித்த செய்திகளே மிகுதியாக உள்ளன.

பிற்காலத்தில் எழுந்த, வைணவ சமயத்தின் பல கூறுகளைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகின்றது. இறைவனுடைய வடிவங்களாகிய விண்ணாட்டு நிலை, அணி வகுப்பு நிலை, பிறப்பு நிலை, உள்ளுரை நிலை, வழிபடு நிலை ஆகியவற்றைப் பரிபாடல் கூறுகிறது. திருமாலின் அவதாரங்களில் மச்சம், கல்கி தவிர்த்து மற்ற அவதாரங்களைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. மானோனுக்குரிய கொடி, வாகனம், மாலை, ஆயுதங்கள் போன்றவை பல இடங்களில் சுட்டப்படுகின்றன.

திருவனந்தபுரம், திருவெஃகா, திருமாலிருஞ்சோலை, இருந்தையூர், குளவாய், திருவரங்கம் ஆகிய இடங்களில் கோவில்கள் இருந்தன. மக்கள் உண்ணா நோன்பிருந்து விழாக்கள் எடுத்து வழிபட்டுள்ளனர்.

முல்லை நில மக்களின் தெய்வமாக இருந்த அனைத்து மக்களும் வணங்கும் தெய்வமாக ஏற்றம் பெற்றதைப் பரிபாடல் காட்டுகிறது. இறைவனின் அவதாரங்கள், உலகத் தோற்றம் பற்றிய கொள்கை போன்ற வைணவக் கோட்பாடுகளின் வித்தாக சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

இனக்குழுவின் கடவுளாக விளங்கிய முருகன் இயல்பாக தமிழ் மரபோடு வணங்கப்பட்டான். வேள்வி இல்லை, மந்திரமில்லை, கிடைத்ததைக் கொண்டு பலியிட்டனர். வெறியாட்டு நிகழ்த்தப்பட்டது. நாட்டாரின் சடங்காகிய ஆகாச பூசை நிகழ்த்தப்பட்டது. முருகன் தனிக் கடவுளாகவே வழிபடப்பட்டான்.

அதன்பின் வடபுல கந்தனை இணைக்கும் விதமாக அசுரர்களை சூரபத்மனை அழிக்கும் போர்க்கடவுளாகிய கொற்றவைக்கு மைந்தனாக இணைக்கப்பட்டான். தமிழ் மரபுப்படி வள்ளியைக் களவுமணம் புரிந்தான். இந்திரனின் மகளை இந்திரன் கொடுக்க மணந்தான். இந்திரனுக்கு மருமகனாக

ஏற்றம் பெற்றான். பிரணவ மந்திரத்தின் பொருள் தெரியாத விழித்ததால் பிரம்மனை அடிமைப்படுத்தினான். கிரெளஞ்ச மலையைப் பெயர்த்தான். கார்த்திகைப் பெண்டிரால் வளர்க்கப்பட்டான் என்று பல்வேறு தொன்மங்கள் உருவாக்கப்பட்டு முருகன் புராணமாக்கப்பட்டான். குறிஞ்சி மக்களின் குலதெய்வமாக இருந்த முருகன் அனைவராலும் வணங்கக்தக்கவனாக அதிக அளவில் கோவில்கள் கொண்டவனாகவும் வைதீக வழிபாட்டு மாற்றப்பட்டவனாகவும் ஏற்றம் பெற்றான்.

முருகனுக்கென்று அக்காலத்தே பங்குனி உத்திர விழா, கார்த்திகைத் திருவிழா, உள்ளி விழா போன்ற திருவிழாக்கள் கொண்டாடப்பட்டுள்ளன.

மருத நிலைக் கடவுளுலீக இந்திரன் குறிக்கப்பட்டாலும் தொல்காப்பியம் தவிர, வேறு எங்கும் 'வேந்தன்' என்ற சொல் இந்திரனைக் குறிப்பதாக ஆளப்படவில்லை. இந்திரன் 'அமரர் தலைவன்' என்று குறிக்கப்படுகிறான். அவனுக்குரிய ஊர்தி, மாலை, ஆயுதங்கள் கூறப்படுகின்றன. இந்திரனுக்கு விழுழ எடுக்கப்பட்ட செய்தியை ஐங்குறுநூறு கூறுகிறது. ஆனால் எப்படி விழா எடுக்கப்பட்டது என்பது பற்றி விரிவான செய்தி சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் 'இந்திர விழா' தனி காதையாகவே விரித்து உரைக்கப்படுகின்றது.

இந்திரன் 'ஆயிரம் கண்ணுடையவனாக' கற்பிக்கப்பட்ட பிறகு செல்வாக்கு இழந்த நிலையே காணப்படுகிறது.

வருணன் நெய்தல் நிலத்துக்குரியவனாக குறிக்கப்பட்டாலும் வருணனைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் மிகுதியாக காணப்படவில்லை. மற்ற தெய்வங்களுக்கு குறிப்பிடப்பட்டதைப் போல தோற்றமோ, படையோ, நிறமோ, ஆயுதமோ, விழாவோ, கோயிலோ வருணனுக்குக் குறிக்கப்படவில்லை. நெய்தல் நில மக்கள சுறாக் கொம்பை நட்டு வழிபட்ட செய்தியைக் குறிப்பிடுகின்றது.

"மாயோன் மேய" என்று தொடங்கும் தொல்காப்பிய நூற்பாவில் நானிலங்களுக்குரிய தெய்வங்கள் வரையறுக்கப்பட்டமை யாவரும் அறிந்த ஒன்று. அந்நூற்பாவின்படி குறிஞ்சிக்கு முருகனும் முல்லைக்குத் திருமாலும் மருதத்துக்கு வேந்தனும் நெய்தலுக்கு வருணனும் கடவுளர் ஆவர். ஆனால் பண்டைத் தமிழரால் வணங்கப்பட்ட தெய்வங்கள் இவர்கள் மட்டுமே என்று எண்ணுதற்கில்லை. சிவன், வாலியோன், (பலராமன்) சந்திரன், ஞாயிறு, திருமகள், நான்முகன், கூற்றுவன், காலன் போன்ற பல கடவுளரைப் பற்றிய குறிப்புகள் சங்க நூல்களில் காணப்படுகின்றன. மேலும் சிறு தெய்வங்கள் என்று கொள்ளப்படுகின்ற நடுகல் தெய்வம், பேய், பேய்ப்பெண்டிர் முதலியோரை வழிபட்ட குறிப்புகளும் சங்க நூல்களில் காணப்படுகின்றன.

திணைநிலைத் தெய்வங்களின் வேறாக சங்க நூல்களுள் நான்முகன், வாலியோன், காலன் சிவன் முதலான கடவுளர் பற்றிய குறிப்புகளைக் காணுகின்றோம். இவர்களுள் சிவபெருமான் பரம்பொருள் நிலையிலும் பிற தெய்வங்கள் திணைநிலைத் தெய்வங்களாகவும் சிற்சில துறைப்பட்ட கடவுளராகவும் கொள்ளப்பட்டனராதல் வேண்டும். என்று பேரா. ஆ. சீநிவாச ராகவன், 25.1.68 அன்று குருசாமிக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். (ம.ரா.போ. குருசாமி, 1974, ப.80).

சமயக் காழ்ப்புணர்ச்சி எழாத சங்க காலத்தில் திணைநிலைத் தெய்வங்களாக மாயோன், சேயோன், இந்திரன், வருணன் ஆகிய நால்வரை மட்டுமே தொல்காப்பியம் சுட்டுகின்றது. காரணம், இத்தெய்வங்கள் குறிப்பிட்ட நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்களின் குலத்தெய்வமாக இருந்திருக்கவேண்டும். இவற்றுள் இந்திரன் வழிபாடு ஆரியர் கலப்பால் ஏற்பட்டது. வருண வழிபாடும் தமிழகத்தில் பெருஞ்செல்வாக்கு பெற்றிருக்கவில்லை. இவ்விரு வழிபாடுமே இன்று தமிழகத்தில் பெரு வழக்கிலில்லை.

## 1. சிவன்

'சிவ' வழிபாடு சங்க காலத்திற்கு முற்பட்ட காலந்தொட்டே தமிழகத்தில் இருந்துள்ளது. 'சிவன்' என்ற பெயரால் சங்க இலக்கியங்களில் எங்கும் குறிப்பிடப்படவில்லை. ஆனால் சிவனின் தோற்றம், பண்புகளைக் கொண்டு பெயர் வழங்கப்பட்டு வணங்கப்பட்டு உள்ளது. பிற்காலத்தே தோன்றிய

சைவசமயத்தின் முழுமுதற் கடவுளாக ஏற்றம் பெற்று விளங்குவது சிவவழிபாடே ஆகும்.

சிவ வழிபாடு தமிழகத்திலும் இந்தியாவிலும் மட்டுமன்றி உலகின் பல நாடுகளில் இருந்துள்ளது. தொல்லியல் ஆய்வுகளும் சமூக ஆய்வுகளும் வரலாற்று ஆய்வுகளும் இதனை உறுதிசெய்துள்ளன. இதனால் சிவவழிபாட்டின் பழமை நன்கு விளங்கும்.

சிந்துவெளி நாகரிக காலத்திலேயே சிவவழிபாடு இருந்துள்ளது என்பதைத் தொல்லியல் ஆய்வுகள் கூறுகின்றன.

மொகஞ்சதாரோவில் கிடைத்த இலச்சினையில் பொறிக்கப்பட்ட உருவம் சிவனுடைய பசுபதி உருவம் என்று ஜான் மார்ஷல் கருதுகிறார். இவ்விலச்சினையில் பொறிக்கப்பட்டுள்ள உருவம் ஓர் பீடத்தின் மேல் அமர்ந்து கொண்டு கால்களை மடக்கிக் குதிகால்கள் இரண்டும் ஒன்றையொன்று தொடும் வண்ணம் யோகம் செய்வது போல இருக்கிறது. இவ்வுருவம் ஆடையின்றி கழுத்தில் ஆரமும் கையில் கடகமும் அணிந்திருக்கிறது. தலையில் இரு கொம்புகள் உள்ளன. இவைகளுக்கிடையில் ஏதோ ஒன்று செடிபோன்று காணப்படுகின்றது. இவ்வுருவத்தின் வலப்புறத்தில் புலியும் யானையும் இடப்புறத்தில் காண்டாமிருகமும் எருமையும் இருக்கின்றன. இவ்வுருவத்தின் முகம் கடும் புலியின் தோற்றம் போல் காணப்படுவதால் அது மனித முகம் இல்லை என்ற கருத்தும் வலப்பக்கமும் இடப்பக்கமும் சிறு புடைப்புகளையும் இருவேறு முகங்களெனக் கொண்டு இவ்வுருவம் முந்து சிவன் என்றும் இவ்வுருவம் மூன்று முகங்களை உடையதாக இருப்பதாலும் யோக நிலையில் அமர்ந்திருப்பதாலும் இதைச் சுற்றி விலங்குகள் இருப்பதாலும் இது சிவனுடைய உருவமே என்றும் உருவத்தின் மூன்று முகங்கள் சிவ, விஷ்ணு, பிரம்மா ஆகிய மும்மூர்த்திகளுடைய முகங்கள் என்றும் சர். ஜான் மார்ஷல் கூறுவது சிந்துவெளி நாகரிக காலத்திலேயே சிவவழிபாடு இருந்தது என்பதற்கு ஆதாரமாக உள்ளது.

தொன்மையான நினைவுச் சின்னங்களான வேதங்களிலும் சிவன் என்ற சொல்லாட்சி காணப்படுகின்றது. 'ஏபி சிவா' (ருக்குவேதம் 10:92:9)

'ருத்ரசிவா' சுவேதாஸ்சதா உபநிடதம் (3:5) சிவனுக்கு மற்றொரு பெயரான 'ருத்திரன்' என்பதற்கு சுவேதாஸ்தா உபனிடதம், பின்வருமாறு பொருள் கூறுகிறது.

உருத்திரன், மக்கள் ஒழுக்கங்கெட்டுக் குழப்பத்தை உண்டாக்கியபோது உயிரினங்களை அழித்து மீண்டும் உயிரினங்களைப் புதுமையாகப் படைப்பவன்" என்று (4:14) பொருள் கூறுகிறது.

உருத்திரன் தீக்கடவுள் என்பது அதர்வன வேதத்திலும் (7:8:7) பொன்னார் மேனியன் என்பது ருக்குவேதத்திலும் (1:4:5), (1:114:5) (2:33:8) (7:29:5) அக்கினி தேவனே உருத்திரன் என்று அழைக்கப்படுகிறான் என்று ருக்குவேதத்திலும் (1:72:5), அக்கினி தேவனே உருத்திரன் என்று அழைக்கப்படுகிறான் என்று இருக்குவேதத்திலும் (த்வம் அந்நே ருத்ரோ 2:16) மேருவை வில்லாக வளைத்த செய்தி (இருக். 6:16:39, 7:6:2) போன்ற பல்வேறு செய்திகள் ஒத்திருப்பதை அறிய முடிகின்றது.

மறைமலையடிகள் இருக்குவேதத்தில் இடம்பெற்றுள்ள ருத்ராய தவஸே' கபர்திநே ஷயத் வீராய (1:114:1) என்ற பாடலை எடுத்துக் காட்டி, 'கபர்திநே' என்ற சொல்லுக்கு 'சடையன்' என்றே பொருளென்றும் 'சடையன்' என்று தமிழிலும் 'கபர்திநே' என்று வடசொல்லாலும் குறிக்கப்படும் கடவுள் 'சிவனே' என்றும் உறுதிபடுத்துகிறார். (மறைமலையடிகள், 1974, பக்.118-119)

(லிங்க புராணம், சிவபுராணம் போன்றவற்றிலும்) வேதகாலத்தில் சிவன் பற்றிய செய்திகள் இருப்பினும் இந்திரனே முக்கிய கடவுளாக வணங்கப் பட்டிருக்கிறான். சிவனை வழிபடுவோரை சிஸ்னதேவ" என்ற இனத்தவராக இருக்கு வேதம் (7:21:5) கூறுகிறது. மேலும் ஆரியர்கள் சிவனை வழிபடுவோரை 'சிஸ்ன தேவ' என கேவலமாக அழைத்துள்ளனர். ஆரியரல்லாத பக்தா, பலானா, அலினா, சிவா, விஷானின் ஆகியோர் ஒன்று சேர்ந்து ஆரியர்களான திருத்ஸீவை எதிர்த்துப் போர் புரிந்தார்கள். ஆரியருக்கு இந்திரன் உதவி புரிந்தான் என்றும் ரிக்கு வேதம் கூறுகிறது. (7:18:7) இதனால் வேதகால ஆரியர்கள் சிவனையும் சிவனை வழிபட்டோரையும் ஏற்கவில்லை என்பதால் சிவன் ஆரியர்குரியவன் அல்லன் என்பது தெரிகிறது.

ஆயினும் தமிழர் மரபில் சிவழிபாடு சிறப்புற்றிருந்த போதும், தொல்காப்பியர் அதனை குறிப்பிடாதது வியப்பே.

மகாபாரதம், சிவபுராணம், லிங்க புராணம் போன்றவற்றில் லிங்கம் தோன்றிய சூழல்களைப் பார்க்கும்போது (இராமன் லிங்கத்தை வழிபட்டது, சீதையை மணக்க சிவதனுசுவை உடைத்தது, கிருஷ்ணர் சிவலிங்க பூஜை செய்தது. அர்ச்சுனனுக்கு சிவன் 'பாசுபதம்' என்ற வில்லைத் கொடுத்தது.) கிருஷ்ண அவதாரம், இராம அவதாரம், பஞ்சபாண்டவர் வரலாறு போன்றவற்றுக்கெல்லாம் முற்பட்ட பழமையான வழிபாடு சிவ வழிபாடு என்பது தெளிவாகிறது.

## 1.2 வடிவங்கள்

நெற்றிக் கண்ணோடு மூன்று கண்களை உடையவன்.

| | |
|---|---|
| முக்கண்கள் | (முருகு.153) |
| முக்கணான் | (கலி.2:4) |
| முக்கணான் | (கலி.104:10) |
| முக்கட் செல்வன் | (அகம்.181:16) |
| பைங்கட் பார்ப்பான் | (பரி.5:27) |
| பசுங்கட் கடவுள் | (கலி.101:24) |
| இமையா முக்கண் | (முருகு.153) |
| இறைநுதல் விளங்கு மொருகண் | (புறம்.55:5) |

சிலப்பதிகாரம், நாலடியார், இனியவை நாற்பது. இன்னா நாற்பது போன்றவற்றிலும் சிவனுக்கு மூன்று கண்களென்ற குறிப்பு காணப்படுகிறது.

சிவந்த சடையினையும் உடையவன் என்பதற்கும் சான்றுகள் உள்ளன.

| | |
|---|---|
| எரிமருள் அவிர்சடை | (புறம்.56:1) |

நன்று ஆய்ந்த நீள் நிமிரிசடை
முது முதல்வன் (புறம்.166:1-2)

தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே (புறம்.க.வா.1:13)

மிக்கொளிர் தாழ்சடை (கலி.104:11)

போன்ற சான்றுகளால் இதனை அறிய முடிகிறது.

பிறையைத் தன் தலையில் சூடியவன் சிவன். இக்கடவுளைத் தவிர வேறு கடவுளர்க்கு இச்சிறப்பும் ஒப்பனையுமில்லை.

புதுத்திங்கட் கண்ணியான் (கலி.100)

முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி (அகம்.க.வா.1:11)

கொலைவன் சூடிய குழவித் திங்கள் (கலி.102:15)

எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்கண் (கலி.103:25)

மேற்கண்ட சான்றுகள் இதனை உறுதி செய்கின்றன.

“நஞ்சை உண்டதால் கறுத்த கழுத்தினை உடையவன். இதனால் காரியுண்டிக் கடவுள்” என்று (மலை.83) போற்றப்பட்டவன். இதற்குச் சங்க இலக்கியங்களில் பல சான்றுகள் கிடைத்துள்ளன.

கணிச்சியோன் மணிமிடற்றணி (கலி.105:13)

மணி மிடற் றந்தணன் (அகம்.க.வா.1:15)

மறுமிடற் றண்ணல் (பரி.8:127)

மணிமிடற் றெண்கையாய் (கலி.க.வா.1:4)

மணிமிடற்று மாண்மலர்க் கொன்றையான் (கலி.142:27-28)

கொன்றைத் தார் சுவற்புரள (கலி.க.வா.1:11)

கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன் (அகம்.க.வா.1-2)

மாண்டலர்க் கொன்றையவன் (கலி.142:28)

தேறுநீர் சடைக்கரந்து (கலி.க.வா.1:2)

மழைதலை வைத்தவர் மணிநெடுங் குன்றே (ஐங்.207:4)

நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே (புறம்.1:2-13)

எரிமலர்த் தாமரை யிறைவீழ்த்த பெருவாரி
விரிசடைப் பொறை யூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்
தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி (பரி.9:4-6)

போன்ற பாடலடிகளால் இதனை உறுதிசெய்யலாம். கர்நாடகா மாநிலத்தில் மைசூர் அருகே நஞ்சன்கூடு என்ற ஊரில் நஞ்சுண்டீசுவரர் ஆலயம் உள்ளது.

இத்தெய்வத்தின் தோற்றம் குறித்து அகநானூற்றுக் கடவுள் வாழ்த்திலும் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்திலும் பாரதம் பாடிய பெருந்தேவனார் விரிவாகக் கூறுகின்றார். இப்பாடல்கள் தவிர, கலித்தொகை, புறநானூறு, பரிபாடல், ஐங்குறுநூறு, திருமுருகாற்றுப்படை, மலைபடுகடாம் போன்ற இலக்கியங்களில் திருவுருவக் காட்சிகள் கூறப்பட்டுள்ளன.

முக்கண்ணனாகிய இத்தெய்வம் அந்திவானம் போன்ற செந்நிறம் உடையது.

வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து
உருஉடன் இயைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடல்அணி கொளாஅ
வந்த மாலை பெயரின் (அகம்:360:6-9)

செவ்வான் அன்ன மேனி (அகம்.கடவுள்.வாழ்த்.8)

அரும்பெறல் ஆதிரையான் அணிபெற மலர்ந்த
பெருந்தண் பசண்கபம் போல (கலி.150:20-21)

மிக்கு ஒளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்
முக்கணான் உருவேபோல் முரண்மிகு குராலும் (கலி. 104:11-12)

மேற்கண்ட சான்றுகளால் முக்கண்ணனின் நிறம், குரால் சண்பகம், அந்திவானம் போன்ற சிவப்பு நிறம் என்பது விளங்குகிறது. தொல்காப்பியர் குறிப்பிடும் 'சேயோன்' என்ற சொல் முக்கண்ணனையே குறிக்கும் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர்.

சிவ வழிபாடு அன்பு மேலீட்டால் நன்றிப் பெருக்கால் பல உருவங்களில் வெளிப்படும் நீர்மையுடையது. அவற்றில் ஒன்று ஒளி. இது கைபுனைந்தியற்றா கவின்பெறு வனப்பாய் அமைவது. தொல்காப்பியர் காட்டும் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றனுள் கொடிநிலையும் வள்ளியும் ஒளிவழிபாடாகும். அவை முறையே ஞாயிற்றொளியாய், திங்கள் ஒளியாய் விளங்கும்." (ஐ. அண்ணாமலை. 1983, பக்.34)

சேயோன் என்ற சொல். முருகனையும் முக்கண்ணனையும் குறிக்கும் பொதுச் சொல்லாகவே இருந்திருக்கிறது. தொல்காப்பியர் சுட்டும் 'சேயோன்' சிவபெருமானையும் முருகனையும் குறித்திருக்கவேண்டும். கிறித்துவ மறையான பழைய ஏற்பாட்டில் குறிக்கப்படும் 'சியன்' என்ற கடவுளைப் பற்றி ஆராய்ந்த மேனாட்டு ஆராய்ச்சியாளர் 'சியன்' என்பது 'சிவன்' என்பதுவே. அது பழைய ஏற்பாட்டில் குறிக்கப்படும் 'சிவன்' என்பதுவே. அது பழைய ஏற்பாட்டில் சிறிது வேறுபாடுடன் திரித்து வழங்கப்பட்டது என்று குறித்துள்ளனர். (நாதன்.1959. ப.22)

சேயோன் மேய மைவரை உலகமும்" என்பதிலும் முக்கண்ணனுக்குரியதும் மலையே என்பதும் இங்கு பெறத்தக்கது.

எட்டு கரங்களை உடையவன் சிவன்.

மாறாப் போர் மணிமிடற்று எண்கையாய் **(கலி.14)**

பிற்காலத்தில் 'எண்குணத்தான்' என்று இக்கடவுளே போற்றப்படுகிறார்.

எண்குணத்தான்' (குறள்.1:9), சூரியன், சந்திரன், இயமனன், நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு எனும் எட்டுவகையாகச் சிவனிருப்பதை மணிமேகலையும் காட்டுகிறது. சிவனின் எண்வகை குணங்களைப் பிங்கல நிகண்டும் கூறுகிறது. பவமின்மை, இறவின்மை, பற்றின்மை, பெயரின்மை,

உவமையின்மை, ஒருவினையின்மை, குறைவிலறிவுடைமை, கோத்திரமின்மை" (தி. சிவன்பிள்ளை, ப.17) ஆகியன ஆகும்.

புலித்தோலையும் யானைத்தோலையும் ஆடையாக அணிந்தவன்.

வரிகிளர் வயமான் உரிவை தைஇய (அகம். க.பா.1:14)

கொலை உழுவைத் தோலசைஇ (கலி.க.வா.1:11)

ஆனைத்தோல் போர்த்து (சிலம்பு. 2:7:1)

## அ. கொடியும் ஊர்தியும்

இறைவனை மரம், பூ, வாகனம், கொடி என்று ஒவ்வொரு தெய்வத்தையும் குறிப்பிட்ட அடையாளத்தோடு வழிபட்டுள்ளனர். சிவன் வெள்ளை ஏற்றையே ஊர்தியாகவும் கொடியாகவும் உடையவன் என்பதை பின்வரும் பாடல்களால் அறிய முடிகிறது.

புங்கவ மூர்வோன் (பரி. 2:2)

வெள்ளேறு வலவமா னுயரிய பலர்புகழ் திணிதோள் (முருகு.151-152)

ஆனேற்றுக் கொடியோன் (கலி.26:5)

ஏற்றூர்தியான் (கலி.150.13)

முப்புரம் எரித்த சாம்பலைத் தன் மேனியில் அணிந்தவன் என்பதையும் கலித்தொகை உணர்த்துகிறது.

மண்டமர் பலகடந்து மதுகையால் நீறு அணிந்து (கலி.க.வா.1.8)

ஆண் தெய்வங்களுக்கு இணையாக பெண் தெய்வங்களை இணைக்கின்ற போக்கினைச் சங்க இலக்கியங்களிலே காணமுடிகிறது.

முக்கண்ணனின் துணையாக, உமையவள் சுட்டப்படுகிறாள். இதற்கு,

நீலமேனி வாலிழை பாகத் தொருவன் (ஐங்.க.வா.1:1-2)

உமையர்ந்து விளங்கும் இமையா முக்கண் (முருகு.153)

உமையொடு புணர்ந்த காம வதுவையுள் (பரி.5.28)

போன்ற சான்றுகள் ஆதாரமாக உள்ளன.

சிவனுக்கு உகந்த நட்சத்திரம் ஆதிரை என்று கூறப்படுகிறது.

ஆதிரை முதல்வன் (பரி.8:6)

ஆதிரையான் (கலி.150:20)

இன்றும் சிவபெருமானுக்கு இப்பெயர் வழங்கப்படுகிறது.

### ஆ. மாலையும் ஆயுதங்களும்

கொன்றை மாலை சிவனுக்கு உரியதாக உள்ளது. தலையில் கொன்றை மாலையையும் சங்கையும் அணிந்தவன்.

கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை (புறம்.க.வா.1:1-2)

அயம்திகழ் நறுங்கொன்றை அலங்கல்அம் தெரியலான் (கலி.150:1)

நீல மணி மிடற்று ஒருவன் (புறம்.91:6)

கறை மிடற்று அண்ணல் (புறம்.55:4)

மணி மிடற் றோன் (புறம்.56:2)

கணிச்சி, மழு, சூலம், வேல், வில் போன்ற ஆயுதங்களையுடையவன்.

சீறருங் கணிச்சியோன் (கலி.2:6)

எரிதிகழ் கணிச்சியோன் (கலி.105:13)

அறைவாய் சூலம் (சிலம்பு.11:73)

மழுவான் நொடியோன் (மது.455)

மாற்றருங் கணிச்சி மணிமிடற்றோன் (புறம்.56:2)

என்பன இதனை உறுதிசெய்கின்றன.

## 1.3 வழிபாடு

உலகின் பல்வேறு நாடுகளிலும் சிவனை வழிபட்ட செய்தியையும் சிவன்' என்ற பெயரில் பல இடங்களும், பெயர்களும் வழங்கப்பட்டிருந்ததையும் டி.எ.வி. நாதன் அவர்கள் தொல்லியல் மற்றும் பிறமொழி அறிஞர்களின் நூல்கள் ஆகியவற்றைக் கொண்டு நிறுவியுள்ளார்.

வடஅமெரிக்காவில் 'கோலறடோ' என்ற ஆற்றின் பக்கத்திலுள்ள குன்றின் மீது சிவன் கோயில் என்ற இடம் உள்ளது. அவ்விடம் 16,000 ஆண்டுகளுக்கு முற்பட்டது. அமெரிக்கர்கள் கோயில்களைக் கட்டி லிங்கங்களை வைத்து வழிபட்டுள்ளனர். மெச்சிகோ, பசிபிக் தீவுகள் போன்றவற்றிலும் இவ்வழிபாடு இருந்துள்ளது. நடுத்தரைக் கடலில் 'கீரீட்' என்ற தீவில் இருந்த நகரங்களில் 'சிவன்' என்ற நகரமும் ஒன்று. அங்கு நிலத்திற்கடியிலிருந்து எண்ணற்ற சிவலிங்கங்கள் ஆராய்ச்சியாளரால் கண்டெடுக்கப்பட்டன. சிறிய ஆசியாவில் இடபத்தின் மீது வீற்றிருக்கும் தெய்வவழிபாடும் இடபவழிபாடும் இருந்தன. அங்கிருந்த பழைய நகரங்களில் ஒன்றின் பெயர் 'சிவாஸ்' என்பது ஹிட்டைட் என்ற நாட்டில் சிங்க ஊர்தியில் வீற்றிருக்கும் அம்மையும் இடப ஊர்தியில் நிற்கும் அப்பனும் பொறிக்கப்பட்டுள்ளனர். வட ஆப்பிரிக்காவில் உள்ள பாலைநிலத்து பசுந்தரையின் பெயர் சிவன். 6000 ஆண்டுகளுக்கு முற்பட்ட நாகரிகம் கொண்ட வடஅரேபியாவில் கிடைத்த களிமண் ஏடுகளில் சிவன் தொடர்புடைய இடப்பெயர்களும் சிவன் பாதமும் குறிக்கப்பட்டுள்ளன. சுமேரியர் காலத்திலிருந்த 'அக்கேடியா' நாட்டில் சிறப்பானதாக கருதுப்பட்ட ஏழு விண்மீன்களில் ஒன்று 'சிவன்' எனப் பெயர் பெற்றிருந்தது. மோசே என்பவர் யகோவா அருளிய 'பத்துக் கட்டளைகளையும்' சிவன் என்னும் மாதத்தில் ஆறாம் நாள் சினாய் மலைமீது நின்று மக்களுக்கு எடுத்துக் கூறினார் என்று கிறித்துவ மறையின் பழைய ஏற்பாடு தெரிவிக்கிறது" (நாதன், 1959. பக்.20 22). 'சிவன்' என்ற சொல்லாட்சி தெய்வத்தோடு தொடர்புடையதாக உலகின் பல பகுதிகளில் வழங்கப்பட்டிருத்தலால் இவ்வழிபாட்டின் தொன்மை புலனாகிறது.

ஆரியர்க்கு முற்பட்ட சிந்துவெளி நாகரிகத்தில் சிவன் விலங்குகளின் தலைவன் என்று பொருள்படும் 'பசுபதி' என்ற இலச்சனை, தொல்லியல் அறிஞர்களால் நிரூபிக்கப்பட்டிருப்பது இந்தியாவில் சிவன் வழிபாடு

தொன்றுதொட்டு இருந்ததை வலியுறுத்துகிறது. சர். ஜான் மார்ஷல் உள்ளிட்ட அறிஞர்கள் இதனை உறுதிசெய்துள்ளனர்.

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய நூல்களில் 'சிவன்' என்ற சொல்லாட்சி எங்குமில்லை. ஆனால் பிற்காலத்தே சிவன், உருத்திரன், ஈஸ்வரன் என்று வழங்கப்பட்ட இறைவனைப் பற்றிய குறிப்புகள் கிடக்கின்றன.

முக்கண்ணன், (கலி.2:4), முருகண்கள் (முருகு.153), முக்கணான் (கலி.104:10), முக்கட்செல்வன் (அக.181:16), நீல மணிமிடற்று ஒருவன் (புறம்.91:6), புதுத் திங்கள் கண்ணியான் (கலி.150:17), முது முதல்வன் (புறம்.166:20), சடைகரந்தான் (கலி.150:9), கறைமிடற்று அண்ணல் (புறம்.55.4), கணிச்சியோன் (கலி.103:25), ஆதிரையான் (கலி.150:20) ஆகிய சொல் வழக்ககள் சிவனையே குறிக்கின்றன.

## 1.4 கோயில்கள்

பாண்டிய அரசன் பல்யாகசாலை முதுகுடுமி மதுரையில் சிவன்கோயிலை வலம்வந்து சிவனை வணங்கினான் என்பதை புறநானூறு (6.18-19) கூறுகிறது.

முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே
இறைஞ்சுக பெருமநின் சென்னி (புறம்.6)

என்ற அடியால் இதனை அறிய முடிகிறது.

நவிர மலையில் காரியுண்டி கடவுள்" என்று சொல்லப்பட்ட சிவன் கோயில் இருந்தது என்று மலைபடுகடாம் கூறுகிறது. இதனை,

பேரிசை நவிர மேஎ யுறையுங்
காரி யுண்டிக் கடவுள தியற்கையும் (மலை.82-83)

என்பதால் அறியலாம்.

முக்கண்ணனுக்குக் கோயில் இருந்துள்ளது என்ற செய்தியைப் புறநானூறும் பதிவு செய்துள்ளது.

முக்கட் செல்வன் நகர் (புறம்.6)

இங்கு நகர்” என்பது கோயிலையே குறிக்கிறது.

தவிர ஆலமரத்தின் மரத்தடியுமே சிவன் எழுந்தருளுமிடமாக இருந்துள்ளது.

**முக்கட் செல்வர் ஆலமுற்றம் (அகம்.181)**

**ஆலமர் செல்வன் (சிறுபாண்.96)**

என்பவை இதற்குச் சான்றுகளாகும்.

புறம் 56ஆம் பாடலில் சிவன், வாலியோன், திருமால், முருகன் ஆகிய நான்கு தெய்வங்களைப் பற்றிய குறிப்பு வருகிறது. இவர்களில் திருமாலும் முருகனுமே கருப்பொருள் வரையறைக்குள் அடங்குவர். சிவனும் வாலியோனும் வரையறைக்கு மீறியவர்” (ம.ரா.போ. குருசாமி, 1974, ப.78) என்பது இதனால் விளங்குகிறது.

மதுரையில் உள்ள சிவன் கோயில்களில் விழாக்களும் நடத்தப்பட்டுள்ளன.

எல்லா நிலங்களுக்கும் எல்லா மக்களுக்கும் பொதுவாகிய வழிபாடிருந்தது. அது சிவ வழிபாடு. அஃது ஒரு நிலத்துக்கு உரியதன்றாயிருந்தமையாலும் அது தொல்காப்பியத்தில் கூறப்படவில்லை. சிவன் என்பதற்குச் சிவந்தவன் என்னும் பொருள் உண்டு என அறிஞர் கூறுவர். கடவுள் ஒளி வடிவினன் எனக் கொண்ட மக்கள் ஒளியின் குறியாக அடி நிமிர்ந்து நுனி ஒடுங்கிய கற்றூண்களை நட்டு வழிபட்டார்கள். இஃது ஒளி வடிவினதாகிய தீயின் சின்னம் என அறிஞர் கூறுவர். திருவண்ணாமலையில் கடவுள் சோதி வடிவாக நின்று பின் இலிங்க வடிவமானார் என்னும் பழங்கதை இக்கூற்றை வலியுறுத்துகின்றது. மரநிழலில் நடப்பட்டிருந்த கற்றூண் சிவலிங்கமென அறியப்பட்டது. சிவலிங்கம் பெரும்பாலும் ஆல மரநிழலில் நடப்பட்டிருந்தது. ஆகவே பழைய இலக்கியங்கள் சிவபெருமானை ‘ஆலமர் செல்வன்’ எனக் குறிப்பிடுகின்றன. (ந.சி.கந்தையா பிள்ளை, 1999, பக்.87-88)

**சிவன் பற்றிய தொன்மம்**

சிவன் குறித்த சில தொன்மங்களும் குறிப்புகளும் சங்க இலக்கியங்களில் உள்ளன. சிவன் நஞ்சு உண்ட கதை, இராவணன் கயிலாய மலையைப் பெயர்க்க முற்பட்ட கதை, கங்கையைத் தலையில் அணிந்த கதை, திரிபுரம் எரித்த கதை முதலான தொன்மங்கள் பதிவுசெய்யப்பட்டுள்ளன. சிவசக்தி தோற்றம், முக்கண்ணன், ஆலமரக் கடவுள், பிறை சூடியவன்' போன்றவை குறிப்புகளாக மட்டுமே உள்ளன.

**நஞ்சுண்ட கதை**

சிவன் நஞ்சையுண்டதால் அவன் கரைமிடற்று அண்ணல் (புறம். 55) மணிமிடற்றோன் என்றெல்லாம் குறிப்பிடப்படுகின்றான்.

காரி யுண்டிக் கடவுளது இருக்கை (மலை. 83)

சிவன் எதற்காக நஞ்சை உண்டான் என்ற தொன்மம் சுட்டப்படவில்லை. இத்தொன்மக் கதை வழக்கிலிருந்தபடியால் குறிப்பாக மட்டும் சுட்டப்படுகின்றன. வால்மீகி இராமாயணத்திலும் ரிக் வேதத்திலும் இத்தொன்மம் விளக்கப்பட்டுள்ளது.

எரிமலர்த் தாமரை யிறைவீழ்த்த பெருவாரி
விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்
தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி (பரி. 9:4-6)

இத்தொன்மம் கலித்தொகையில் (38:1) இடம்பெற்றுள்ளது. சிவன் தலையில் கங்கையை அடக்கியச் செய்தி கலித்தொகை கடவுள் வாழ்த்திலும் இடம்பெற்றுள்ளது. கங்கையைக் கொணர்ந்த காரணம் கூறப்படவில்லை. வியாசபாரதத்திலும் (வனப்பருவம் 100) வால்மீகி இராமாயணத்திலும் (பால காண்டம் 43) காரணத்தோடு விளக்கப்படுகின்றன.

**இராவணன் கயிலையைப் பெயர்க்க முற்படல்**

குறிஞ்சிநில யானையின் தந்தங்கள் வேங்கை மரக்கிளையில் சிக்கிக்கொண்டு மீட்கமுடியாமல் தவிர்த்ததற்கு இத்தொன்மம் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தன
னுமையமர்ந் துயர்மலை யிருந்தன னாக
வையிரு தலையி னரக்கர் கோமான்
றொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை
யெடுக்கல் செல்லா துழப்பவன் ( 38:1-5)

*வால்மீகி இராமாயணத்தில் (உத்தரகாண்டம்.11) இக்கதை விரிவாக இடம்பெற்றுள்ளது.*

**திரிபுரம் எரித்தல்**

ஓங்குமலைப் பெருவில் பாம்பு ஞாண்கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த
கறை மிடற்று அண்ணல் காமர் சென்னி
பிறைநுதல் விளங்கும் ஒரு கண்போல (புறம். 55)

*இத்தொன்மம், ரிக் வேதத்திலும் (3,10:39), வியாசர் பாரதத்திலும் (கர்ணபருவம் 33, 34) காணப்படுகின்றது.*

**முக்கண் உருவாதல்**

*முக்கண்ணன் தொன்மங்கள் வேறு எந்த கடவுளர்க்குமில்லாத அமைப்பு சிவனுக்கு மட்டும் கூறப்பட்டுள்ளது. மூன்று கண்களை உடையவனாக குறிக்கப்படுகிறான். மூன்று கண்கள் அவனுக்கு ஏற்பட்ட காரணமும் இல்லை. முக்கண்ணால் காமனை எரித்தார் என்ற தொன்மமும் சங்க இலக்கியங்களில் சுட்டப்படவில்லை. எனினும் பக்தி இயக்க காலமான நாயன்மார்கள் பாடல்களில் குறிப்பாக மூவர் தேவாரத்தில் பேசப்பட்டுள்ளன.*

*மகாபாரதத்தில் இப்பெயர்க்கான தொன்மம் இடம்பெற்றுள்ளது. அழகிய மலைமகளாகிய பார்வதி ஒருநாள் சிவனின் பின்னே சென்று விளையாட்டாக தன் கைகளால் சிவனின் கண்களை மூடிட, உடனே உலகம் இருளால் மூடப்பட்டது. உலகின் எல்லா உயிர்களும் மறைக்கப்பட்டது போலிருந்தது. உலக உயிர்கள் எல்லாம் அச்சத்தால் நடுங்கின, உலகவாழ்வும்*

மறைக்கப்பட்டன. மூன்றாவது கண் தோன்றியதும் இருள் விலகியது." (ஆலன் டேனியர், 1985. ப. 214) என்று விளக்குகிறார் ஆலன் டேனியல்.

**ஆலமர் செல்வன்**

யோக நிலையில் ஆலமரத்தின் கீழ் அமர்ந்துள்ள நிலையே, 'தென்முகக்' கடவுளாக' தட்சணாமூர்த்தியாக பின்னாளில் உருப்பெற்றது எனலாம். சிவனைக் குறித்து ஆய்வுசெய்த ஜான் மார்ஷல் சிந்துசமவெளியில் கண்டெடுக்கப்பட்ட கொம்புடை கடவுளை, தென்முகக் கடவுளாக நிறுவுகிறார். மேலும் இத்தோற்றம் ஆரிய மரபல்லாத இந்தியாவின் பழையநெறி என்பதையும் நிறுவுகிறார். இவ்வாறாக சிவனே வேதங்களை வழங்கியவன் என்பதைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. (புறம். 166, கலி. 381, அகம். 181) வைதீகக் கடவுளாக சிவன் மாற்றம் பெற்றமைக்கு இதுவும் சான்றாக அமைகின்றது. ஆலமர் செல்வனாக, புறம். 198, சிறுபாண். 97, திருமுருகு. 256, கலி. 81, 83 ஆகிய பாடல்கள் காட்டுகின்றன.

> கழல்தொடித் தடக்கைக் காரியும் நிழல்திகழ்
> நீலநாகம் நல்கிய கலிங்கம்
> ஆலமர் செல்வற் கமர்ந்தனன் (சிறுபாண்.95-97)

கடையேழு வள்ளல்களில் ஒருவனாகிய 'ஆய்' ஆலமர்ச் செல்வனாகிய இறைவனுக்கு ஒளிவீசும் நீலமணியையும் நாகம் தனக்கு நல்கிய ஆடையினையும் கொடுத்து மகிழ்ந்தான் என்று சிறுபாணாற்றுப்படை எடுத்தியம்புகின்றது. ஆலமர்ச் செல்வனை வழிபட்டதை இது உறுதிசெய்கிறது.

அதோடு, சின்" முத்திரையை உடையவர் என்பதையும் வேதத்தை அருளியவர் என்பதையும் அறியமுடிகிறது. சுட்டு விரலால் பெருவிரலின் அடியைச் சேர்த்து மற்ற மூன்று விரல்களையும் வேறாக ஒதுக்கிக் காட்டும் முத்திரையாகும். பெருவிரல் இறைவனையும் சுட்டுவிரல் ஆன்மாவையும் நடுவிரல் ஆணவத்தையும் மோதிரவிரல் கன்மத்தையும் சுண்டுவிரல் மாயையையும் குறிக்கின்றன. ஆன்மா மும்மலங்களிலிருந்து விடுபட்டு இறைவனை அடைதலையே இம்முத்திரை காட்டுகிறது.

**சிவசக்தி**

தம் கடவுளர்க்கு இணைகளைச் சேர்த்து வழிபட்ட சங்கத் தமிழரின் வழிபாட்டு நெறிகளுள் முக்கியமானது இவ்வழிபாடு தாய்த் தெய்வ வழிபாட்டின் ஒரு கூறாக, தாய்த்தெய்வத்தை ஆண் தெய்வத்திற்கு நிகராக கட்டமைத்த உருவமாகும். சிவனும் சக்தியுமாக ஈருயிர் ஓருடல் தத்துவமாக இவ்வடிவம் அமைக்கப்பட்டதைக் காட்டுகிறது. ஆணுக்குள் பெண்ணும் பெண்ணுக்குள் ஆணுமாக இருக்கும் தத்துவத்தையே" நீலமேணி வாலிழை பாகத்தொருவன்" (ஐங். க.வா. 1, 1:12) என்றனர் பழந்தமிழர். இக்குறிப்பு (புறம் 1:7 8) (அகம். க.வா.17) (திருமுருகு.153. கலி.38.12) பிற இலக்கியங்களிலும் காணப்படுகிறது. வடமொழி இதிகாசத்தில் இத்தொன்மம் இடம்பெறவில்லை" (பெ. மாதையன், 2001, ப.98) என்பதால் இவ்வடிவம் தமிழரின் தத்துவ வழிபாடே என்பது புலனாகும்.

வரலாற்று நோக்கில் சங்க இலக்கியங்களிலுள்ள தொன்மங்களை ஆராய்ந்த பெ. மாதையன், சிவன் குறித்த தொன்மங்கள் யாவும் வட இலக்கிய மரபுவழியேதான் தமிழில் ஊடுருவி உள்ளன என்றும் அரசு உருவாக தலைப்பட்ட வேந்தர், குறுநில மன்னர், அந்தணர் செல்வாக்கு மிக்க காலகட்டத்தில் எழுந்த பாடல்களில்தான் சிவன் பற்றிய தொன்மங்கள் இடம்பெற்றுள்ளன என்றும் நிறுவுகிறார். (பெ. மாதையன், 2001, ப.101) எனவே ஈர்ஞ்சடை அந்தணன்" (கலி.) பார்ப்பான் என்று சிவனை விளிப்பது இறைவனையும் அந்தணர் தம் இனத்தவனாக காட்டும் போக்கையே உணர்த்துகின்றன.

**2. நான்முகன்**

படைப்புக் கடவுளாக கருதப்படும் நான்முகனாகிய பிரம்மனைப் பற்றியச் செய்திகளையும் சங்க இலக்கியங்களில் அறியமுடிகிறது. தெய்வங்களுக்கான உறவு முறைகளைப் பற்றி குறிப்பிடும் போது நான்முகன், திருமாலின் மகனாக இணைக்கப்பட்டு உள்ளதை, பரிபாடல், கலித்தொகை, பெரும்பாணாற்றுப்படை ஆகிய இலக்கியங்களில் அறிய முடிகிறது.

படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்" என்ற புறநானூற்று அடி (194) இதனை உறுதிபடுத்துகிறது.

உந்தி முதலா முந்துவளி தோற்றி" என்று தொல்காப்பியம் எழுத்துக்களின் பிறப்பிற்கு 'உந்தியைத்' தொடக்கமாக, களமாக குறிப்பிடுகிறது. நான்முகனும் திருமாலின் உந்தியில் தோன்றியவன் என்று பரிபாடல் கூறுகிறது. கொப்பூழ் தாமரைப் பூவாக உருவகிக்கப்படுகிறது. அதனால் தாமரை வளமையின் குறியீடாக உள்ளது.

நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவற் பயந்த பல்இதழ்த்
தாமரைப் பொகுட்டின் காண் வரத் தோன்றி (பெரும்பாண்.402-404)

என்று பெரும்பாணாற்றுப்படையும்,

மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவோடு புரையும் (பரி.திரட்டு.7)

என்று பரிபாடல் திரட்டும்,

மாநிலம் இயலா முதல் முறை அமையத்து
நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய
வாய்மொழி மகனொடு மலர்ந்த
தாமரைப் பொகுட்டு நின் நேமி நிழலே (பரி.3:91-94)

என்று பரிபாடலும் இதனை விளக்குகின்றன.

பூவில் பிறந்ததால் இவன் 'பூவன்' என்றும் சுட்டப்படுகின்றான்.

வேதம், 'வாய்மொழி' என்று குறிக்கப்படுகிறது. வேதத்தை உரைத்தவன் இவனே, 'வாய்மொழிமகன்' என்றும் அனைத்தையும் விதிப்பதால் 'விதி' என்றும் குறிப்பிடப்பட்டு உள்ளான்.

வாய்மொழி மகன் (பரி.3.93)

விதியின் மக்களும் (பரி.3:6)

என்ற சான்றுகள் இதனை உணர்த்துகின்றன.

உலகம் தோன்றுவதற்கு முன் திருமால் உண்டானவன் என்பதால் 'தொடங்கற்கண் தோன்றிய முதியவன்' (கலி. 2:1-2) எனப்பட்டான்.

**நான்முகன் பற்றிய தொன்மம்**

சோழநாட்டில் கும்பகோணத்திலும் நாலூர் என்ற ஊரின் அருகிலேயும் திருச்சி மாவட்டம், சமயபுரம் அருகே உள்ள திருப்பட்டூரில் உள்ள சிவ ஆலயத்திலும் பிரம்மாவிற்கு தனிச் சன்னிதிகள் உள்ளன.

**படைத்தோன் மன்ற அப்பண்பிலாளன் (புறம்.194)**

என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

**3. காமன்**

சங்க இலக்கியங்களில் காமன், காமனார் என்று சுட்டப்படுகின்றான். ஆசைக்குரிய கடவுளாக இவன் புனையப்பட்டுள்ளான். பிரமனைப்போல இவனும் திருமாலின் மகனாகவே சுட்டப்படுகிறான்.

**நெடியோன் மகன் நயந்து தந்து (பரி.140:910)**

**இருவர் தாதை இலங்கு பூண் மாஅல் (பரி.1:31)**

இங்கு இருவர் என்பது பிரம்மனையும் காமனையுமே குறிக்கிறது.

**படைகள்**

பெண்களையே படையாகக் கொண்டவன். கரும்பு வில்லை உடையவன். (கலி.904)

**மலர் அம்புகளால் தொடுப்பவன்**
**அரிபடும் விரைமாண் பகழ் (பரி. 10:97)**

காதலித்தவர்களுக்குக் காமன் வழிபடு தெய்வமாக விளங்கினான். காமனைத் தண்டிக்குமாறு ஒருபெண் கூற்றுவனை வேண்டுகிறாள். இக்காட்சி கலித்தொகையில் இடம் பெற்றுள்ளது.

சுறாஅக் கொடியான் கொடுமையை நீயும்
உறாஅ அரைச நின் ஒலைக்கண் கொண்டீ
மறாஅ அரைச நின் மாலையும் வந்தன்று (கலி. 147:410-43)

என்பது இதனைக் காட்டுகிறது.

இதனால் இவன் கொடி 'சுறாமீன்' கொடி என்பதும் தெரிகிறது. சுறாமீன் முத்திரையை மோதிரத்தில் பொறித்து குழந்தைகளுக்கு அணிவித்தனர் என்பதை கலித்தொகை வாயிலாக அறிய முடிகிறது.

சுறாஏறு எழுதிய மோதிரம் தொட்டாள்
குறி அறிந்தேன் காமன்கொடி ஐம்பால் (கலி. 84:23-24)

என்பதால் கடவுளின் வாகனங்களை உருவங்களாகச் செய்து அணியும் வழக்கமிருந்ததை அறிய முடிகிறது.

**இணை**

காமனின் இணையாக இரதி குறிக்கப்படுகிறாள். திருப்பரங்குன்றத்து எழுதுஎயில் மண்டபத்தில் காமன், ரதி சித்திரங்கள் எழுதப்பட்டு இருந்தன. அது காதலர்க்கு இன்பத்தைத் தந்தது.

**காமன் பற்றிய தொன்மம்**

காமனுக்குக் கோயில் இருந்ததைக் காமன் கோட்டம் என்ற சொல்லாட்சி குறிப்பிடுகின்றது. காய்ச்சிய பாலைக் காமனுக்குப் படைக்க ஒரு பெண் கொண்டு சென்றதைக் கலித்தொகை கூறுகிறது.

படைஇடுவான் மற்கண்டீர் படைஅடும்
பாலொடு கோட்டம் புகின் (கலி. 109:17)

என்பதால் இதனை அறியலாம்.

இளவேனில் பருவத்தில் விழா எடுக்கப்பட்டது. (கலி. பாலைக்கலி, 36.9, முல்லைக்கலி 165, 152, 193, 197) இவ்விழா உயர்ந்தவன் விழா (பாலைக்கலி. 27.22) என்றும், வில்லவன் விழா (பாலைக்கலி. 35.12) என்றும் அந்நாளில்

வழங்கப்பட்டுள்ளது. வெகுவிமரிசையாக ஆடவராலும் பெண்டிராலும் கொண்டாடப்பட்டது.

## 4. பலராமன்

நானில தெய்வங்களைத் தவிர, பிற தெய்வங்கள் வழிபடப்பட்ட செய்தியினையும் சங்க இலக்கியங்களில் அறிய முடிகிறது. பரிபாடலும் கலித்தொகையும் மாறுபட்ட சமய நிலையினையும் சமய வளர்ச்சியையும் காட்டுகின்றன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது வாலியோன் என்னும் பலராம வழிபாடு ஆகும்.

தொல்காப்பியர் 'வாலியோன்' என்ற தெய்வப்பெயரை எங்கும் குறிப்பிடவில்லை என்றாலும் உயிர் மயங்கியலில்,

பனைமுன் கொடி வரின் (286)

என்று குறிப்பிடுகின்றார். பனைக் கொடியைத் தொல்காப்பியர் தனியே எடுத்துக்கொண்டு விதி கூறுவதிலிருந்து அக்கொடி தொல்காப்பியர் காலத்தில் வழக்கிலிருந்தது தெரிகிறது. இப்பனைக்கொடி 'நம்பி மூத்தபிரானான பலதேவர்க்கேயன்றி வேறெவர்க்கும் உரியதன்றென்பது கற்றோர் அறிவர்' என்று மு. இராகவையங்கார் குறிப்பிடுவது இங்கு கருதத்தக்கது.

இவனுக்கு 'ஹலாயுதன்' என்ற பெயருமுண்டு. இவன் வெள்ளை நிறமுடையவன் என்பதை,

வாலியோன் அன்ன வயங்குவெள் அருவி (நற்.32:2)

என்று நற்றிணை கூறுகிறது.

குறிஞ்சி நிலத்திலே கொட்டுகின்ற வெள்ளிய அருவிக்கு பலராமனின் நிறம் உவமையாக கூறப்பட்டுள்ளது. 'வெள்ளை', 'பலராமன்' போன்ற பெயர்கள் காஞ்சிபுரம் மாவட்டத்தில் மக்களுக்கு இடப்பட்டு அழைக்கப்படுகின்றது.

கடல்வளர் புரிவளை புரையும் மேனி
அடல்வெந் நாஞ்சில் பனைக்கொடி யோனும் (புறம்.56:3-4)

இவனுக்குரிய கொடி 'பனைக்கொடி' ஆகும். மிக்க வலிமையுடையவன் ஆதலால் வலிமைக்கும் இவன் உவமை கூறப்பட்டுள்ளான்.

வலிஒத் தீயே வாலியோனை (புறம்.56:12)

இவன் ஒருமுறை ஒரு மரத்தடியில் சாய்ந்த வண்ணம், நீராடுவதற்காக, யமுனையைத் தன்னிடம் வருமாறு அழைக்கிறான். அவள் வராது போகவே தன் கலப்பையைக் கொண்டு அவளைத் தன்னிருப்பிடத்திற்கு இழுத்து நீராடுகிறான். (தொ. பரமசிவன், தெய்வங்களும் சமுக மரபுகளும்) ஒரு கையில் உலக்கையையும் கலப்பையையும் ஏந்தியவன் பெருங்குடியன்.

இவன் கண்ணனுக்கு முன்னோன் என்பதை,

மாயவனும் தம் முனம் போல (திணைமாலை. நூ.ஐ.பா.58)

என்ற பாடல் உணர்த்துகிறது. கடவுளர்க்குக் குடும்ப உறவுகளைக் கட்டமைத்த தமிழர் கற்பனையில் கண்ணபிரானின் மூத்தவனாக பலராமன் கட்டமைக்கப்பட்ட செய்தியை அறிய முடிகிறது.

தொல்காப்பியம் திணைநிலை தெய்வங்களாக மாயோன், சேயோன், வேந்தன், வருணன் போன்றோரை சுட்டுகின்றது. புறநானூறு, சிவன், வாலியோன், மாயோன், முருகன் ஆகியோரை ஞாலம் காக்கும் நால்வராகச் சுட்டுகிறது.

ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்
கடல் வளர் புரிவளை புரையும் மேனி
அடல் வெந் நாஞ்சில், பனைக்கொடி யோனும்
மண்ணுறு புட்கொடி விறல்வெய் யோனும்
மணிமயில் உயரிய மாறா வென்றிப்
பிணிமுக ஊர்தி ஒண்செய்யோனும் என
ஞாலம் காக்கும் கால முன்பின்
தோலா நல்இசை நால்வர் உள்ளும் (புறம்.56:1-10)

இதனால் சங்க கால தமிழகத்தில் பலராமனை மக்கள் வழிபட்டுள்ளனர் என்பது தெரிகிறது. சித்திரைத் திங்களில் வரும் மூன்றாம் பிறை பலராமன் பிறந்தநாளாகக் கொண்டாடப்படுகிறது.

**பலராமன் பற்றிய தொன்மம்**

பலராமன் குறித்த தொன்மங்கள் எதையும் சங்க இலக்கியங்களில் காணமுடியவில்லை. மாயோனுக்கு முன்னவனாக மட்டும் குறிக்கப்படுகிறான்.

**5. கூற்றுவன்**

உயிர்களைக் கவரும் கூற்றுவனையும் சங்ககால மக்கள் வணங்கியுள்ளனர். அவன், கணிச்சியன், மடங்கல், கூற்று, கூற்றுவன், தருமன், எருமை, ஞமன் என்றெல்லாம் அழைக்கப்பட்டுள்ளான். இவன் அவதரித்த நாள் வைகாசி விசாகம் ஆகும்.

ஞமன் என்பது துலாக்கோலின்கண் உள்ள சமநிலையை உணர்த்தும் உறுப்பாகும். கூற்றுவனும் நடுநிலையோடு உயிர்களைக் கவர்வதால் ஞமன் = எமன் எனப்பட்டிருக்க வேண்டும். இவன் சூரிய புத்திரன். தென்திசைக்கு உரியவன்.

**அ. கொடி, ஊர்தி**

கூற்றுவன் எருமை வாகனம் உடையவன்.

**ஆ. மாலை ஆயுதம்**

"ஆயுதங்கள் பாகம், தண்டு முதலியன. தருமன் எமன் அருளால் குந்திக்குப் பிறந்தவன். சாவித்திரியின் வேண்டுகோளை ஏற்று சத்தியவான் உயிரை அருளியவன்." (கிருஷ்ணமாச்சாரியார், 2008, ப.40)

சத்தியவான் சாவித்திரி குறித்த கதைப் பற்றிய குறிப்பு எதுவும் சங்க இலக்கியங்களில் இல்லை.

கணிச்சிப் படையினன் என்றும் சுட்டப்படுகிறான்.

கணிச்சிக் கூர்மபடைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்குங் காலை இரங்குவீர் மாதோ (புறம்.195)

கருணையின்றி உயிரைக் கௌவுவதால் 'கண்ணிலி' என்றும் அறனில் கூற்றம் என்றும் சுட்டப்படுகிறான்.

காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப (புறம்.240)

இன்னாது உற்ற அறனில் கூற்றே (புறம்.255)

மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும் (தொல்.1023)

மன்மதனைத் தணடிக்குமாறு கூற்றுவனிடம் ஒரு பெண் வேண்டியதைக் கலித்தொகை நிறுகிறது. (கலி.147)

**கூற்றுவன் பற்றிய தொன்மம்**

மார்க்கண்டேயனின் உயிரைப் பறிக்க வந்த எமனின் மேல் கோபம் கொண்டு, அவனுடைய நெஞ்சைத் தன் காலால் பிளந்து, அவனுடைய ஆருயிரை மாய்த்தான் சிவன். அதனால் காலனுக்குக் காலனாய் விளங்கினான். இத்தொன்மச் செய்தியை,

காற்று போல் வந்த கதழ்விவீக் காரியை
ஊற்று களத்தே அடங்கக்கொண்டு சுட்டு அதன்
மேல் தோன்றி நின்ற பொதுவன் தகை கண்டை
ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடந்து இட்டு
சீற்மொடு ஆர்உயிர் கொண்ட ஞான்று இன்னல்கொல்
கூற்று என உட்கிற்று (கலி.முல்லை.40,45)

என்று முல்லைக்கலி காட்டுகிறது. காலனை வென்று மார்கண்டேயருக்கு சிரஞ்சீவித்துவம் அளித்த தலம் திருக்கடையூர் ஆகும். காலசம்ஹாரம் நடைபெற்ற தலம் இது. லிங்கத்திலிருந்து வெளிப்பட்டதால் மூலவரின் மேனியில் வெடிப்பும் பாசக்கயிறின் தழும்பும் இப்போதுமுள்ளன.

**6. காலன்**

காலன் என்பவன் கூற்றுவனின் ஏவலனாகச் சுட்டப்படுகிறான்.

காலமுன்பின் பிறவும் (கலி.105:19)

மடங்களிலும் கணிச்சியும் காலனும் கூற்றுவனும் (கலி. 105:20-21)

என்பனவற்றில் காலன் வேறு. கூற்றுவன் வேறு என்பது புலனாகிறது. நச்சினார்க்கினியரும் இவ்விடங்களில் காலனைக் கூற்றுவனின் ஏவலனாகவே குறிப்பிடுகின்றார். காலப்போக்கில் இருவரையும் ஒருவராக கருதும் நிலை ஏற்பட்டது. காலனே பின்னாளில் 'சித்திர குப்தனாக' மாற்றம் பெற்றிருக்கிறான்.

காஞ்சிபுரத்தில் எமனுக்கென்று தனிக்கோயிலும் சித்திரகுப்தனுக்கென்று தனிக் கோயிலும் அமைந்துள்ளன. சித்ரா பௌர்ணமி அன்று சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

கம்பரும், கும்பகர்ணனை துயிலெழுப்பும் போது, கறங்குபோல் விற்பிடித்த காலதூதர் கையிலே உறங்குவாய்" என்று கூறுகின்றார். இங்கும் காலனின் தூதுவனாகவே குறிப்பிடப்படுகிறான்.

அபிதான சிந்தாமணியும் சித்திரகுப்தனுக்கு, சிரவணரால் ஆத்மாக்கள் செய்யும் புண்ணிய பாவங்களை யுணர்ந்து யமனுக்கு அறிக்கையிடுவோன்" (2001, ப.688) என்கிறது. குப்தா என்ற சொல்வழக்கு சமணர்களிடையே உள்ளது. ஆதலால் சித்திரகுப்தன் என்ற பெயர் சமணர்களாலேயே வழங்கப்பட்டிருக்க வேண்டும். சித்திரம் என்ற சொல்லுக்கும் எழுத்து என்றே பண்டை நாளில் பொருள் கூறப்பட்டது. மக்களின் புண்ணிய, பாவங்களை எழுதியவன் சித்திரகுப்தன் எனப்பட்டான்.

## 7. சந்திரன்

இயற்கையின் தோற்றத்திற்கெல்லாம் தம் கற்பனையைத் துணையாக்கி தொன்மங்களைப் புனைவதில் வல்லமையுடையது. மனித இனம் திங்கள் வளர்வதையும் தேய்வதையும் தத்துவ நோக்கில் கண்டனர் என்பது ஒருபுறம், அது பாம்பால் விழுங்கப்படுகிறது, உமிழப்படுகிறது என்ற தொன்மம் சங்க இலக்கியங்களில் புறநானூறு 260, அகநானூறு, 313, 44, நற்றிணை 128, 377, சிறுபாண். 18386, கலித்தொகை. 15, 62, 103105, 140 ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன.

நிலவில் தோன்றும் கறை பற்றிய தொன்மம் இன்றும் நிலவுகிறது. சங்க இலக்கியங்களில் நிலவில் 'குறுமுயல்' (கறை) இருப்பதாக நம்பப்பட்டது. கீதையில் சந்திரனின் அடையாளக் குறியீடாக 'முயல்' இருந்ததை எட்வர்ட்மூர் எடுத்துக் காட்டுகிறார்" (பெ. மாதையன், 2001, ப.139).

நிலவின் கறை குறித்த தொன்மங்கள் பற்றி தா.வே. வீராசாமி பின்வருமாறு கூறுகிறார். மதியின் முகத்தில் உடன்பிறந்தாள் வீசிய சாம்பற்கறை என எஸ்கிமோக்களும் மரம் என மந்தராக்களும் வலைபின்னும் கிழவன், மான் என மலேசியர்களும் மதியை முயல் தாங்கியது என மெக்சிக்கோ மக்களும் முயலே குடியேறியதாகத் திபெத்தியர்களும் நம்புகின்றனர் என்று குறிப்பிடுகிறார் (ஆராய்ச்சி. 32, ப.261).

சந்திரனுக்கு மதுரையில் கோயில் இருந்ததை கலித்தொகை (9) நிலாக்கோட்டம் என்று பதிவு செய்துள்ளது.

**சமண பௌத்த சமயங்கள்**

சங்க காலத்தில் 'அமணர்' என்ற சொல் சமணர், பௌத்தர் இருவரையும் குறித்தது. நாளடைவில் அச்சொல் 'சமணர்'களை மட்டுமே குறிப்பதாயிற்று. சங்க காலத்தில் சமண, பௌத்த பள்ளிகள் இருந்தன என்பதற்குத் தரவுகள் உள்ளன.

மாடுகள் கட்டப்படும் தொழுக்களுக்கருகில் இப்பள்ளிகள் இருந்தன. (பட்டி.5253)

மதுரை நகரில் சங்ககாலத்தே பள்ளிகள் இருந்தன. அச்சமணப் பள்ளிகள் பூந்தோட்டங்களுக்கு நடுவில் இருந்தன. அங்கு சாவகர்கள் அருகதேவனை வழிபடுவர். அருகக்கடவுளக்குக் கோயில் இருந்தது. அக்கோயில் சுவர்களில் ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. சாவகர்கள் சமணரில் கொல்லாமை, இரவுண்ணாமை போன்ற விரதங்களைக் காக்கும் இல்லறத்தார் இருந்தனர். அவர்களுக்கு அப்பள்ளிகளில் சமணத் துறவுகள் கற்பித்தனர்.

வண்டுபடப் பழுநிய தேன்ஆர் தோற்றத்துப்
பூவும் புகையும் சாவகர் பழிச்ச
சென்ற காலமும் வரூஉம் அமயமும்
இன்று இவண் தோன்றிய ஒழுக்கமொடு நன்குஉணர்ந்து
வானமும் நிலனும் தாம்முழு துஉணரும்
சான்றகொள்கை, சாயா யாக்கை
ஆன்று அடங்கு அறிஞர் செறிந்தனர். (மதுரை.475-81)

கி.மு. 2ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 10 ஆம் நூற்றாண்டு வரை பௌத்தமதம் உயர்நிலை பெற்றிருந்தது. தலையாலங்கானத்துச் செறுவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்தில் மதுரைநகரில் பௌத்தப் பள்ளிகள் இருந்துள்ளன.

பூவினர் புகையினர் தொடுவனர் பழிச்ச
சிறந்து புறங்காக்கும் கடவுள் பள்ளியும் (மதுரை.10)

கி.மு.3 ஆம் நூற்றாண்டில் அரசாண்ட அசோக சக்கரவர்த்தியால் கட்டப்பட்ட ஒரு பௌத்த தூபி காஞ்சிபுரத்தில், இருந்ததாக யுவான்சுவாங் எழுதியுள்ளார். (மயிலை. சீனி. வேங்கடசாமி, 2007, ப.49)

## பொதியமலையும் அகத்தியரும்

அகத்தியர் பொதியமலையில் தமிழ்க்கற்றார் என்பது நாமறிந்தது. பொதிய மலையும் பௌத்தர்களின் புண்ணியத் தலமாகக் கருதப்பட்டுவந்தது. அந்த மலையின் அவலோகிதீஸ்வரர் என்னும் யோதிசத்வர் வீற்றிருக்கிறார் என்பதும் அவரிடம் அகத்தியர் தமிழ்க் கற்றார் என்பதும் பௌத்தர்களின் கொள்கை"யாக இருக்கின்றது. (மயிலை. சீனி.வேங்கடசாமி. 2009, ப.57)

## அரசமர வழிபாடு

அரசமரம் பௌத்தர்களின் தலவிருட்சமாகும். தமிழர்கள் அரசமரத்தினை இன்றும் தொழுகின்றனர். திருமாலிருஞ்சோலையிலுள்ள குகைக்கருகிலுள்ள கோவிலின் தலவிருட்ஷம் போதி மரமே ஆகும். இவ்வழிபாடு பௌத்தர் செல்வாக்கால் தமிழகத்தில் வேரூன்றி உள்ளது.

**பௌத்தர்களின் சித்திகள்**

பௌத்தர்களின் சித்திகளையும் குறுந்தொகை கூறுகின்றது.

நிலத்தைத் தோண்டிச் செல்லுதல், ஆகாயத்தின் கண் ஏறாதிருத்தல், கடலின் மேல் நடந்துசெல்லுதல் ஆகிய மூன்று சித்திகளையும் சமணர்களும் பௌத்தர்களும் பாராட்டுவர்.

தம் தந்தையாகிய சுத்தோதனனுக்கு ஞானம் உண்டாக்கும் பொருட்டு இத்தகைய அற்புதங்களைப் புத்தர் காட்டினாரென்று அசுவகோஷ போதிசத்துவர் என்பவரால் இயற்றப்பட்ட புத்த சரிதத்தின் 19 ஆம் வர்க்கம் தெரிவிக்கிறது. (உ.வே.சா. 1983, ப. )

**நிலந்தொட்டு புகாஅர் வானமேறார்**
**விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார் (குறுந்.130)**

என்று பௌத்தர்களின் சித்திகளைக் கூறுகிறது.

இதனால் பௌத்தர்களின் சித்திகள் மக்களிடையே அறிமுகமாகியிருந்ததை அறியமுடிகிறது.

**நிலையாமை**

பௌத்தர்களின் கொள்கைகளில் நிலையாமைத் தத்துவமும் ஒன்று. நிலையாமை ஒன்றே நிலையானது என்பது பௌத்தர்கள் நம்பிக்கை.

**நில்லாமையே நிலையிற் றாகலின் (குறுந்.143)**

**நில்லா உலகத்து நிலைமை (பொருநர்.176)**

**மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர் (புறம்.165)**

**தாயின் முட்டை பொலவுட் கிடந்த**
**காயின் (குறுந்.152)**

என்பனவற்றால் நிலையாமையை அறிய முடிகிறது.

பிற இனத்தவரின் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் நாகரிகம், பண்பாடுகளையும் தாமறிந்து ஏற்று, ஏற்றவற்றைத் தன்மயமாக்கி கொண்டது சங்ககாலச் சமுதாயம்" (ம.ரா.போ. குருசாமி, 1974, ப.96) என்பது உண்மை.

நிலையாமை, கொல்லாமை, துறவு, உண்ணா நோன்பிருத்தல் போன்றவை ஜைன, பௌத்தர்கள் கடைபிடித்த கோட்பாடுகள் ஆகும்.

இக்கோட்பாடுகள் சங்க இலக்கியங்களில் ஊடுருவியிருப்பதை அறியமுடிகிறது.

**வடக்கிருத்தல்**

உண்ணாதிருந்து உயிர் விடுதலாகிய வடக்கிருத்தல் பௌத்தர்களின் கோட்பாடுகளில் ஒன்று. வடக்கிருந்து உயிர்விட்ட அரசர்களையும் புலவர்களையும் புறநானூறு காட்டுகிறது.

சங்க காலப் பாடல்கள் சில புத்தகொள்கைகளை ஆதரிப்பவை போல தோன்றுகின்றன. 187 ஆவது புறப்பாடல் சுத்த பிடகத்தில் உள்ள தம்மபதத்தின் (பௌத்த சமயநூல்) 98 ஆம் சுலோகத்தை நினைவூட்டுகிறது.

அருகத்துக்கள், (முனிவர்கள்) எங்கே வசிக்கிறார்களோ, அது நாடாயினும் காடாயினும் பள்ளமாயினும் மேட்டு நிலமாயினும் அதுவே இரமணியமான இடம்" (தனிநாயக அடிகளார், 1967, ப.45)

பௌத்த சமயத்தைச் சார்ந்த உலோச்சனார், கௌதமனார் போதியார், இளம் போதியார் போன்ற சங்கப்புலவர்களின் பெயர்களை நோக்கும்போது பௌத்த சமயம் விரவி இருந்ததை அறியமுடிகிறது.

'உலோச்சு' என்பது சமணர்களின் சமய வழிபாட்டுச் சடங்குகளில் ஒன்று.

உண்ணா நோன்பையும் வாடியவயிற்றையும் நீராடாத நோன்பையுமுடையவர் சமணர் என்பதை அகநானூறு காட்டுகிறது.

**உண்ணா மையின் உயங்கிய மருங்கின்**
**ஆடாப் படிவத்து ஆன்றோர் போல** **(அகம்.123:1-2)**

## சங்கம் என்ற சொல்லாட்சி

'சங்கம்' என்ற சொல் புத்தமதத் துறவிகளையே குறிக்கும். சங்கம் என்றால் பௌத்த பிச்சுக்களின் கூட்டம். பௌத்த மதத்தில் 'மும்மணி' என்று சொல்லப்படும் புத்த, தன் சங்கம் எனும் இம்மதத்தின் உயிர்நிலையாயிருந்தது சங்கமே" (மயிலை. சீனி. வேங்கடசாமி, 2007, ப.31). எனவே 'சங்கம்' என்ற சொல் பௌத்தர்களின் கூட்டத்தைக் குறித்து, பின்னர் தமிழ் வளர்த்த சங்கங்களைக் குறிப்பதாக மாறியுள்ளது.

## அருகதேவன்

சங்க காலத்தில் புறச்சமயமான சமண சமயக் கோயில்கள் இருந்துள்ளன என்பதை மதுரைக் காஞ்சி உணர்த்துகிறது. பிற்காலத்திலே அவை 'ஜினாலயங்கள்' எனப்பட்டன. இக்கோயில்கள் மலைகள் போல் உயர்ந்து காணப்பட்டன. செம்பொன்னால் வேயப்பட்டதைப் போன்று விளங்கின. சுவர்களில் சித்திரங்கள் தீட்டப்பட்டிருந்தன. கோயில்களைச் சுற்றி சோலைகள் இருந்தன.

செம்பு இயன்றன்ன செஞ்சுவர் புனைந்து
நோக்கு விசை தவிர்ப்ப மேக்கு உயர்ந்து ஓங்கி
இரும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையும்
குன்றுபல குழ்இப் பொலிவன தோன்ற (மதுரைக்.485-488)

அருகதேவன் வழிபாடும் சங்க காலத்தில் இருந்ததற்கு சாசனச் செய்யுள் உறுதிபடுத்துகிறது. வடஆற்காடு மாவட்டம் போளூருக்கு அடுத்துள் திருமலை எனும் ஊரின் மலைமேலுள்ள 'சி.கா. நாதசுவாமி' கோயிலுக்கு அருகிலுள்ள குகை வாயிலின் வெளிப்புறச் சுவரில்,

வஞ்சியர் குலபதி எழினி வகுத்த
வியக்க ரியக்கியரோ
டெஞ்சிய வழிவு திருத்தியிவ் வெண்குண
விதைதிரு மலைவைத்தான்
அஞ்சிதன் வழிவருமவன் வழிமுதலி
அதிகன் வகன் நூல்

விஞ்சையர் தலபுனை தகடையர் காவலன்
விடுகாதழகிய பெருமாளேய் (மயிலை. சீனிவேங்கடசாமி.)

என்று எழுதப்பட்டுள்ள செய்யுள், விளக்குகிறது.

சிவபெருமான் திரிபுரத்தை எரித்தார் என்ற தொன்மம் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. சேர குலத்தவனாகிய எழினி, இம்மலையின்மேல் இருந்த அருகக்கடவுளின் பரிவார தெய்வங்களான யட்சன், யட்சி, (இயக்கன், இயக்கி) உருவங்கள் பிற்காலத்தில் பழுதடைந்ததனால் அக்குலத்தில் தோன்றிய அதியமான் விடுகாதழகிய பெருமாள் என்னும் அரசன், அவ்வுருவங்களைப் பழுதுதீர்த்து, புதுப்பித்தான் என்றும் வெண்கல மணி ஒன்றினை அக்கோயிலுக்குத் தானம் செய்தான் என்பதையும் கடப்பேரியிலிருந்து ஒரு கால்வாயை வெட்டியமைத்ததையும் அச்செய்யுள் கூறுகிறது. இச்செய்யுளின்மேல் வடமொழிச் செய்யுளும் எழுதப்பட்டுள்ளது.

**சாத்த ன்**

சங்க காலத்திலிருந்த தெய்வங்களுள் சாத்த னும் முக்கியத்துவம் பெற்றிருந்தது. தெய்வங்களின் பெயர்களை மக்களுக்கு இட்டு வழங்கும் மரபில், சாத்த ன் என்ற தெய்வத்தின் பெயரும பலருக்கு வழங்கப்பட்டுள்ளது. சீத்தலைச் சாத்தனார், ஆமூர் சாத்தனார், ஆலம்பேரிச் சாத்தனார், மோசிசாத்தனார், உடமவண்ணக்கன் பெருஞ்சாத்தன், பூதஞ்சாத்தனார், அந்துவன் சாத்த போன்ற பெயர்களில் புலவர்கள் இருந்துள்ளனர். பாண்டியன் கீரன் சுத்தனார், கருவூர் சேரமான் சாத்தனார் போன்ற பெயர்களில் அரசர்களும் இருந்துள்ளனர்.

சங்க காலத்தில் மாசாத்தன், அறச்சாத்தன் போன்ற சொற்கள் வழக்கிலிருந்து உள்ளது. இவை மகாசாஸ்தா, தர்மசாஸ்தா ஆகிய சொற்களின் தமிழாக்கமாகவே உள்ளன. சங்க காலத்தைச் சேர்ந்த தமிழ் பிராமிக் கல்வெட்டு 'தேவன்சாத்தன் என்ற மணிவண்ணக்கன் செய்த தானம்' குறிக்கப்பட்டுள்ளது. கி.பி. 2, 3ஆம் நூற்றாண்டுக்குரியதாக கருதப்படும் இக்கல்வெட்டு சாத்தனென்ற தெய்வம் இருந்ததை உறுதிசெய்கிறது.

இக்கல்வெட்டு தவிர புறநானூற்றிலும் உறையூருக்குக் கிழக்கேயுள்ள பிடவூரில் 'அறப்பெயர் சாத்த ன்' என்ற தெய்வம் இருந்ததை,

... நல்லிசை உறந்தைக் குணா அது
நெடுங்கை வேண்மா னருங்கடிப் பிடவூர்
அறப்பெயர்ச் சாத்தன் கிளையேம் பெரும் (புறம்.395)

என்று பதிவு செய்துள்ளது. இந்த அறப்பெயர் சாத்தன் என்பது தர்மசாஸ்தாவையே குறிக்கும். தொல்கப்பியமும் விரவு பெர்களைக் குறிப்பிடும்போது சாத்தன், சாத்தி என்பனவற்றை சான்றாகக் காட்டுகிறது. பிடவூர் வேளிரால் இத்தெய்வம் வணங்கப்பட்டுள்ளது. சாத்தனுக்கென்று காஞ்சிபுரத்தில் கோயில் இருந்துள்ளது. பிடவூரிலும் பாழடைந்த சாத்தன் கோயில் இருந்துள்ளது என்தை பெரியபுராணம் மூலம் அறிய முடிகிறது. இப்பிடவூர் இன்று திருப்பாட்டூர் என்று வழங்கப்படுகின்றது. சோழர் காலத்திலும் இத்தெய்வம் வழிபடப்பட்டது இதனால் தெரிகிறது.

சாத்தன் சிலையில் வலதுகையில் ஓர ஓலையை வைத்திருந்தது. தற்போது ஓலை இருந்த பகுதி சிதைந்துள்ளது. தற்போது அச்சிலையின் இருபுறமும் தேவியர் சிலைகள் சேர்க்கப்பட்டுள்ளன. இத்தெய்வத்தின் பெயரால் பாண்டிய நாட்டில் நிறைய கோயில்கள் இருந்துள்ளன. சிங்கம்பிடவூரில் இத்தெய்வம் சேவுகன், சேவுகப் பெருமாள் என்று அழைக்கப்படுகின்றது.

வைதீக சமயத்தில் சேராத மதங்களைப் 'பாசாண்டம்' என்றும், அதைச் சேர்ந்தவர்களைப் 'பாஷாண்டிகள்' என்றும் வழங்கும் மரபு உள்ளது. சிலம்பில் 'பாசண்டசாத்தன்' என்ற தெய்வம் இடம் பெற்றுள்ளது. ஊருக்குப் புறம்பாக இருந்து ஊரைக் காக்கும் காவல் தெய்வமாக 'புறம்பணையான்' கோயில் இருந்துள்ளது. இச்சொல் மாசாத்தனைக் குறிப்பதாக அடியார்க்கு நல்லார் கூறியுள்ளார். இச்சாத்தன் கோயிலே கிராமங்களில் வழிபடும் ஐயனார் தெய்வாக மாறியுள்ளது.

குதிரை வாகனமுடைய சாஸ்தாவை பௌத்தரும், யானை வாகனமுடைய சாஸ்தாவை சமணரும் வணங்கியுள்ளனர். இத்தெய்வங்களுக்கு மண் குதிரைகளும் மண் யானைகளும் நேர்த்திக் கடனாக செலுத்தப்படுகின்றன.

## தொகுப்புரை

சங்க கால மக்கள் திணைநிலைத் தெய்வங்கள் தவிர, முக்கண்ணன், நான்முகன், காமன், பலராமன், கூற்றுவன், காலன், சந்திரன், அருகதேவன், சாத்தன் போன்ற பிற தெய்வங்களையும் வழிபட்டுள்ளனர்.

'நெடியோன்' என்ற சொல் திருமால், இந்திரன் போன்ற தெய்வங்களைக் குறிக்கும் பொதுச் சொல்லாக இருந்தது போலவே 'சேயோன்' என்ற சொல் முருகனையும் முக்கண்ணனையும் குறிக்கும் பொதுச்சொல்லாக இருந்திருக்க வேண்டும். முக்கண்ணனும் மலையுறை தெய்வமாக சுட்டப்படுகிறான். முக்கண்ணனுக்குரிய நிறம், ஆயுதங்கள், ஊர்தி, மாலை, கொடி போன்றவை குறிக்கப்பட்டுள்ளன. தவிர, நஞ்சுண்ட கதை, இராவணன் கயிலையைப் பெயர்த்தல், திரிபுரம் எரித்தல், முக்கண் உருவான கதை ஆலமர் செல்வன், சிவசக்தி போன்ற தொன்மங்கள் சங்க இலக்கியங்களில் உள்ளன.

திருமாலுக்கு இணையாக, முக்கண்ணன் வளர்ந்திருந்த நிலையினை அறியமுடிகிறது. முக்கண்ணனுக்கான இணையாக உமை இணைக்கப்படுகிறாள்.

முக்கண்ணனுக்கு மதுரையிலும் தவிர மலையிலும் கோயில்கள் இருந்துளள்தைப் புறநானூறு, மலைபடுகடாம் ஆகியவை குறித்துள்ளன. ஆலமர நிழல்களிலும் கோயில்கள் இருந்துள்ளன. சிவன் குறித்த தொன்மங்களில் 'சிவசக்தி'யானவன் என்ற தொன்மம் மட்டும் தமிழுக்கே உரிய தொன்மம் ஆகும்.

கடையேழு வள்ளல்களாகிய காரி நாகம் நல்கிய மணியையும் ஆடையையும் இக்கடவுளுக்கு வழங்கியதாக சிறுபாணாற்றுப்படை .(9597) கூறுகிறது.

குடும்பம் என்ற நிறுவனம் தமிழ்ச் சமுதாயத்தின் தலையாய பண்பாடு. ஆதலால் திருமாலின் மகன்களாக நான்முகன், காமன், சாமன் ஆகியோர் குறிக்கப்படுகின்றனர். படைப்புக் கடவுளாக நான்முகன் வணங்கப்படுகிறான். அனைத்தையும் விதிப்பதால் 'விதி' என்றும் குறிக்கப்படுகிறான். படைப்புத் தொழிலைத் திரும்பப் பெற, முருகனை வணங்கியதால் மீண்டும் பெற்றான்.

திருவாரூரிலிருந்து 12 கி.மீ. தொலைவில் 'எண்கண் முருகன் கோவில்' உள்ளது. இங்கு முருகனே பிரம்ப குருவாக வழிபடப்படுகிறார்.

திருமாலின் மகனாக கற்பிக்கப்பட்ட பிறகு முல்லைநில மக்கள் காமனையும் தெய்வமாக வழிபட்டனர். ஆசைக்குரிய தெய்வமாக காமன் வணங்கப்பட்டான். இளவேனில் பருவத்தில் இவனுக்கு விழா எடுக்கப்பட்டது. இவ்விழா 'வில்லவன் விழா' எனப்பட்டது. காமனுக்குக் கோயில் இருந்தது. பால் படைக்கப்பட்டது.

தமிழகத்தில் மாயோனின் மூத்தவனாகிய பலராம வழிபாடும் இருந்துள்ளது. வைணவம் தலையெடுக்கத் தொடங்கியதை இது காட்டுகிறது. சிவன், மாயோன், சேயோனுக்கு இணையாக வணங்கப்பட்டுள்ளான்.

கூற்றுவனும் காலனும் ஒன்றாக கருதப்பட்டு பின்னர் இருவரும் வேறு வேறாக வழிபடப்பட்டதை அறிய முடிகிறது. எமனை சம்ஹாரம் செய்த இடமாக திருக்கடையூரும் சாப விமோசனம் பெற்ற இடமாக கூறத்தங்குடியும் விளங்குகின்றது.

கூற்றுவனின் ஏவலனாக காலன் விளங்குவதை அறிய முடிகின்றது. காலனே சமணர்களின் செல்வாக்கால் சித்ரகுப்தனாக மாற்றம் பெற்று வணங்கப்படுகின்றான். சித்திரை பௌர்ணமியன்று இவனுக்கு இன்றும் வெகுசிறப்பாக விழா கொண்டாடப்படுகிறது. எமனுக்கு என்று தனிக் கோயில்களும் சித்திரகுப்தனுக்கென்று தனிக் கோயில்களும் உள்ளன.

புறச்சமயங்களும் செல்வாக்குப் பெற்றிருந்தன என்பதற்கு அருகதேவன் வழிபடப்பட்டது சான்றாக அமைந்துள்ளது.

சங்க இலக்கியங்களில் காணப்படும் தெய்வங்களை மக்கள் வாழ்ந்த நிலைகளின் அடிப்படையில் பார்க்கும்போது அவர்கள் மாயோன், சேயோன், இந்திரன், வருணன் ஆகிய நான்கு தெய்வங்களை வழிபட்டுள்ளனர் என்பதை அறிய முடிகிறது, இவ்வழிபாடு பற்றிய ஆய்வு குறித்து திணைநிலை தெய்வங்கள் என்ற இரண்டாம் இயலில் ஆராயப்பட்டுள்ளது,

இத்திணை நிலை தெய்வங்களன்றி சங்க கால மக்கள் முக்கண்ணன், பிரம்மன், அருகதேவன் முதலான தெய்வங்களையும் வழிபட்டுள்ளனர் என்பதை வழிபடு தெய்வங்கள் என்ற மூன்றாம் இயலில் ஆராயப்பட்டுள்ளது.

நிலம், நீர், காடு, மலை போன்ற இயற்கை பொருட்களில் எல்லாம் தெய்வங்களைக் கண்டனர். அவற்றையும் பெண் தெய்வங்களாகக் கண்டனர் என்பது உணரத்தக்கது. தமிழகத்தில் எழுந்த இவ்வழிபாடு இன்றும் உள்ளது.

உற்பத்தியைப் பெருக்கும் சக்தி உடையவர்களாக இருப்பதால் பெண்கள் வளமையின் குறியீடாகக் கருதப்படுகின்றனர். அந்த சக்தி அவர்களைத் தெய்வமாக வணங்குவதற்கு காரணமாக அமைந்தது.

சங்க இலக்கியம் திணைநிலை மற்றும் வழிபடு தெய்வங்களை முன்னிலைப்படுத்தி இருந்தாலும் பெண் வழிச் சமுதாயம் மேலோங்கி இருந்துள்ளது என்பதற்கு அக்காலத்தில் வழிபட்டுள்ள பெண் தெய்வங்கள் சான்றாக அமைந்துள்ளன. அவ்வகையில் இவ்வியலானது பெண் தெய்வ வழிபாடு என்னும் பொருண்மையில் ஆராயப்படுகிறது.

### போர்த்தெய்வம்

சங்க காலத்திலிருந்த பெண்தெய்வ வழிபாட்டினை 1. போர்த் தெய்வங்கள், 2. வளமைத் தெய்வங்கள், 3. பொதுநிலைத் தெய்வங்கள் என்று வகைப்படுத்தலாம்.

தமிழகத்தில் பெண்வழிச் சமுதாயம் நிலவியதற்குத் தக்கச் சான்றாய் இப்பெண் தெய்வ வழிபாடு விளங்குகிறது. சங்க காலத்தில் போர்க்குரிய கடவுளாகப் பெண் தெய்வங்களை வணங்கியுள்ளனர் என்பது இதனை உறுதிச் செய்கிறது. முதன்மைத் தெய்வமாக விளங்கிய கொற்றவை வழிபாட்டினையும்

சூரர மகளிர், விந்தை, அயிரை, கானமர் செல்வி போன்ற பெண் தெய்வங்களின் வழிபாடுகள் குறித்து இப்பகுதியில் ஆராயப்படுகிறது.

**கொற்றவை**

வெற்றியைத் தருபவள் கொற்றவை எனப்பட்டாள். தொல்காப்பியம் கொற்றவை என்ற தெய்வத்தைப் போர்க்கடவுளாகக் காட்டுகிறது. புறப்பாடல்களிலும் வெட்சி வீரர்கள் கொற்றவையை வணங்கிச் செல்கின்றனர். குறிஞ்சிக் கடவுளான சேயோனைப் போர்க்கடவுளாக ஆக்கிய காலத்து, அவனைப் பெற்றவளாகக் கொற்றவை சுட்டப்படுகிறாள்.

ஆண் தெய்வங்கள் திணைநிலைத் தெய்வங்களாக சுட்டப்பட்டாலும் தொல்காப்பியம் சுட்டாத தெய்வங்களையும், சில தாய்த்தெய்வங்களையும் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. கொற்றவையைப் போர்த்தெய்வமாகக் காட்டுகிறது. தாய்த்தெய்வத்தைப் போர் தெய்வமாகக் காட்டுவதும் தாய்வழிச் சமூகம் இருந்ததையே காட்டுகிறது. நிர்வாகத்திறன், குழுவை ஆளும் திறமை போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு போர்த்தெய்வமாக காட்டப்படுகிறது.

**மறங்கடை கூட்டிய குடிநிலை சிறந்த**
**கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே (தொல். 62)**

இதனால் 'கொற்றவை' குறிஞ்சிக்குரிய தெய்வமாகவும் சுட்டப்படுகிறது. பாலைக்குரிய தெய்வமாகவும் சுட்டப்படுகிறது.

தொல்காப்பியர் கூறும் முதன்மையான தாய்த்தெய்வம் கொற்றவையே. கொடூரமாகக் கொல்லும் விலங்குகளிடமிருந்தும் அச்சம் தரும் பேய்களிடமிருந்தும் தம்மைக் காத்துக் கொள்ளும் பொருட்டு வழிபட்டனர். பின் தம்மைக்காக்கும் இறைவனைக் கொற்றன் என்றும் பெண் தெய்வத்தைக் கொற்றவை என்றும் பெயரிட்டழைத்தனர். கொற்றி, கொற்றம் என்பவை தீய சக்திகளை வெற்றி கொள்ளுதலைக் குறித்தது. விலங்கு பேய்களைப் போல தமக்குத் துன்பம் விளைக்கும் பகைவர்களையும் கொல்லும் என்ற நம்பிக்கையில் போர் நிகழ்த்துவதற்கு முன்னும் பின்னும் கொற்றவையாகிய தெய்வத்தை வழிபட்டனர்.

போர்க்கடவுளாகிய கொற்றவைக்குப் பேய்கள் வழிபாடு செய்தன. பகைவரின் தலையாகிய அடுப்பிலே கூவிளம் விறகிட்டு எரித்து ஆக்கும் கூழில் குடல்கள் மிதக்கும். வன்னிமரக் கொம்பிலே மண்டை ஒட்டைச் செருகி, அகப்பையாக்கி, கிண்டியது. ஈனாத பேய்மகள் சமைத்தக் கூழினை (நிணச்சோற்றை) பேய்மகள் கொற்றவைக்குப் படைத்தாள் (புறம். 372) என்கிறது புறநானூறு.

பிற்காலத்தில் எழுந்த கலிங்கத்துப் பரணி இவ்வழிபாட்டையும் காளிக்கும் கூளிக்குமான தொடர்புகளையும் கூறுகிறது.

கொற்றவைக்கு இருவகை பலிகள் இடப்பட்டுள்ளன. 1. உயிர்ப்பலி, 2.குருதிப்பலி

இவை இரண்டுமே வெட்சிக்கும் வஞ்சிக்கும் பொது என்பதனால் புறவாழ்வில் வழிபட்ட முறை என்று தெரிகிறது.

நச்சிலைவேற் காளைக்கு நாளையே கொற்றவை கைச்சிலையும்
நல்கும்யாங் காயேங்கொள் மிச்சில் கூர்

வாளின்வாய்த் தீண்டாத வார்குருதி மெய் சாய்ப்பத்
தாளின்வாய் வீழ்த்தாள் தலை (உயிர்ப்பலி)

ஆடிப்பாண் பாடி யளவின்றிக் கொற்றவை
பாடினி பாடற் படுத்துவந்தா னாடிய
தோளுழைய யாடுவோன் தோளினுந் தூக்கமைந்த
தாளுழலை யாடுவோன் தோளினுந் தூக்கமைந்த
தாளுழலை ஆடுவோன் தான் (குருதிப்பலி)

என்று நச்சினார்க்கினியர் 2 வகை பலிகளைக் குறிப்பிடுகிறார்.

பாலை நில மக்களாகிய எயினர், தேக்கு இலையில் வாடூண் (கருவாடு) படையலிட்டு படைத்தனர். (பெரும்பாண்.100-105) இன்றும் ஆடிமாதத் திருவிழாவின்போது மாரியம்மனுக்குக் கூழ் வார்த்தலும் கருவாட்டுக் குழம்பு வைத்துப் படையலிடுதலும் சிறப்பாக உள்ளது. போர்க்களத்திலே தம்

கணவருக்கு வெற்றிகிட்ட வேண்டுமென்று பெண்கள் கொற்ற வழிபட்டனர்.

இன்னா அரும்படர் தீர விறல்தந்து
இன்னே முடிகதில் அம்ம (நெடுநல். 167-168)

ஒளியின் நீங்கா விறற் படையோள்
அளியின் நீங்கா அருள் உரைத்தன்று
(புறப்பொருள் வெண்பா மாலை வெட்சித்திணை, ப.33)

சிங்கவுருவம் கொண்ட சிறப்புற்ற அழகிய கொடியினையும் பசுங்கிளியினையும் பாய்கின்ற கலைமானாகிய ஊர்தியினையும் பேய்களால் மிகுந்த படைகளையும் உடையவள் கொற்றவை என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறுகின்றது.

எள்ளினை இடித்து எண்ணெய்க் கசிவுடன் படைத்து, நெற்பொரியும் அவரை, துவரை, அவர், நிணம், குடர், உதிரம் போன்றவற்றைப் படைப்பர்.

அணங்குடை நோலை பொரிபுழுக்கல் பிண்டி
நிணங்குடர் நெய்த்தோர் நிறைத்துக் கணம் புகலக்
கையிரிய மண்டைக் கணமோடி காவலற்கு
மொய்யிரியத் தான் முந்துறும் (பு.வெ.மா., ப. 55)

வண்ணக் குழம்பும் சுண்ணப்பொடியும் குளிர்ந்த நறுஞ் சந்தனமும் புழுக்கலும் எள்ளுருண்டையும் நிணச்சோறும் பூவும் புகையும் போன்ற பொருள்களையும் மறக்குடி மகளிர் ஏந்தி வந்தனர். வழிப்பறி நிகழ்த்தும்போது முழங்கும் பறையும் சூரையிடுங் காலத்திலே ஊதும் சின்னமும் கொம்பும் குழலும் மணியும் ஒன்றாகச் சேர்ந்து ஒலிக்கப்பட்டன.

**பலிபீடம்**

கொற்றவைக்குக் கோயிலும் அதன் முன் பலிபீடமும் இருந்தது. அப்பலிபீடத்தினை முதலில் தொழுவர். அதன்பின் உள்ளேயிருந்த கொற்றவையின் திருவுருவத்தினையும் பணிந்து போற்றினர். மேலும் அவள் தோற்றத்தை,

மதியின் வெண்தோடு சூடுஞ் சென்னி
நுதல்கிழித்து விழித்த இமையா நாட்டத்துப்
பவள வாய்ச்சி: தவளவாய் நகைச்சி
நஞ்சு உண்டு கறுத்த கண்டி, வெஞ்சினத்து
அரவுநாண் பூட்டி நெடுமலை வளைத்தோள்
துளை எயிற்று உரகக் கச்சுடை முலைச்சி
வளையுடைக் கையில் சூலம் ஏந்தி,
கரியின் உரிவை போர்த்து அணங்கு ஆகிய
அரியின் உரிவை மேகலை யாட்டி
சிலம்பும் கழலும் புலம்பும் சீறடி
வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை
இரண்டுவேறு உருவின் திரண்டதோள் அவுணன்
தலைமிசை நின்ற தையல் பலர் தொழும்
அமரி, குமரி, கவுரி, சமரி,
சூலி, நீலி, மால் - அவற்கு இளங்கிளை
ஐயை, செய்யவள் வெய்யவாள் தடக்கைப்
பாய்கலைப் பாவை, பைந்தொடிப் பாவை
ஆய்கலைப் பாவை அருங்கலப் பாவை
தமர்தொழு வந்த குமரிக் கோலத்து
அமர் இளங் குமரியும் அருளிளை (வேட்டுவ வரி. 55-74)

கொற்றவை கோயில் மதுரை நகரின் காட்டில் இருந்ததையும் கொற்றவையின் தோற்றத்தினையும் சிலம்பு கூறுகிறது.

போரில் வெற்றி கிட்ட வேண்டுமாயின் கொற்றவைக்கு நேர்த்திக்கடனைச் செலுத்த வேண்டும் என்று தேவராட்டி வெறியாடி கூறுகின்றாள். உடனே மறவர்கள் தம் தலையைத் தாமே கொய்து பலியிட்டு பிறரை எண்ணிக்கொள்ளுமாறு நேர்த்திக் கடன் செலுத்துவர். கொற்றவைக்கு மட்டுமே நரபலி கொடுக்கப்பட்டுள்ளது.

கொற்றவையைப் போல தொல்குடியில் வந்த குமரிக்கு வேடம்புனைந்து வணங்கும் மரபையும் சிலம்பு பதிவு செய்துள்ளது.

மறவர்கள், குமரி ஒருத்தியை அழைத்து, அவள் கூந்தலினை சிறுவெள்ளைப்பாம்பு குட்டி போன்று பொன்கயிற்றால் சுற்றினர். அவள் கூந்தலைநெடுமுடியாகத் தலைமேல் உணர்த்துக் கட்டினர். காட்டுப்பன்றியின் வளைந்த கொம்பினை அச்சடைமுடிமேல், 'திங்கள் பிறை' எனக்கூறி சார்த்தினர். வலிய புலியின் பற்களை வரிசையாகக் கோர்த்து 'புலிப்பல் தாலியாக' அவள் கழுத்தில் இட்டனர். வரியும் புள்ளியும் கலந்த புலித்தோலினை அவள் இடையிலே மேகலையாக உடுத்தனர். அன்போடு வயிர வில்லினை வளைத்து அவள் கையிலே கொடுத்தனர்.

வாகனம் : கலைமானின் முதுகிலே அவளை ஏற்றினர். பாவை, கிளி, கானங்கோழி, நீலநிற மயில், பந்து, கழங்கு ஆகியவற்றைத் தந்தனர். 'பிறைசூடும் சென்னியாள், நெற்றிக் கண்ணினாள் பவளவாயாள். நஞ்சுண்டு கறுத்த கழுத்தினாள் அரவினை நாணாகப் பூட்டி, மேரு மலையினை வளைத்தவள். அரவினைக் கச்சாகக் கட்டியிருக்கும் முலையினாள். சூலமேந்திய கையினாள். யானைத் தோலைப் போர்த்தியவள். அதன்மேல் புலித்தோலை மேகலையாக அணிந்தவள். இடக்காலிலே சிலம்பும், வலக்காலிலே வீரக்கழலும் அணிந்தவள். எருமைத்தலையும் மனித உடலுமான மகிடாசுரனைக் கொன்று அவன் தலைமீது நிற்பவள். அந்தம் இல்லாதவள். குமரியாயிருப்பவள். கருநிறமுடையவள். போரின் கடவுள். அனைத்துலகையும் கருவிலே தாங்கியவள். நீலநிறமுடையவள். திருமாலுக்குத் தங்கையானவள். வாளினைக் கொண்டவள், பாயும் கலையிலே ஊர்ந்து வருபவள்' என்று கொற்றவையின் தோற்றம் விரிவாகக் கூறப்படுகின்றது. சிவனின் தோற்றமும் கொற்றவைமேல் ஏற்றி சொல்லப்பட்டுள்ளது.

நாயன்மார்கள் வாழ்ந்த கால கட்டத்தில் இவை சிவபெருமானின் தோற்றமாக பாடப்பட்டுள்ளது. ஆராயத்தக்கது.

சிவனின் ஒரு பாகத்தினைப் பெற்று உலகாள்பவள்

**கண்ணுதல்**
பாகம் ஆளுடை யாள்பலி முன்றிலே (வேட்டுவவரி 7-1)

என்றதனால் சிவவழிபாடும் இருந்துள்ளது. எனினும் கொற்றவையே சிறப்பிக்கப்படுகிறாள்.

'திருமாலுக்கு இளையவள்' என்ற செய்தியும் இங்கு சுட்டப்படுகிறது.

திருவ மாற்கு இளை யாள்திரு முன்றிலே (வேட்டுவவரி 7-3)

அரி, அரன், அயன் ஆகியோரின் நெஞ்சில் விளக்காகி நிற்பவள் சங்கமும் சக்கரமும் தம் கையிலே ஏந்தி, சிங்க ஏற்றின்மேல் நிற்பவள், கொன்றையும் துளபமாலையும் அணிந்தவள்.

## நேர்த்திக்கடன்

வெற்றி பெற்ற வீரர்கள், அறுபட்ட மிடற்றிலே இருந்து வழியும் குருதியை விலையாகக் கொடுத்தனர்.

மிடறுஉகு குருதி, கொள் விறல்தரு விலையே (வேட்டுவவரி.15)

கொற்றவைக்கு ஆடப்பட்ட கூத்து துணங்கைக் கூத்து எனப்பட்டது. மகளிர் விழாக் காலத்தில் துணங்கை ஆடுதலும் ஆடவர்கள் அவர்க்கு முதற்கை கொடுத்தலும் பழைய வழக்கங்களாக இருந்தன. விழாக்களிலே ஆடப்பட்டதை, குறுந்தொகை (364), மதுரைக்காஞ்சி (15960), பதிற்றுப்பத்து (13), அகநானூறு (336) போன்ற இலக்கியங்கள் அறிவிக்கின்றன.

போர்க்களத்திலே தன்னை சேவிக்கும் மகளிரோடு சேரன் துணங்கை ஆடினான் என்று பதிற்றுப்பத்து (ஆறாம்பத்து) கூறுகிறது. துணங்கை, குரவை என்பன இனக்குழு ஆடல் வடிவங்களாகவே இருந்தன.

## கொற்றவையின் தோற்றமும் கருவிகளும்

கொற்றவை எட்டு கரங்களையுடையவள், வில், வாள், சங்கு, சக்கரம், குறுவாள், கேடயம், சூலம், கிளி ஆகியவற்றைத் தாங்கி, மான்மீது அமர்ந்தவள். பல்லவர் காலத்தில் வடவர் வழிபாடான துர்க்கை வழிபாடு தமிழகத்தில் வேரூன்றியது. ஒரே சிற்பத்தில் கொற்றவை, துர்க்கை ஆகிய இருவர் கூறுபாடுகளை இணைத்து சிற்பங்களைப் படைத்தனர். பின்னர் கொற்றவை வழிபாடு, துர்க்கை வழிபாட்டில் கலந்து மறைந்துவிட்டது. போர்களும் கொள்ளையிடுதலும் குறைந்ததும் துர்க்கை வழிபாடும் தன்னிலையில் குறுகியது. துர்க்கையும் தன் இயல்பை விடுத்து சிவன் கோயில் கோட்ட தெய்வமானாள். செங்கை மாவட்டத்தில் கொற்றவை எட்டு கரங்களுடன் சங்கு சக்கரம், வளை,

துடி, சூலம், வாள், வில், அம்பு, கேடயம் ஆகியவற்றை ஏந்தியுள்ளாள். திருவடியில் பந்து, கழங்கு, கிளி ஆகியனவும் பின்புறம் ஒரு மானும் வலப்பக்கம் தலையை அறுத்துக் கொடுத்த மனிதனும் இடப்புறம் வணங்கும் மனிதனும் உள்ளார்கள், திருவடியில் காட்டெருமைத் தலையும் உள்ளது. (கோ.மு. முத்துசாமிப்பிள்ளை, 1991, பக்.9596) கொல்லிமலையிலும் எட்டு கரங்களையுடைய அம்மன் கோயில் உள்ளது.

வாகை என்பது வெற்றியின் அடையாளமாகச் சூடப்பட்ட பூ. அம்மரத்தை வெற்றியைத் தரும் கொற்றவை உறையும் இடமாக நம்பினர்.

கடவுள் வாகைத் துய்வீ (பதிற்.66:15)

கொற்றவை குறிஞ்சிமக்களுக்கும் பாலை மக்களுக்குமான தெய்வமாக காட்டப்படுவதால் ஆறலைக் கள்வர்களின் தெய்வமாகவும் வேட்டையாடு தொழில் புரிந்தோரின் தெய்வமாகவும் இருந்து விளங்குகிறது. ஆனால் துர்க்கை, வழிப்பறி செய்வோரிடமிருந்து காக்கும் தெய்வமாக வடமரபில் வணங்கப்படுகின்றாள். ஆதலின் இருவரும் வேறுவேறு என்பது தெரிகிறது.

கொற்றவைக்குப் பரவுக்கடன் கொடுக்கும் பொருட்டு நூலினைக் காப்புக் கட்டிக்கொள்ளுதல், புள்நிமித்தம் பார்த்தல், நற்சொல் கேட்டல் ஆகியவை மேற்கொள்ளப்பட்டன. காப்புநூல் கைந்நூல் எனப்பட்டது. கணவனைப் பிரிந்த மகளிர் கைந்நூல் யாத்தல் மரபு.

விடர்முகை யடுக்கத்து விறல்கெழு ஒலிக்குக்
கடனும் பூணாம் கைந்நூல் யாவாம்
புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம்
உள்ளலும் உள்ளா மன்றே (குறுந்.218)

கொற்றவைக்கு நோன்பிருந்து வழிபட்டனர். ஆண் தெய்வங்களுக்கும் இத்தகைய வழிபாட்டு முறை இருந்துள்ளது.

போர்க்களத்தில் கடுஞ்சினத்துடன் ஓதப்படும் மந்திர முழக்கத்துடன் அருந்திறல் கடவுளாகிய கொற்றவைக்கே குருதியுடன் கலந்து படைக்கப்பட்டது. அச்சோற்றுத் திரளைக் காக்கைக்கு பலியாக வீசும்போது, அச்சோற்றைப்

பேய்களும் தம் கையால் தொடுவதற்கு அஞ்சும். அவ்வுணவின் மீது எறும்பும் மொய்க்காது என்ற பதிற்றுப்பத்து (2) கூறுகிறது.

சூலப்படையை உடையவள் ஆதலால் சூலி எனப்பட்டாள் மலையுறை தெய்வமாகிய இவளைப் பெண்கள் நோன்பிருந்து வழிபட்டுள்ளனர்.

சூலிக்கு, செய்யவேண்டிய பலிக்கடன்களைச் செய்யோம். கையில் காப்பு நூலைக் கட்டோம். நிமித்தத்தைப் பார்க்க மாட்டோம் நற்சொல்லை கேட்க மாட்டோம் என்று கூறுவது பிற்காலத்தே தோன்றிய 'திருப்பாவை' இலக்கியத்தில், பாவை நோன்பு நோற்கும் மகளிர் நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' என்று கூறுவதற்கும் பாவை நோன்பிற்கும் முன்னோடியாக இருந்துள்ளது. தலைவன் சென்ற வினை நன்கு முடிய வேண்டுமென்று மேற்கண்ட நோன்பிருத்தல் பண்டையோர் மரபு. தாய்த்தெய்வத்திற்குக் காப்பு கட்டும் வழக்கம் இருந்துள்ளது.

## 1.2 சூரரமகளிர்

முருகனுக்குப் பணி செய்யும் தேவமகளிர் இவர். இவர்கள் கடவுள் தன்மையையுடைய குவளை மலர்களையும் செங்காந்தள் மலர்களையும் சூடிக்கொண்டு முருகனுக்குப் பணி செய்பவர். மானுட மகளிர் இப்பூவைச் சூடார். சூர் என்பதற்கு அச்சம், கொடுந்தெய்வம் என்று பொருள் (தமிழ்ப்பேரகராதி, தொகுதி.3, 1982, ப.564) சூரரமகளிர் என்பது தெய்வப் பெண்களைக் குறிக்கின்றது. (மேலது ப.1566) அணங்கு என்ற சொல்லும் அச்சம் தரும் தெய்வத்தையே குறிக்கிறது. அணங்குடை முருகன் கோட்டம் என்பதால் இவ்வணங்குகள் முருகன் கோட்டத்தில் தான் இருக்கும். பாலுணர்வைத் தூண்டித் தொந்தரவு செய்வன இந்த அணங்குகள். கொல்லுகின்ற தெய்வங்கள் அல்ல இந்த அணங்குகள். பாலுணர்வு காரணமாகத் தூக்கத்தைக் கெடுப்பன அந்த அணங்குகள்" (தொ. பரமசிவன், பக்.53-54) அதனால் தாக்கணங்கு எனப்பட்டது. இளவயதினரை வருத்தியவை இவை. மலைகளில் உறைபவை. மலையுறை தெய்வங்களுக்குத் தேன், மாங்கனி, பலாச்சுளை ஆகியவற்றைத் தேனிலே கலந்து மூங்கில் குழாய்களிலே இட்டுவைத்து, முதிர்ந்தபின் படைக்கின்றனர். (அகம். 348: 210) சூர்மகளிர் இயல்புகளையும் கொண்டாட்டத்தையும் திருமுருகாற்றுப்படை விரிவாகக் கூறுகிறது. (12-14)

**பேய்கள்**

காடமர் செல்வியின், கொற்றவையின் படைகளாக பேய்கள் கூறப்பட்டுள்ளன. 'பே' என்றும் சொல் அச்சம் என்ற பொருளையே தருகின்றது. பிணமும் இரத்தமும் இருக்கின்ற இடத்தில் ஆவியுலக நம்பிக்கை இருந்தபோது, மிஞ்சிய பிணத்தையும் நிணத்தையும் பேய் சாப்பிட்டு விடும் என்பது நம்பிக்கை." (தொ. பரமசிவன், 2008, ப.49) இந்நம்பிக்கை இன்றுமுள்ளது.

உலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்
கழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையோடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்குங் காதிற் பிணற்மோட்
குருகெழு செல்வி னஞ்சுவரு பேய்மகள் (திருமுருகு. 47-51)

தாய்த்தெய்வத்தைத் தொழும் பேய்களுக்கும் பெரிய வயிறும் பெரிய முலைகளும் கூறப்பட்டுள்ளன. காதில் கூம்பும் இருப்பதாக திருமுருகாற்றுப்படையும் கருமறியைக் காதில் உடையதாக சிறுபாணாற்றுப் படையும் கூறுகிறது. இப்பேய்கள் கொற்றவைக்குக் கூழ் சமைத்துத் தரும் என்றும் கூறப்படுகிறது. இப்பேய்கள் தீங்கு தரவல்லனவாகவே நம்பப்பட்டது. அதனால் வீட்டினை அவை அணுகாதிருக்க வீட்டின் இறப்பில் வேட்பிலை செருகுதல், காஞ்சிப்பண் பாடுதல் சிறுவெண்கடுகு புகைத்தல் ஆகிய சடங்குகள் மேற்கொள்ளப்பட்டன. (புறம்.296)

போர்க்களத்திலே குருதி ஆற்றில் மிதக்கும் பிணங்களை உண்டு களித்து ஆடின. 'பாசம்' என்ற சொல்லும் பேய்களையே குறித்தது. தன்னால் பற்றப்பட்டதை உயிரைக் கொள்ளாமல் தனக்கிட்ட பலியை மட்டும் ஏற்றுக்கொண்டு நீங்கும் (பதிற். 8ஆம் பத்து) என்று நம்பப்பட்டது. 'பெருங்காட்டுக் கொற்றிக்கு பேய் நொடித்தாங்கு'(கலி) என்பதனால் பேய் நொடி சொல்லும் என்றும் நம்பட்டது.

ஆட்டுக் குட்டியினை அறுத்து, தினையில் செய்த பலியைப் படைத்து பலவகை வாத்தியங்கள் முழங்க செய்து தன் மகளின் நோய்த் தீர பெண் தெய்வங்களுக்கு உயிர்ப்பலி கொடுக்கப்பட்டது. (குறுந்.263)

## 1.3 விந்தை

'கடவுட் பெயரிய கானம்' (நான்காம்பத்து) என்று பதிற்றுப்பத்து சுட்டும் தெய்வம் விந்தை என்பதாகும். இக்காடு விந்தாடவி எனப்பட்டது. மணிமேகலையும் இச்செய்தியைத் தருகிறது. (கொல்லிப் பாவையைப் போன்று விந்திய மலையிலிருந்த விந்தாகடிகை என்பவள் யாரேனும் அம்மலையிற் போனால் இழுத்து வயிற்றில் போட்டுவிடுவாள் என்று நம்பப்பட்டது). தமிழர் போற்றிய தாய்த்தெய்வத்துள் இதுவும் ஒன்றாகும். கானம் என்றது விந்திய மலையை விந்தியமலையில் உறைவதால் துர்க்கைக்கு விந்தை என்ற பெயருண்டு." (உ.வே.சா, 1994, ப.232)

மஞ்சுசூழ் நேடுவரை விஞ்சத் தடவி (பெருங். 53:52)

என்று பெருங்கதையிலும் கூறப்படுகிறது.

## 1.4 அயிரைத் தெய்வம்

சேர மன்னர்களின் வழிபாட்டுத் தெய்வமாக விளங்கியது அயிரைமலைத் தெய்வம் கொற்றவை உறையுமிடமாக அயிரை மலை கருதப்பட்டது. அயிரை மலையைத் தலையாகக் கொண்டு ஒழுகப்பட்டது. அயிரை மலையைத் தலையாகக் கொண்டு ஒழுக்கப்பட்ட ஆறு அயிரை ஆறு. அயினர். ஓர் நதி (அபிதான சிந்தாமணி, 2001, ப.78) இருஞ்சேரல் இரும்பொறை தும்பைப் போரில் கொற்றவையை வழிபட்டான்.

மாற்றருந் தெய்வத்துக் கூட்ட முன்னிய
புனன்மலி பேரியா றிழிதந் தாங்கு (பதிற். 4ஆம் பத்து. 10)

உருகெழு மரபி னயினா பரவியும் (மேலது)

பரம்பரை பரம்பரையாக சேர மன்னர்களால் கொற்றவையாகிய அயிரை மலைத் தெய்வம் வணங்கப்பட்டு வந்ததை பதிற்றுப்பத்து (3அம்பத்து) பதிவு செய்துள்ளது. சேரர்களின் குலதெய்வமாக இருந்ததென்பதும் உறுதியாகிது.

அயிரைமலைக் கொற்றவைக்கு நரபலி கொடுக்கப்பட்டதையும் பதிற்றுப்பத்து கூறுகிறது. வீரர்களுடைய உயிர்நிலையிலிருந்து வந்த இரத்தம் பலியாக அளிக்கப்பட்டாலல்லது நிவேதனத்தை ஏற்றுக் கொள்ளாது (பதிற்.79)

என்றும் பகைவரைக் கொன்று அவர்களின் இரத்தம் சோற்றுடன் கலந்து கொற்றவைக்கு படைக்கப்பட்டது என்றும் இந்நூல் வெளிப்படுத்துகிறது.

நன்னனை அழித்து பகைவரது இரத்தத்தைத் தெளித்துக் கலந்த திரட்சியை யுடைய சோற்றின் பிண்டங்களால் அச்சம் பொருந்திய இயல்பினையுடைய அயிரைமலையிலுள்ள துர்க்கையை வழிபட்டனர்." (உ.வே.சா. 1994, ப.233) முடியுடை அரசரும் குறுநில மன்னர்களும் வழிபட்டனர்.

குருதி விதிர்த்த குவவுச் சோற்றுக் குன்றோ
டுருகெழு மரபி னயிரை பரைஇ (பதிற். 9ஆம் பத்து)

என்கிறது பதிற்றுப்பத்து.

## 1.5 கானமர் செல்வி

கானமர் செல்வி (அகம். 345)

என்ற தாய்த்தெய்வத்தைக் காடுறை தெய்வமாக முன்பழந்தமிழ் இலக்கியம் சுட்டுவதால் முல்லை நிலக் கடவுளுக்கு (மாயோனுக்கு) முன்பே முல்லைத் திணைக்குரிய (அ) காட்டில் உறையும் தெய்வமாக இருந்திருக்கின்றாள். நன்னன் ஆண்ட பூழிநாட்டில் அவனுக்குப் பிறகு கதம்பகுல மன்னர்கள் ஆண்டனர். இவர்கள் ஆட்சிக் காலத்தில் பூழிநாடு வனவாசி என்றழைக்கப்பட்டது. கடம்பு, சந்தனம் போன்ற ஒரேவகை மரங்களில் இத்தெய்வம் உறைவதாக நம்பினர். மதுரை மீனாட்சியும் கடம்பவனத்தில் உறைவதாக மதுரைப் புராணம் கூறுவதைக் கொண்டு கானமர் செல்வியே மீனாட்சியாக இருக்க வேண்டும். மெகஸ்தனிஸ் எழுதிய நூலில் மீனாட்சியைப் பற்றியக் குறிப்பு உள்ளதால் இத்தெய்வம் கி.மு. ஆறாம் நூற்றாண்டிலேயே வடநாட்டிலும் தெரிந்திருந்தது. மெகஸ்தனிஸ் அவளை ஹெராக்கிளிசின் மகளாகவும் மதுரையில் பெண்ணரசியாக ஆட்சி செய்ததாகவும் குறிப்பிட்டுள்ளார். எனவே இச்செய்தி மதுரை மீனாட்சி என்ற தாய்த்தெய்வத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். (பி.எல். சாமி, 1980, ப.45)

பொருநர் ஆற்றுப்படை, காடுறை கடவுட்கடன்" (41-42) என்று காடுறைச் செல்வியையே குறிக்கின்றது. தெய்வமும் கடவுளும் ஒன்றே தெய்வம் என்ற சொல் தேய் என்பதினின்றும் தோன்றியிருக்கக்கூடும். உயிர்களின் துன்பத்தைத்

தேய்ப்பது தெய்வம். பலர் தெய்வத்தை நினைப்பது தமக்குத் துன்பம் வரும் காலத்தில்தான். ஆதலின், தெய்வம் எனும் தமிழ்ச்சொல் தேய் என்ற அடியினின்று தோன்றியதாகக் கொள்ளலாம்." (சி. இலக்குவனார், 2000, ப.117)

வன இல்லா ஆட்ட (283), வனா இல்லி கோயில் எழுப்ப ஆ (404), வி வனா இல்லாத்னி (408) ஆகிய சிந்துவெளி முத்திரைகள், காட்டை இல்லமாகக் கொண்ட தாய்த் தெய்வத்தையே குறிக்கின்றன என்று தொல்லியல் அறிஞர்கள் நிறுவுகின்றனர். இது தாய்த் தெய்வத்தின் தொன்மையைக் காட்டுகிறது.

பெருங்காட்டுக் கொற்றி" என்று கலித்தொகையும் 'கான நாடி' என்று தக்கையாக பரணியும் காடு கிழாள் என்று திருமுருகாற்றுப்படையும் கூறுகின்றது. சோழர் காலத்தில் காடுகாள், துர்க்கை, பிடாரி போன்ற தெய்வங்களுக்குத் தனித்தனி கோயில்கள் இருந்துள்ளன. கரிகாற் சோழனால் வணங்கப்பட்ட பிடாரி அம்மன் கோயில் இன்றுமுள்ளது. (பின்னிணைப்பில் காண்க).

துர்க்கைக்கு நரபலி கொடுக்கப்பட்டது. பதிற்றுப்பத்திலும் (76:16-18) கலிங்கத்துப் பரணியிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 2. வளமைத்தெய்வம்

சங்க இலக்கியங்களிலும் வளமையின் குறியீடாக அல்குலும் கொங்கையும் அடையாளமாக சுட்டப்பட்டுள்ளன. கொற்றவையைப் போர்க்கடவுளாக ஆவேசம் மிக்கவளாகக் காட்டியது ஒருபுறம். மறுபுறமும் பெண் தாய்மையுணர்வுடையவளாக வணங்கப்பட்டாள். பிறப்பிற்குக் காரணமாக கருதப்பட்டாள். உயிர்களைக் காப்பதற்குக் காரணமான கொங்கையினைத் தெய்வமாக கருதினர். பால்தந்து உயிர்களைக் காக்கும் உறுப்பை 'முலைத் தெய்வம்' என்றே வணங்கியுள்ளனர். தாய்மையைப் போற்றிய சமூகமாக சங்ககாலச் சமூகம் இருந்துள்ளது என்பதற்கு இது தக்கச் சான்று.

### 2.1 முலைத் தெய்வம்

பெண்ணை வளமையின் குறியீடாகக் காண்பது மரபு, சங்க இலக்கியங்களிலும் இம்மரபைக் காணமுடிகிறது. தாய்த்தெய்வ வழிபாடுகளின் பின்னணி வளமையோடு பெண்களைத் தொடர்பு படுத்துவதே எனலாம். தந்திர

அடிப்படையிலான வழிபாட்டிலும் இதை காணமுடிகிறது. ரோம நாட்டு வீனஸ் தெய்வமும் கிரேக்க நாட்டு ஸைடீஸ் தெய்வமும் வளமைத் தெய்வங்களே. இனம் பெருகுவதற்கு உதவுபவள் தாய். ஆதலால் இனவிருத்திக்குக் காரணமாக கருதப்பட்ட மார்பினையும் அல்குலையும் பெரிதாகக் காட்டும் வகையில் தாய்த்தெய்வங்கள் அமைக்கப்பட்டன. கருப்பையின் முக்கியத்துவத்தைக் காட்ட வயிற்றைப் பெரிதாக படைத்தனர். தாய்த் தெய்வங்களிலிருந்து வளமைத் தெய்வங்கள் பிரித்துக்காட்டப்பட்டன. கி.பி. முதல் நூற்றாண்டில் ரோமர்களால் வழிபடப்பட்ட வளமைத்தெய்வம் மனித கற்பனை வடிவத்தில் அமைக்கப்பட்டது.

சித்தர்களின் தந்திரம் தொன்மையான மந்திரவாதம். அதன் அடிப்படை சக்தி இச்சக்தி. பெண்மைதான் அவர்கள் பெண் பிறப்புறுப்பை (அல்குல்) இரண்டு வித அடையாளங்களால் குறிப்பிடுவர். ஒன்று தாமரை மலர், மற்றொன்று முக்கோணம்” (நாம. வானமாமலை, 2007, ப.76) தாமரை மலர் வளமையின் குறியீடாகவே அனைத்து சமயங்களாலும் கருதப்படுகிறது. அதனாலேயே படைப்புக் கடவுளான பிரம்மனையும் பெண் தெய்வங்களையும் தாமரையில் வீற்றிருப்பதாக கட்டமைத்தனர். விந்திய மலைத் தாய்த்தெய்வத்தைச் சவரர், புளிந்தர், பாபரர் ஆகிய காட்டுவாசிகள் இவளைத் தொழுதனர். இவள் மலைகளின் உச்சியிலும் குகைகளிலும் ஆறுகளிலும் காடுகளிலும் காற்றிலும் வாழ்பவளாகவும் மயிற்பீலியைச் சின்னமாகக் கொண்டவள் என்றும் மதுவும் இறைச்சியும் பலியாகக் கொடுக்கப்பட்டது என்றும் விஷ்ணுபுராணம் கூறுகிறது.

இந்த தாய்த் தெய்வத்தையே ஆரியர் துர்க்கை என்று கொண்டனர். பழந்தமிழரும் காமர் செல்வியை கொற்றவையோடு ஒப்பிட்டு துர்க்கை என்றும் கொண்டனர். இத்தெய்வம் மிகப் பழமையான குடிகளிடமிருந்து மிகப் பழங்காலத்தில் தமிழர் பெற்ற தெய்வமாதலால் பழையோள் என்றழைக்கப்பட்டாள். (பி.எல். சாமி, 1980, ப.57) முதுகோதை (தேவாரம்), முதியோள் கோட்டம் (மணிமேகலை) என்றெல்லாம் சுட்டப்பட்டுவது பழையோளையே என்பது உணரத்தக்கது. பெண் தெய்வங்களுக்கான திருவிழாக்களில் தாமரை (அ) முக்கோண வடிவில் கோலங்கள் அல்லது யந்திரங்கள் போடப்படுகின்றன.

வேளாண் தொழில் பெண்களின் கண்டுபிடிப்பு. அதன் காரணமாகவே பெண்கள் வழிபாட்டு நிலையைப் பெற்றனர் என்பர் சிலர். சிந்து சமவெளியில் கிடைத்த முத்திரை வடிவத்தையும் குப்தர் காலச் சுடுமண் வடிவம் ஒன்றையும் இதற்கான சான்றுகளாக அவர்கள் முன்வைக்கின்றனர். இந்த முத்திரையில் பெண்ணொருவரின் பிறப்புறுப்பிலிருந்து செடியொன்று முளைத்து வருவதாகக் காட்டப்பட்டுள்ளது. சுடுமண் வடிவத்தில் பெண்ணின் கழுத்திலிருந்து தாமரை முளைத்துள்ளது. இவை இரண்டுமே பெண்ணின் தாய்மைப் பண்பையும் வளமைப் பண்பையும் உணர்த்துவதாகக் கொள்வதே பொருத்தமாக அமையும். (மு. நளினி, இரா.கலைக்கோவன், 2005, ப.1)

2004இல் இந்திய தொல்லியல் அளவீட்டுத் துறையால் ஆதிச்சநல்லூரில் கண்டெடுக்கப்பட்ட அகழ்வாய்வில் தாய்த்தெய்வம் பொறிக்கப்பட்ட சுடுமண்பானை கிடைத்தது. அதில் நெற்கதிர் தனித்தும் அதையடுத்து தாய்த்தெய்வத் தோற்றமும் இருப்பதோடு கொக்கு, முதலை, மான் போன்ற வடிவங்களும் ஊர்வன, பறப்பன, நடப்பன என்று ஒவ்வொரு உயிரின வகையிலும் ஒரு வடிவம் உள்ளது. இப்பானையோடு அறிவியல் கணக்கெடுப்பின்படி ஆதிச்சநல்லூர் நாகரிகம் கி.மு. 1700ஐ தொடக்கூடும்" என்று தொல்லியல் அறிஞர்கள் கூறுகின்றனர்.

ஐரோப்பாவிலும் மொகஞ்சதாரோவிலும் கிடைத்துள்ள சுடுமண் சிற்பங்களிலும் தென்னிந்தியாவில் கிடைத்துள்ள தாய்த்தெய்வத்தைக் காட்டும் இரும்புக் காலச் சுடுமண் சிற்பங்களிலும் பெரிய வயிறும் பெரிய கொங்கையுமுடையவளாகவே அமைக்கப்பட்டுள்ளாள். கி.மு. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆதிச்சநல்லூர் கல்லறைப் புதைப்பொருள்களில் உலோகத்தால் ஆன சிறிய தாய்த்தெய்வச் சிற்பம் கிடைத்துள்ளது. தாய்த் தெய்வத்திற்குப் பெரிய வயிறும் பெரிய கொங்கைகளும் காட்டப்பட்டுள்ளன. பெரிய புட்டங்களும் காட்டப்பட்டுள்ளன. இவையெல்லாம் தாய்மையின் அடையாளங்களை மிகுத்துக் காட்டவே செய்யப்பட்டன என்பது தெரிகிறது. (பி.எல்.சாமி, 1980, ப.40)

சோழர் காலத்தில் அவர்களின் குலத்தெய்வமாக தொழப்பட்ட தெய்வம் நிதம்பசூதனி. பெரிய பெண்ணுறுப்பை உடைய தெய்வமே இவ்வாறு அழைக்கப்பட்டு வணங்கப்பட்டது.

சங்க இலக்கியங்களில் 'முலைவாழ்திரு' என்றும் 'முலை வீற்றுத் தெய்வம்' என்றும் சுட்டப்படுகின்றது. சினையாகுபெயராய் முலைத்தெய்வம் என்பது முலையையுடைய பெண்ணிற்கே ஆகிவந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

சுணங்குசூழ் அகத்து அணங்கு என உருத்த
நல்வரல் இளமுலை (அகம். 161:12-13)

பொரிப் பூம்புகின் அழற்தகை ஒண்முறி
சுணங்கு அணி வனமுலை அணங்கு கொளத் திமிரி (நற். 9:5-6)

பாலை நிலத்தில் நடந்துச்செல்லும் போது தலைவன் கூற்றாக அமைந்த இப்பாடல் வளமைத் தெய்வமாக பெண் தெய்வம் வணங்கப்பட்டதையே காட்டுகிறது.

**வயிற்றைப் போற்றும் மரபு**

தாய்மையைப் போற்றும் மரபில் பிள்ளைபெற்ற வயிற்றைப் போற்றுவதும் முக்கியமான நிகழ்வாகும். தாய்த்தெய்வத்தைக் குறிக்கும் 'மோடி' என்ற சொல் எல்லோரையும் பெற்ற வயிறு என்று பொருள்படுகிறது. மோடு என்ற சொல்லிற்கு நச்சினார்க்கினயர் மேற்கண்ட பொருளையே கூறுகிறார். (பெரும்பாணாற்றுப்படை, 458) பதிற்றுப்பத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் தாயை வாழ்த்தும்போது அவள் வயிறே வாழ்த்தப்படுகின்றது.

வயிறுபசி கூர வீயலன்
வயிறுமா சீலியரவ னீன்ற தாயே (பதிற். 2ஆம் பத்து)

இவனை ஈன்ற தாயின் வயிறு விளங்குவதாக என்று பிள்ளைபெற்ற வயிற்றை வாழ்த்தும் மரபும் சங்க காலத்தில் இருந்துள்ளது. கொற்றவையின் வயிறு சேஎய் பயந்த மாமோட்டு" (பெரும்பாண்) என்று சிறப்பிக்கப்படுகிறது. பிற்காலத்தே எழுந்த சைவ, வைணவ இலக்கியங்களில் 'வயிற்றைச்' சிறப்பிப்பது தாய்த்தெய்வ வழிபாட்டின் உள்வாங்கலே எனலாம். கண்ணனைப் பெற்ற வயிறு, மணிவயிறு என்று போற்றப்படுகிறது. அவதாரங்களைப் பெற்ற வயிறுகள் போற்றப்படுகின்றன. வடமொழி மரபில் முருகன் தாய்வயிற்றில்

உதிக்கவில்லை. தமிழ்மரபில் கொற்றவையின் வயிற்றில் பிறந்தவனாக கற்பிக்கப்பட்டு அவள் வயிறு சிறப்பிக்கப்படுகிறது.

மிகவும் பிற்காலத்தில் மோடி, மோடு என்ற சொற்கள் பிள்ளைபேறு இல்லாத பெண்களின் வயிற்றைக் குறிக்கும் விதமாக மலடி, மலடு என்று மாற்றம் பெற்றிருப்பதும் கருதத்தக்கது.

**சமண சமயத்தில் சங்கு**

சமண சமயத்தில் தெய்வங்களுக்கான அடையாளக் குறியாக சங்கு இடம் பெற்றுள்ளது. இச்சமயத்தில் ஆகமங்களையே பெண்தெய்வ உருவமாகப் போற்றுகின்றனர். அத்தெய்வங்களை ஜினவாணி, ஆகமஸ்வரூபி என்கின்றனர்.

இப்பெண் தெய்வங்களின் கைகளில் சங்கு இடம்பெற்றுள்ளது. இவர்களுக்குப் பணி செய்யும் பணியாளர்கள் கையிலும் சங்கு ஏந்தப்பட்டுள்ளது. சங்கு மீது அமர்ந்த கோலமும் காணப்படுகிறது. இதனைத் திகம்பர தத்துவ நூல்கள் கூறுகின்றன.

கடலில் வாழும் சங்கும் வளமையின் குறியீடாகவே கருதப்பட்டது. தெய்வங்களின் கையிலோ அருகிலோ சங்கு முத்து போன்றவற்றை அமைத்துக் காட்டும் முறை இதனை விளக்குகிறது. மணமான பெண்கள் சங்கு வளையல்கள் அணிந்தனர். சங்கு வளமையின் குறியீடாக இருந்ததை பரிபாடல் கூறுகிறது. கடல்கெழு செல்வியைப் பழையன் மகளிர் முத்தும் சங்கும் சொரிந்து வழிபட்ட செய்தியை அகநானூறு (201) கூறுகிறது. வீடுகளில் சங்குகள் வைத்து வழிபடப்பட்டன. மங்கலப் பொருளாக மட்டுமன்றி, வளமைப் பொருளாகவும் கருதப்பட்டது.

இன்று தமிழ்நாட்டில் தெய்வ உருவங்களுக்கு நீராட்டு, பால், இளநீர்நீராட்டு, புனுகுநெய் பூசுதல் ஆகியவற்றோடு சங்கு நீர் ஆட்டுதல் ஆகியன பண்டைத் தமிழருடைய வழிபாடுகள். ஆரியப் பிராமணர்க்கு அவிப்பலி வழிபாடான ஹோமத்தைத் தவிர வேறு இருந்ததில்லை" (பி.எல். சாமி, 112) 'சங்குக் குறிபொறித்த திருமகளைத் திருமால் அணைந்தவாறு இருந்தான்' (முல்லை. 12) என்பது சங்கு வளமைக் குறியாக இருந்ததை உணர்த்துகிறது.

இச்சங்கு வழிபாடு சைவ, வைணவ சமண சமயங்களிலும் முக்கியத்துவம் பெறுகின்றது.

கிரேக்க ரோம நாட்டுத் தாய்த்தெய்வங்களுக்கும் சங்கின் இனமான கிளிஞ்சல்களைச் சின்னமாகக் கொள்ளும் மரபு காணப்படுகிறது. திருமகளின் உருவில் கிளிஞ்சலையும் ஆந்தைகளையும் சேர்த்துக் காட்டுவது வங்காளத்தில் இன்றும் வழக்கிலுள்ளது. வட மேற்கு இந்தியாவில் ஹரப்பா நாகரிகத்திற்கு முற்பட்டதாகக் கருதப்படும் 'குள்ளி' அகழ்வில் கண்டுபிடித்த நாகரிகத்தில் தாய்த்தெய்வ மண்பொம்மைகள் அகப்பட்டன. இந்தத் தாய்த் தெய்வத்தின் தலையில் சோழிகளை அணியாகவும் கையில் நிறைய சங்கவளைகளையும் கண்டனர். (பில்.எல். சாமி, 1980, ப.75)

பிறந்த குழந்தைகளுக்குச் சங்கில் பாலூட்டும் முறை தமிழகத்தில் இருப்பதும் வளமைச் சடங்கின் நம்பிக்கையே. இறப்பு சடங்கிலும் சங்கே முக்கியத்துவம் பெறுகிறது. பிறப்பு முதல் இறப்பு வரையிலான ஒவ்வொரு சடங்கிலும் சங்கு தனித்துவம் பெறுகின்றது.

## 2.2 பாவைத் தெய்வம்

பாவை என்ற சொல் பெண் தெய்வத்தையே குறிக்கிறது. சங்க காலத்தில் வணங்கப்பட்ட பெண் தெய்வங்களுள் முக்கியமானது இத்தெய்வம். பெண்களால் மட்டும் வழிபடப்பட்ட சிறப்பையுடையது இத்தெய்வம். இத்தெய்வத்திற்காக பாவைகள் செய்து, நோன்பிருந்து வழிபட்டுள்ளனர். " பாவை நோன்பு" என்று அது சுட்டபடுகிறது.

சுவரில் இருந்த பாவையைச் சங்ககால மக்கள் பலியிட்டுத் தொழுததை அகநானூறு (369) காட்டுகிறது.

தாழிய மலர்பல வணியா கேழ்கொளக்
காழ்புனைந் தியற்றிய வனப்பமை நோன்சுவர்ப்
பாவையும் பலியெனப் பெறாஅ நோய் பொர்

சுவரிலிருக்கும் பாவையைத் தொழும் வழக்கம் மலையாள நாட்டில் இன்றுமுள்ளது. மச்சிலம்மா என்ற தாய்த்தெய்வம் மேற்கும் சுவரில் உறைவதாக நம்பி வழிபடுகின்றனர்.

பாவை நோன்பு செழிப்புத் தெய்வ வணக்கமாகவே இருந்துள்ளது. பரிபாடலில் மகளிர் 'தாயருகே நின்று தவத்தை நீராடுதல்' என்று கூறப்பட்டிருப்பதால் தாய்தெய்வத்தை அருகே வைத்து நீராடியது தெரிகிறது." (பி.எல். சாமி, 1980, ப.7)

பாவைகள் பஞ்சாய், கோளா, மண். வண்டல் போன்றவற்றால் செய்தனர் என்பது சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. பைஞ்சாய் எனப்படும் கோரைப் புல்லால் செய்யப்பட்ட பாவைகளைத் தாய்த் தெய்வத்தின் உருவமாகக் கொண்டனர். இன்று கோரைப் புல்லால் பாவை செய்யும் வழக்கு தமிழகத்தில்லை என்றாலும் பீகார் மாநில அந்தணப் பெண்களிடையே இவ்வழக்கு உள்ளது.

சங்ககாலத்தில் மகளிர் பாவைகளைத் தம் கைகளாலேயே செய்து ஆலமுற்றத்துப் பொய்கையைச் சூழ்ந்த குளத்தில் போட்டனர். (அகம்.181) இதனால் பாவைத் தெய்வத்திற்குப் 'படிமம்' செய்து ஆற்றில் போடும் வழக்கிருந்தது தெரிகிறது.

அத்துடன் தைமாதத்தில் மகளிர் இடையில் தழையாடை (மாந்தழை)யைக் கட்டி கொம்பும் சங்கும் முழங்க வண்டல் பாவையோடு சென்று, துறையில் போட்டு குரவைக் கூத்து ஆடினர். (அகம். 269) முருக வழிபாட்டில் உள்ளதைப் போன்றே பாவைத் தெய்வ வழிபாட்டிலும் குரவை ஆடப்பட்டுள்ளது உறுதியாகிறது. இப்பாவை வழிபாடே பின்னாளில் மார்கழி மாதத்தில் நோற்கப்படும் பாவை நோன்பாக வளர்ச்சிப் பெற்றுள்ளது.

தைந்நீராடல் என்ற சங்க காலத்தில் மகளிரால் கொண்டாடப்பட்ட விழா தாய்வழி சமுதாயத்தின் அடையாளமே. தை மாதத்தில் கொண்டாடப்பட்ட இவ்விழா மகளிர்க்கு மட்டுமே உரியதாக வழங்கியது. மார்கழி முழுமதி நாள் முதல் தை முழுமதி நாள்வரையிலான நாட்களில் விடியற் காலையில் நீராடி நோன்பிருந்து, பாவை செய்து வழிபடுவது வழக்கம். பக்தி காலத்தில் திருப்பாவை, திருவெம்பாவைகளில் சிறப்பாக பாடப்படும் இந்நோன்பு சங்க காலத்திலேயே வழக்கிலிருந்ததை,

**தையில் நீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ** **(கலி. 59)**

நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும் தைஇத் திங்கள்
தண் கயம் போல பலர் படிந்து (ஐங். 84)

போன்ற சான்றுகள் நிறுவுகின்றன.

## 2.3 கொல்லிப்பாவை

தாய்த்தெய்வ வழிபாடுகளில் கொல்லிப்பாவையும் ஒன்று. இப்பாவை சேரனுக்குரிய அச்சந்தரும் கொல்லிமலையில் உள்ளது. கொல்லிமலை வல்வில் ஓரிக்குரியதாக இருந்து, காரியால் வெல்லப்பட்டு சேரனுக்கு வழங்கப்பட்டது. (அகம். 209) இப்பாவை மயக்கும் அழகையுடையது. கடவுளால் எழுதப்பட்டது. இதற்கான தொன்மம் அபிதான சிந்தாமணியில் கூறப்பட்டுள்ளது. (ப.789)

இது கொல்லிமலையின் மேல்பாற் செய்து வைக்கப்பட்ட பெண் வடிவமாகிய பிரதிமை. கொல்லிமலை தவஞ்செய்வோர்க்கும் தகுதியான இடம். தேன், பழம் முதலாயின கிடைக்கும். இதனைக் கருதியே தேவரும் முனிவரும் அங்கு வைகுவராயினர். இவர்கள் தங்கி இருப்பது கண்ட இராக்கதரும் அசுரரும் அங்குவந்து கூடவாராயினர். இவ்வாறு இராக்கதாதியர் வந்து நெருங்கவே முனிவர்கள் தவத்துக்கு ஊறு நேர்வதாயிற்று. அப்பொழுது தேவரும் முனிவரும் தனியிருந்து ஆராய்ந்து அப்பகைவர் மனத்தை அடக்க வல்லரல்லராதலின் அவர்கள் வருநெறியில் கண்டு, மயங்கி உயிர்விடும் வண்ணம் அழகமைந்த பெண் வடிவஞ்செய்து வைப்பதாக நிச்சயித்து, விச்சுவகன்மாவுக்குக் கூற அவனும் அம்மலையின் மேல்பால் அசுராதியர் வரும், நெறியில் கல்லாற்பாவை ஒன்றமைத்து உள்ளே பல வகையான சக்தியை ஊட்டி நிலை நிறுத்தினான். இப்பாவை இயங்கும் தன்மையுடையது. இராக்கதாதியர் வாடை பட்டவுடன் நகைக்குந் தன்மையுடையது. கண்டவரது உள்ளத்தையும் விழியையும் கவர்ந்து அவர்க்குப் பெருங்காம வேட்கையை யுறுவித்து இறுதியில் கொல்லத்தக்க மோகினி வடிவமுடையது". (அபிதான சிந்தாமணி, 2001, ப.511)

இப்பாவையைப் பெண் என்று நினைத்து காமநோய் மிக்கு கிடந்து மடிந்து போவர் என்றும் தேவதைகளால் காக்கப்படுவது என்று கூறப்படுகிறது. அழகுடைய பெண்களுக்கு இப்பாவை உவமையாக கூறப்பட்டுள்ளது.

பெரும்பூட் பொறையன் பேஎழுதிர் சொல்லின்
கருங்கண் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை யன்ன விம்
மெல்லியற் குறுமகள் பாடினர் குறினே (குறுந். 89)

என்று குறுந்தொகையும்,

பொறையன் கொல்லி ஒளிருநீ ரடுக்கத்து வியலகம்
பொற்பக் கடளெழுதிய பாவையின் மடவதுமாண்ட மாயோனே
(அகம்.62)

கொல்லி நிலைபெறு கடவுளாக்கிய
பலர்புகழ் பாவையன்ன நின்னலனே (அகம். 209)

என்று அகநானூறும் கூறுகின்றன.

கொல்லிப்பாவை பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் பல உள்ளன. (நற். 185, 192, 201, கலி.56, சிலம்பு.6, அகம்.208, புறம். 152, 158)

இப்பாவையின் உறுதித்தன்மை குறித்து நற்றிணை கூறுகிறது.

கால்பொருது இடிப்பினும் கதழுறை கடுகினும்
உருமுடன்று எறியினும் ஊறுபல தோன்றினும்
பெருநிலங் கிளரினுந் திருநல உருவின்
மாயா இயற்கைப் பாவை (201. 8 -11)

'கொல்' எனும் வினைச்சொல்லின் அடியாகப் பிறந்ததே இச்சொல். கொல்லும் தன்மையுடையது என்ற பொருளில் ஆளப்பட்டது.

இப்பாவை காமுகரைக் கொல்லும் இயல்புடைமையாற் கொல்லியெனவும் இஃதிருக்குமலை கொல்லிமலையெனவும் முன்பு பெயர்பெற்றதென்றும் பின்பு இம்மலையே கொல்லியெனப் பெயர்பெற்றதென்றும் பெரியார் கூறுவர்" என்கிறார் நச்சினார்க்கியர். (கலி. நச்சி. 1984, ப. 340)

அவுணர் வெவ்விய போர்செய்தற்குச் சமைந்த போர் கோலத்தோடு மோகித்து விழும்படி கொல்லிப்பாவை வடிவாய்ச் செய்யோளாகிய திருமகளால் ஆடப்பட்ட பாவையென்று மாடலும்" (உ.வ.சா. பதிப்பு, 1985, ப.192) என்பதாலும் சிலப்பதிகாரத்தில் இதுபற்றிய பாடல்கள் இல்லாததாலும் இதை, பழைய உரைகாரர் காலத்து வழக்காகவே கொள்ள வேண்டும்.

பாலுணர்வைத் தூண்டி, வருத்தும் தெய்வமாகவே கொல்லிப்பாவை குறிப்பிடப்படுகின்றது. கொற்றவையாக, சிறுமிக்கு வேடமிட்டு வழிபாடு செய்த செய்தி சிலப்பதிகாரத்தில் உள்ளதுபோல கொல்லிப்பாவையைப் போல வேடமிட்டு நடனமாடிய வழக்கம் இருந்ததென்பதையே இது காட்டுகிறது.

கொல்லிப்பாவை மலையில் வரையப்பட்ட தாய்த்தெய்வமென்று தெரியவருகிறது. கொல்லிப்பாவை முதலில் தீயோரைக் கொல்லும் தெய்வமாகவே இருந்திக்க வேண்டும். கொல்லிப்பாவையைத் திருமகளாக சிலப்பதிகாரம் கூறுகிறது. திருமகள் ஆடிய பாவைக் கூத்தினை, மோகினிப் பாவை ஆடின கூத்தாகச் சிலப்பதிகாரம் கூறினது பிற்கால வளர்ச்சியாகும். கொல்லிப் பாவையும் காடுகிழாள் போன்ற ஒருவகைத் தாய்த்தெய்வம் என்பதில் ஐயமில்லை." (பி.எல். சாமி, 1980, ப.81)

இத்தெய்வம் கொல்லிமலையில் வாழ்ந்த பழங்குடி மக்களால் வணங்கப்பட்ட சிறுதெய்வமாகவே இருந்திருக்கவேண்டும். வல்வில் ஓரியிடம் போரிட்டு, காரி அதனைக் கைப்பற்றி சேரனுக்கு வழங்கினான் என்பதால், பெருந்தெய்வ வழிபாட்டிலிருந்த சேரர் இத்தெய்வவழிபாட்டையும் மேற்கொண்டுள்ளனர். போர்தெய்வமாக இல்லாமல் காமக்கடவுளாகவே இத்தெய்வம் சுட்டப்படுகின்றது. இது பெருந்தெய்வ வழிபாட்டினுள் ஆற்றல்வாய்ந்த சிறுதெய்வ வழிபாடுகள் இணைக்கப்பட்டதன் ஒரு வெளிப்பாட ஆகும்" (பெ. மாதையன், 2001, 175)

## 2.4 வள்ளி

ஆண் தெய்வங்களோடு பெண் தெய்வங்கள் இணைக்க முற்பட்டபோது முருகனின் காதலியாக, இணையாக வள்ளி சுட்டப்பட்டாள். முருகனின் களவுக் காதலியாக சுட்டப்பட்டு பின் கற்பு மனைவியாக உயர்த்தப்பட்டவள்.. வள்ளி

பற்றியும் ஒரு தொன்மம் கூறப்படுகின்றது. வள்ளிக் கிழங்கைத் தோண்டியபோது அக்குழியில் பிறந்ததால் வள்ளி என்றனர்.

வள்ளிக் கிழங்கு மிகப் பழங்காலத்தில் உணவு சேகரித்தலின்போது அடிப்படை உணவாக இருந்தது. பசிபிக், மலேயா, சுமத்ரா தீவுகளின் மக்களால் வள்ளிக்கிழங்கே பிரதான உணவாக உண்ணப்பட்டது. உணவு உற்பத்தி செய்வதற்கும் வேட்டையாடி உணவு தேடியதற்கும் முன்பாக கிடைத்த காய், கனிகளையும் கிழங்குகளையும் உண்ட மனிதன் வள்ளிக் கிழங்கையே செழிப்புத் தெய்வமாகக் கருதினான். குன்றக் குறவர்களும் வள்ளிக் கிழங்கை செழிப்புத் தெய்வமாகவே கருதினர்.

தொல்காப்பியத்தில் வள்ளி என்ற சொல் வளம் தருவது என்ற பொருளிலேயே வழங்கப்பட்டது. ‘கொற்றவள்ளை’ (தொல்.3:63) என்கிறது. வள்ளைப்பாட்டு என்று சிலப்பதிகாரம் (3:29,26) கூறுகிறது. வள்ளை உரற்பாட்டு (தொல். புறம். 8)

தலைவனுடைய பெயரைப் பாடி உரலில் இடிக்கும்போது பாடுவது வள்ளைப்பாட்டு எனப்படும். இப்பாட்டு அவலிடி, அம்மானை வள்ளை, உலக்கைப்பாட்டு என்றெல்லாம் வழங்கப்படுகின்றது.

மகளிர் உரலில் நெல் முதலியவற்றை இடிக்கும் போது அதனால் உண்டாகும் அயர்வு தோற்றாதிருக்கும் பொருட்டுப் பாடப்படுதல் இயல்பு.' (உ.வே.சா, ப.201)

இப்பாட்டும் இப்பாட்டைப் பாடும் போது செய்யும் செயலும் செழிப்புக் கருத்தைக் குறித்தவையாகும். இதுவும் பெண்களால் பாடப்பட்ட பாட்டு. உலக்கையால் உரலில் இடிக்கும் செயல் செழிப்புக் குறியாகும்”(பி.எல்.சாமி, 1980, ப. 89) மேலும் வள்ளி, வள்ளை ஆகிய சொற்களும் கொடியைக் குறிப்பதாலும் வள்ளியையும் ஒரு தாய்த்தெய்வமாகக் கருதலாம்.

சங்க இலக்கியங்களில் முருகனின் மனைவிகளாக வள்ளியும் தெய்வயானையும் சுட்டப்பட்டாலும் நாட்டார் வழக்காறுகளில் வள்ளியே பெரிதும் போற்றப்படுகிறாள். அறுபடை வீடுகளில் முருகனோடு வீற்றிருக்கும் தலங்களும் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடப்பட்டுள்ளன.

## 2.5 திருமாவுண்ணி

திருமாவுண்ணி குறித்து மு. இராகவையங்கார், பி.எல். சாமி, எஸ். வையாபுரிப்பிள்ளை, ரகுநாதன் போன்றோர் ஆய்ந்துள்ளனர். திருமாவுண்ணி, கதை குறிப்பாகவே நற்றிணையில் (216) கூறப்பட்டுள்ளது. ஆதலால் திருமாவுண்ணி என்பது கண்ணகியைக் குறிக்கிறதா இல்லையா என்று ஆராயவேண்டிய நிலையுள்ளது.

எரிமருள் வேங்கை கடவுள் காக்குங்
குருகார் கழனியின் இதணத்து ஆங்கண்
ஏதிலாளன் கவலை கவற்ற
ஒருமுலை யறுத்த திருமா வுண்ணி (நற். 216)

இப்பாடலுக்கு பொ. வே. சோமசுந்தரனார், ஏதிலாளன் செயலாலே கவலையுற்ற திருமாவுண்ணி என்பாள் ஒரு பரத்தையே ஆதல் வேண்டும்" என்று கூறுவது ஏற்புடையதாக இல்லை. காரணம் சங்க காலச் சமூகத்தில் மருதநிலத்தில் பரத்தையர் ஒழுக்கம் மிக்கிருந்தது என்றாலும் பரத்தையரை எந்தப் பெண்ணும் போற்றவில்லை. ஆடவராலேயே இவ்வொழுக்கம் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது.

கண்ணகி மலைநாடு சென்றாள் என்ற குறிப்பு, 'உண்ண' என்ற சொல் ஒற்றுமையைக் கொண்டு கண்ணகி வரலாறே வளர்ந்து பரிணமித்தது என்று கொள்ளுதல் தவறாகாது என்கிறார் எஸ். வையாபுரிப்பிள்ளை.

'திருமாவுண்ணி கதை' கர்ணபரம்பரைக் கதையாக இருக்கலாம் என்று ரகுநாதன் தெரிவிக்கிறார். பி.எல். சாமியோ, உண்ணிநீலி, திருமாவுண்ணி ஆகிய சொற்களை ஒப்பிட்டு திருமாவுண்ணி ஒரு யஷித் தெய்வமாக்கப்பட்டதையும் ஒற்றை முலைச்சி என்ற தெய்வம் கேரள மக்களிடையே பயபக்தியுடன் வணங்கப்படுவதையும் கொண்டு சங்க கால ஒற்றை முலைச்சியான திருமாவுண்ணியின் கதை வளர்ச்சியே கண்ணகி கதையென்று கருதலாம் என்கிறார்.

திருமாவுண்ணியின் 'முலை அறுத்தல்' தொன்மமே இத்தகுமாற்றத்திற்குக் காரணமாக அமைந்தது. இத்தொன்மம் சீன புத்த சிபி ஜாதகக் கதை ஒன்றில் இடம்பெற்றுள்ளது (பெ.மாதையன், 2001, ப.109). இருப்பினும் தமிழ் மரபில்

'முலை' வளமையின் குறியீடாக நம்பப்பட்டதால் கைம்பெண்களும் கைவிடப்பட்ட பெண்களும் பிற ஆடவரிடமிருந்துத் தம்மைக் காத்துக்கொள்ளும் தற்கொலை முயற்சியாக 'முலை அறுத்தலை' கொண்டிருக்கலாம் என்றே தோன்றுகிறது.

புறநானூற்றுப் பாடலிலும் போர்க்களத்திற்குச் சென்று தன் மகன் எங்ஙனம் இறந்தான் என்பதை அறிய முற்பட்டவள், அவன் புறமுதுகு காட்டியிருந்தால் அவனுக்குப் பால் புகட்டிய தன் முலைகளை அறுத்து எறிந்துவிடுவதாகக் கூறுகிறாள் (புறம். 278). தந்தை வழிச் சமூகம் எழத்தொடங்கிய காலக்கட்டத்தில்தான் இம்மரபு தோன்றியிருக்க வேண்டும். தன் மானத்திற்கு இழுக்கு வரும்போதோ, ஆதரவற்று நின்றவிடத்தோ வாழ்வில் வெறுப்புற்ற நேரத்திலோ இந்நிகழ்வு பெண்களிடையே தோன்யிருக்க வேண்டும்.

திருமாவுண்ணி என்ற பெண்ணும் இதனைச் செய்திருக்கவேண்டும். அதனைப் பின்பற்றியே கண்ணகி செய்திருக்க வேண்டும் என்று கருத இடமுண்டு. எனவே சிறுதெய்வ வழிபாடாக இத்தகு பெண் வழிபடபட்டாள் என்று அறியமுடிகிறது.

## 2.6 கடல்கெழு செல்வி

தாய்த் தெய்வத்தைக் கன்னியாக, குமரியாக கருதுவதும் சங்க காலத்தில் வழக்கிலிருந்தது. இயற்கையைப் பெண்ணாகப் போற்றுகின்ற மரபில் ஒன்று 'கடல்கெழு செல்வி' என்பது கன்னியாகுமரித் துறையில் உள்ள தெய்வத்தையே குறிக்கும். குமரியில் வழிபட்ட செய்திகளைச் சங்க இலக்கியங்கள் தருகின்றன. முதல் நூற்றாண்டில் பெரிப்புளூஸ், குமரித்துறையில் நீராடியது, நோன்பிருந்து வழிபட்டது ஆகியவற்றை தன் நூலில் குறித்துள்ளார்.

கடல்கெழு செல்வி சுரைநின் றாங்கு
நீயே கானம் ஒழியானே
வெறிகொள் பாவையிற் பொலிந்தவெண் அணிதுநந்து
ஆடுமகள் போல பெயர்த்ல்
ஆற்றேன் தெய்வ அயர்கவிவ் வூரே

தலைவியின் நோய்த் தணிய, நிலையான துறையில் இருந்த கடவுளுக்கு வெள்ளாட்டுக் கிடாய் பலியிட்டு வணங்கினர்.

கள்ளும் கண்ணகியும் கையுரையாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவி கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட் குறப்பட வோச்சி (அகம். 156)

பழையன் மகளிர் தழையாடை அணிந்து கடல்கெழு செல்வியைத் தொழுதனர் என்பது அகநானூற்றில் பதிவு செய்யப்பட்டுள்ளது. (அகம். 201).

## 2.7 காமக் கண்ணி

பிற்காலத்தில் 'காமாட்சி' அம்மனாக பெருதெய்வமாக வணங்கப்பட்டு வரும் தாய்த்தெய்வமே காஞ்சிபுரத்தில் 'காமக்கண்ணியாக' இருந்த தெய்வமாகும். சங்க காலத்தில் இருந்த புலவர் ஒருவர் காமக்கண்ணியார் என்று அழைக்கப்பட்டார். வெறிபாடியதால் 'வெறிபாடிய காமக் கண்ணியார்' என்றே வழங்கப்பட்டு உள்ளார். இப்பெயர் அக்காலத்திலிருந்த சிறுதெய்வத்தின் பெயராகவே இருக்க வேண்டுமென்று பி.எல். சாமி கருதுகிறார். காமக் கண்ணி என்ற பெயரே பிற்காலத்தில் காமாட்சி ஆகியது. வேளிருந்த கோட்டம் காமக்கோட்டம்' ஆகியது" (பி.எல். சாமி, 1980, ப.84) மேலும் ஆஸ்டிரிக் குடிமக்களின் மொழியில் உள்ள 'காமமோய்' என்ற சொல்லும் பேய், பூதம், கடவுள், சுடுகாடு என்ற பொருள்களைத் தருவதால் 'காமக்கண்ணி' என்ற தெய்வம் ஆஸ்டிரிக் மக்களிடம் தோன்றியதாக இருக்கலாம் 'ஆய்' என்ற சொல் தாய்த்தெய்வத்தையே குறிப்பதாகும். (ஐயை ஆய்), 'மகமாயி' என்பது பாமர மக்களால் வணங்கப்பட்டும் தாய்த் தெய்வமாக இன்றுமுள்ளது. 'ஆயி' என்ற சொல் அன்னை, ஆத்தாள் போன்ற பொருள்களிலேயே வழங்கப்படுகிறது.

காஞ்சியின் கிராமத் தெய்வமாக இருந்து சைனர்களால் யஷித் தெய்வத்துடன் தொடர்புபடுத்தப்பட்டு, காமயஷி என்று மாற்றம் பெற்று எட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகு காமாட்சியாக ஆக்கப்பட்டாள். இத்தெய்வமும் வளமைத் தெய்வமாக வணங்கப்பட்டதால், சங்கரர் முக்கோண வடிவ யந்திரங்களை இக்கோயிலில் படைத்தார். பழங்குடி மக்களின் தெய்வமாக இருந்த 'காமக்கண்ணி' காமாட்சியாக பின்னர் பெருந்தெய்வமாகப்பட்டாள் என்பது குறிப்பிடத்தக்கது. காஞ்சிபுரத்திலுள்ள உற்சவ மூர்த்திகள் எல்லோரும் காமாட்சியம்மனை வலம் வந்து செல்வது இன்றும் வழக்கத்திலுள்ளது.

## 3. பொதுத்தெய்வம்

தமிழர்களின் தாய்த்தெய்வ வழிபாட்டில், போர்த் தெய்வங்கள், வளமைத் தெய்வங்கள் என்று வழிபட்டதைப் போன்று, பொதுவான தெய்வங்களையும் வழிபட்டுள்ளனர்.

### 3.1 அருந்ததி

'உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்' என்பது சங்ககாலத்திலேயே நிகழ்ந்திருப்பதை சான்றுகள் நிறுவுகின்றன. சிவனின் கருவை ஏற்காத வசிட்ட முனிவனின் மனைவியே அருந்ததி. இக்காரணத்தினாலேயே இவள் கற்புத்திறம் கொண்டவளாக உயர்த்தப்பட்டாள். பலர் தொழும் தெய்வமாக மாற்றம் பெற்றாள். பரிபாடல் இவளை 'சாலினி' என்று கூறுகிறது. (பரி. 5:4345) வடமீன்புரையும் கற்பின் மடமொழி (புற. 122:8) வடமீன் என்றும் வான் உறையும் அணங்காகவும் தொழபட்டாள். சிலம்பும், 'தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்' என்று கண்ணகியை அறிமுகப்படுத்துகிறது. இவள் கற்புத்திறத்தையும் மீனாக தொழப்பட்டதையும் பல பாடல்களில் காணமுடிகின்றது. (பெரும். 30-303) (அகம்.16, ஐங்.443, பதிற்.31, 89, கலி.2) கணவனுக்கு உண்மையாக வாழ வேண்டுமென்ற கருத்தாக்கத்தின் விளைவாக இன்றும் திருமணச் சடங்குகளில் அம்மி மிதித்தலும் அருந்ததி பார்த்தலும் கட்டாயச் சடங்காக நிகழ்கின்றது.

### 3.2 நிலமகள்

திருமாலின் இணையாக நிலமகள் கூறப்படுகிறாள். திருமால் நிலமகளை மணந்த நிகழ்ச்சியைப் பரிபாடல் கூறுகிறது.

> வளர்திரை மண்ணிய கிண்மொறி நாப்பண்
> வை வால் மருப்பின் களிறு மணன் அயர்வு
> புள்ளி நிலனும் புரைபடல் அரிது, என
> உள்ளுநர் உரைப்போர் உரையோடு சிறந்தன்று (பரி. 2:32-35)

நிலமகளின் தோற்றமாக,

> மணிமலைப் பணைத் தோள் மாநில மடந்தை
> அணிமுலைத் துயல்வரூஉம் ஆரம்போல் (சிறுபாண். 1-2)

என்று கூறப்படுகின்றது.

## 3.3 திருமகள் வழிபாடு

பெண் தெய்வங்களை வணங்கும் மரபில் திருமகளும் சங்ககாலத்தில் வணங்கப்பட்டிருக்கிறாள். அவள் மாயவனின் மனைவியாகவும் சித்தரிக்கப்பட்டு இருக்கின்றாள்.

மாயவன் மார்பில் திருப்போர் அவள் சேர
ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்துஎன்
ஆயிழை உற்ற உயிர் (கலி. 65-66)

ஞாயிற்றின் முன் இருள் கெட்டதற்கு மாயவன் மார்பில் திருமகள் உறைதல் உவமையாக கூறப்பட்டுள்ளது. திருமகள் வழிபாடு 'லட்சுமி' வழிபாடாக மாற்றம் பெற்று இன்றும் சிறந்து விளங்குகின்றது. சைவம், வைணவம், சமணம் ஆகிய சமயங்களில் சிறப்பாக வழிபடப்படுகின்றது. விஷ்ணுவின் மனைவியாக, செல்வத்துக்குரிய தெய்வமாக திருமகள் வணங்கப்படுகிறாள்.

வீட்டு நிலைகளிலும் மதில் கதவுகளிலும் திருமகளின் உருவம் செதுக்கி வைப்பது வழக்கத்தில் இருந்துள்ளது.

## தொகுப்புரை

தாய்த் தெய்வ வழிபாடு என்பது உலகமெங்கும் உள்ள தொல்குடிகளிடம் உள்ளது. தாய்வழிச் சமூகத்தின் வெளிப்பாடே இவ்வழிபாடு.

சங்ககாலத்தில் தமிழகத்தில் தாய்வழிச் சமுதாயம் இருந்துள்ளது. குடும்ப நிர்வாகம், பிள்ளை வளர்ப்பு, சுயதொழில் செய்தல், விரும்பிய ஆடவனை மணக்கும் உரிமை போன்றவை தாய்வழிச் சமுதாயத்தை உறுதிபடுத்துகின்றன. பெண்களின் பெயரால் ஆண்கள் அடையாளப்படுத்தப்பட்டனர். 'மூதின் மகளிர்' என்போர் வீரமகளிர். வீரரைப் போற்றிய மகளிர். இவர்களைப் பாட மூதின் முல்லை என்ற துறை இருந்துள்ளது. பெண்கள் போரில் நேரடியாக ஈடுபடவில்லை. ஆனால் அரசனைக் காவல் காக்கும் பணியில் இருந்துள்ளனர். தினைப்புனத்தையும் காவல் செய்துள்ளனர்.

'மூதின்' என்ற சொல்லாட்சி சிந்துவெளியில் காணப்படுகிறது.

சங்ககாலத்திலிருந்த தாய்த்தெய்வ வழிபாடு, போர்த் தெய்வங்களாக, வளமைத் தெய்வங்களாக, பொதுத் தெய்வங்களாக இருந்துள்ளதை அறியமுடிகிறது.

போர்த் தெய்வமாக சங்க இலக்கியங்கள் கொற்றவையை குறிக்கின்றன. கன்னித் தெய்வமாக இருந்து, தாய்த் தெய்வமாக ஏற்றம் பெறுகிறாள் கொற்றவை. சங்கத் தமிழர் வழிபட்ட தலையாய தாய்த் தெய்வம் கொற்றவை என்பது உறுதியாகிறது. குறிஞ்சிக்கும் பாலைக்குமான தெய்வம் இவள்.

இவள், அகத்திணை மாந்தர்களாலும் புறத்திணை மாந்தர்களாலும் வழிபடப்பட்டவள் ஆவாள். இத்தெய்வத்திற்கு. வெறியாட்டு நிகழ்த்தப்பட்டது. குரவையும் துணங்கையும் ஆடப்பட்டன. நவகண்டம் கொடுக்கப்பட்டது. காப்பு கட்டி, விரதம் மேற்கொள்ளப்பட்டது.

முருகனின் தாயாக, முக்கண்ணனின் மனைவியாக இணைக்கப்பட்டாள். கொற்றவைக்கு என்று மந்திரங்கள் இருந்துள்ளன. பேய்கள் இவளுக்குப் படைகளாக உள்ளன. முருகன் பணிமகளிரான சூரரமகளிர் என்போர் மலையுறை தெய்வமாகும். மலைபடுபொருள்களை வைத்து படைக்கப்படுகிறது. விந்திய மலையில் உறையும் தெய்வம் விந்தை என்பவளாகும். பகைவரைக் கொல்லும் என்று நம்பப்படுகிறது. சேர மன்னர்களின் வழிபாட்டு தெய்வமாக விளங்குவது அயிரைத் தெய்வமாகும். முடியுடை வேந்தர் முதல் குடிமக்கள வரை இவளை வழிபட்டு வந்தனர். சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் கானமர் செல்வேயே மதுரை மீனாட்சியாக இன்று வணங்கப்படுகிறாள். பெண்ணைத் தாயாக வணங்கும் மரபும் தாயைத் தெய்வமாக வணங்கும் மரபும் தமிழர்க்கு உரியதாகும்.

உயிர்களைப் பெற்று, பாலூட்டி காப்பதால் பெண்ணை வளமைத் தெய்வமாக போற்றனிர். 'முலைத்தெய்வம்' என்பது பெண்ணின் தாய்மையைக் குறித்த வழிபாடாகும். இதனால் அவள் வயிறும் மார்பும் போற்றப்பட்டன. சங்கு, முத்து, தாமரை போன்றவை வளமையின் குறியீடுகள். ஆதலால் பெண் தெய்வங்க்ளோடு, அவை இணைத்தே செதுக்கப்பட்டன, வணங்கப்பட்டன.

பாவை, கொல்லிப்பாவை, திருமாவுண்ணி, கடல்கெழு செல்வியாகிய குமரித்தெய்வம், காமக்கண்ணி, வள்ளி போன்ற தெய்வங்களையும் வழிபட்டுள்ளனர். மலையுறை தெய்வமாக கொல்லிப்பாவை வணங்கப்பட்டது. இன்றும் 'எட்டுக்கை அம்மன்' என்ற பெயரில் கொல்லிமலையில் வணங்கப்படுகிறது. பாவைத் தெய்வம் பெண்களால் வழிபடப்பட்ட தெய்வம் ஆகும். தை மாதத்தில் பாவை செய்து, தழையாடை உடுத்தி, பாவையைத் துறையில் போட்டனர். இப்பாவை நோன்பே தற்காலத்தில் மார்கழி மாதத்தில் கொண்டாடப்படுகிறது.

முருகனோடு இணைக்கப்பட் வள்ளியும் வளமைத் தெய்வமாக வணங்கப்பட்டிருக்கிறாள். சங்க காலத்திலிருந்த சிறுதெய்வமாகிய காமக்கண்ணிக்கு வெள்ளாட்டுக் கிடாய் பலியிடப்பட்டுள்ளது. சமணர்களின் யட்கனி தெய்வத்தோடு இணைக்கப்பட்டு 'காமாட்சி' என்ற பெருந்தெய்வமாக ஏற்றம் பெற்றிருக்கிறது.

இவைத் தவிர, கற்புடைய மகளிரைப் போற்றி தெய்வமாக்கிக் கொண்டாடியதை 'அருந்ததி' வழிபாடு காட்டுகிறது. அத்துடன் நிலமகளையும் திருமகளையும் சங்ககால மக்கள் வழிபட்டுள்ளனர்.

பழந்தமிழர் வழிபாடுகளில் முக்கிய இடம் பெற்றிருந்தது நடுகல் வழிபாடு. இனக்குழு மக்களின் வீரத்திற்குக் கிடைத்த கௌரவம் நடுகல் வழிபாடு குறித்த செய்திகள் தக்க சான்றுகளோடு விளக்கப்படுகின்றன. நடுகல்லின் தோற்றம் நடுகற்களாவதற்கு உரியோர், நடுகற்களின் அமைப்பு, வழிபட்ட முறைகள், நடுகல்லான அரசர்கள், நடுகல் குறித்து ஆகமங்கள் தரும் செய்திகள், நடுகல்லே பிற்காலத்தெழுந்த கோவில்களுக்கு முன்மாதிரியாக அமைந்த பாங்கு, நடுகல் வழிபாட்டில் பெண்கள், உலக நாடுகளிலும் தென்னிந்தியாவிலும் உள்ள நடுகல் போன்ற செய்திகள் இவ்வியலில் ஆராய்ந்து விளக்கப்படுகின்றன.

பழந்தமிழரின் வழிபாட்டு முறைகள் பலவாக இருந்தன. இயற்கை வழிபாடு, உருவ வழிபாடு, வீர வணக்க வழிபாடு என பல்வேறு வடிவங்களில் தெய்வங்களை வழிபட்டனர். போரில் விழுப்புண்பட்டு இறந்த வீரர்களையும் வன விலங்குகளோடு வேட்டையாடி உயிர்நீத்த வீரர்களையும் தெய்வமாகப் போற்றினர்.

போர்க்களத்திலே பகைவர் முன் நின்று அஞ்சாது போரிட்டு வீழ்ந்த வீரர்களைக் காட்டிலும் சிறந்த தெய்வம் வேறெதுமில்லை என்பதே சங்கத் தமிழரின் இறைக் கோட்பாடாக இருந்தது. களிறோடு பொருது வீழ்ந்த காளையரைக் கடவுளாகப் பரவினர்.

ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிரேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லுக்குத்துப் பரவுங் கடவுளு மிலவே (புறம்.335)

இன்றும் நோயுற்று இறந்தவர் விபத்தில் இறந்தவர், தற்கொலை செய்துகொண்டவர், இளம்பருவத்தில் இறந்தவர் என்று எவ்வகையில் இறந்தவர்ககும் அவரது உற்றார், உறவினர் ஈமச் சடங்கு செய்வதைக் காண்கிறோம்.

இராணுவத்தில் பணிபுரிந்து நாட்டுக்காக உயிர்விட்ட வீரனுக்கு இராணுவ மரியாதையோடு ஈமச்சடங்கு செய்யப்படுகிறது. இது வீரவணக்கத்தின் எச்சமே எனலாம்.

"இறந்தவர்களுக்குச் செய்யும் இறுதிச்சடங்குகள் வீர வணக்கந் தோன்றிய விளை நிலமாகும். தென்னகத்திலே இரும்புக் காலத்திற்கு (Iron Age) முன்பின்னாகக் காணப்படும் 'பெருங்கல் வளைவு' புதைகுழிகள் இறந்தவரை அடக்கஞ் செய்வதிலே அச்சமுதாயத்தினர் எத்துணை சிரத்தைக் காட்டினர் என்பதனைக் குறிப்பன" (க.கைலாசபதி, 1999. ப.35)

புதைகுழிகளிலுள்ள தாழிகளிலும் கல்லறைகளிலும் மனித எலும்புத் துண்டுகளும் இரும்பாயுதங்களும் மட்பாண்டங்களும் கிடைத்துள்ளன என்று அகழ்வாராய்ச்சிகள் கூறுகின்றன.

இன்றும் இறந்தவர்களை எரித்த சாம்பலை, மண்பானைகளில் சேர்த்து வைக்கும் வழக்கமும் அந்த மண்பானைகளைக் கடலில் கலக்கும் வழக்கமும் இருப்பதை அறியலாம்.

இறந்தவரின் உடலை கழுகுகளும் ஆந்தைகளும் காகங்களும் உண்டு சிதைக்காமல் பாதுகாக்கவே தாழியில் இட்டு அடக்கம் செய்யப்பட்டுள்ளது. தாழியுள் பிணத்தை இட்டு அத்தாழியினைக் கவிழ்த்துப் புதைத்துள்ளனர் என்பதையும் "கவிசெந்தாழிக் குவிபுறத்து இருந்த" (238) என புறநானூறும், "மாஇருந்தாழி கவிப்ப" என நற்றிணையும் (27) விளக்குகின்றது.

இறந்தவர்களைப் புதைப்பதற்கான இத்தகு தாழிகளைச் செய்வோர் 'கலஞ்செய்கோ' (புறம்.228) அல்லது வேள்கோ எனப்பட்டனர். புறநானூறு இதனைச் சுட்டுகிறது.

தாழியுள் தனியொருவர் மட்டுமன்றி (இருவராக) அல்லது குழுவாக புதைக்கும் வழக்கமும் இருந்திருக்க வேண்டும். இறந்துபட்ட தலைவனுக்குத் தாழிசெய்யும் வேட்கோவைப் பார்த்து தனக்கும் அதில் இடமிருக்கும்படியாக பெரிதாகச் செய்யுமாறு கூறுகிறாள் தலைவி.

**வியன்மலர் அகன் பொழில் ஈமத்தாழி**
**அகலிது ஆக வனைமோ**
**நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே** **(புறம்.256)**

சங்ககால மக்களிடையே போரில் இறந்தவர்களைத் தாழியிலிட்டுப் புதைக்கும் வழக்கம் இருந்தது போலவே எரிக்கின்ற வழக்கமும் இருந்துள்ளது.

அதியமான் நெடுமான் அஞ்சியின் உடல், இறந்தபின் எரியூட்டப்பட்டதைப் புறநானூறு கூறுகிறது.

> கரிபுற விறகின் ஈம ஒள் அழல்
> குறுகினும் குறுகுக குறுகாது சென்று
> விசும்பஉற நீளினும் நீள்க (புறம்.231)

நம்பி நெடுஞ்செழியன் பற்றிய பாடலும் இதனை,

> இடுக ஒன்றோ சுடுக ஒன்றோ (புறம்.239)

என்று பதிவு செய்துள்ளது.

உயிர்களைப் பற்றியும் பழங்குடி மக்கள் கொண்டிருந்த நம்பிக்கைகள் இன்றும் உள்ளன. ஒருவன் இறந்துவிட்டால் அத்துடன் அவன் வாழ்வு முடிந்துவிட்டதாக எண்ணாமல் அவன் வாழ்வு மீண்டும் மலர்வதாக மக்கள் நம்புகின்றனர். ஒரு குழந்தை பிறந்தால், அது புதிய உயிராக கருதப்படுவதில்லை. இறந்தவரே மீண்டும் பிறந்துள்ளார் என்றே நம்பப்படுகின்றது. இந்த நம்பிக்கை உலகெங்கிலுமுள்ள தொல் குடிகளிடையே இன்றும் உள்ளது.

இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே இறந்துபட்ட தம் முன்னோரின் நினைவாக சின்னங்களை புராதன மனிதன் இறப்பையும் பிறப்பையும் தொடர்புடையனவாகவே நோக்கினான். ஒன்று மற்றொன்றாகவும் கருதப்பட்டது. இத்தகைய நம்பிக்கைக்கும் உயிர், கண்மம், மறுபிறவி ஆகியன குறிக்கும் நமது பிற்காலத் தத்துவத்திற்கும் ஒரு பெரும் வேறுபாடுண்டு. உடலுக்கும் உயிருக்கும் வேறுபாடு கூறினர் சிலர். உடல் அந்நியத்தியமானது என்றும் ஆன்மா அல்லது உயிர் நிரந்தரமானது என்றும் கூறினர். எனவே அழியும் உடலை பற்றிக் கவலைப் படுவதில்லை. இதுவே முதல்வாதத்தின் அடிப்படையாகும். ஆனால் புராதன மனிதனோ அந்தளவிற்கு பொருள் முதல்வாதி பிரக்ஞை பூர்வமாக அல்ல. நடைமுறை அனுபவத்தின் அடிப்படையில் அவன் உடம்பு வேறு, உயிர் வேறு என்று பிரித்தறியும் நிலையிலில்லை. எனவே உடலையே உயிராக மதித்தான் அதன் காரணமாகவே தாழி, கல்லறை முதலியவற்றில் ஆயுதங்கள், உணவுப்பொருட்கள், கலங்கள் ஆகியவற்றை வைத்தான். (க. கைலாசபதி. 1999)

"உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்ற சித்தர்களின் கொள்கை இதனை விளக்குகிறது.

இறந்த முன்னோர்களை வழிபட்டால் தம் குலம் தழைக்கும். இல்லையென்றால் தம் குடிக்குக் கேடு வருமென்று இன்றும் நம்புகின்றனர். அதனால் முன்னோரைப் போற்றினர். சிறிது பிற்பட்ட காலத்தில், முன்னோர் வழிபாட்டோடு, போரிலே பட்ட வீரரை வழிபட வேண்டுமென்ற எண்ணம் மேலோங்கியது. அதன் வெளிப்பாடாகத்தான் நடுகல் வழிபாடு தோன்றியது.

## 1. தொல்காப்பியர் கூறும் நடுகல் மரபுகள்

பழந்தமிழ் இலக்கணமான தொல்காப்பியம் நடுகல் வைப்பதில் கடைபிடிக்கப்பட்ட சில மரபுகளைக் கூறுகின்றது. அம்முறையோடு ஒப்புநோக்கும் போது நடுகல்லை நடுவதற்காக மேற்கொள்ளப்பட்ட சில மரபுகள், நடுகற்களில் அமைக்கப்பட்டதைச் சங்க இலக்கியங்களிலும் சங்கம் மருவிய கால இலக்கியங்களிலும் காண முடிகிறது. உரையாசிரியர்களும் தம் உரைகளில் புலப்படுத்துகின்றனர்.

### உரையாசிரியர் கருத்து

காட்சி கால்கோள் நீர்படை நடுகல்
சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று
இருமூன்று மரபிற் கல்லொடு புணரச்
சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே (தொல்.பொருள்.63)

காட்சி என்பது இருவகைப்படும்

### அ. காட்சி

கல்கெழு சுரத்திற் சென்று கற்காண்டல்

தாழி கவிப்பத் தவஞ்செய்வர் மண்ணாக
வாழிய நோற்றனை மால்வரை - யாழிசூழ்
மண்டல மாற்றா மறப்புகழோன் சீர்பொறிப்பக்
கண்டென னின்மாட்டோர் கல்

கொணர்ந்து, செய்வன செய்து நாட்டி, பின்னர் கற்காண்டல்.

ஊர் நனி யிறந்த பார்முதிர் பறந்தலை
யோங்கு நிலை வேங்கை

**ஆ. கால்கோள்**

இதுவும் இரண்டு வகைப்படும்

கல்லுறுத்து இயற்றுதற்குக் கால்கோடல்

வரையறை சூழ்கிடக்கை மாத்தாட் பெருங்கல்
வரையறை செய்யிய வம்மோ வரையறை
வாராப் பெரும்புகழ் வல்வேல் விடலைக்கு
மோராற்றாற் செய்வ துடைத்து

இது 'வரையறை செய்யிய வம்மோ' என ஒருவனைத் தெய்வமாக நிறுத்துவதற்கு இடங்கொள்ளப்பட்டமை யானும் அவ்விடத்துக் கால் கோடலானுங் கால்கோள்

காப்பு நூல் யாத்துக் கடிகமழ் நீராட்டிப்
பூப்பலி பெய்து புகை கொளீஇ மீப்படர்ந்த
காளை நடுகற் சிறப்பயர்ந்து கால்கொண்மீ
னானை வரக்கடவ நாள்

இது நட்டு கால் கொண்டது.

**இ. நீர்ப்படை**

கண்டு கால்கொண்ட கல்லினை நீர்ப்படுத்துற் தூய்மைச் செய்தலும்

வாளமர் வீழ்ந்த மறவோன்க லீர்த் தொழுக்கிக்
கேளி ரடையக் கிளர்ந் தெழுந்து நீள் விசும்பிற்
கார்படுத்த வல்லேறு போலக் கழலோன்
னீர்ப்படுத்தார் கண்ணீரி னின்று

இது நீர்ப்படை நாட்டி நீராட்டியது.

பல்லா பெயர்த்து நல்வழிப் படர்ந்தோன்
கல்சொரிந் தாட்டிய நீரே தொல்லை
வான் வழங்கு நீரினுந் தூய்தே யதனாற்
கண்ணீர ருவியுங் கழீஇத்
தெண்ணீ ராடுமின் தீர்த்தமா மதுவே

**ஈ. நடுகல்**

*கல்லினை நடுதல்*

சீர்த்த துகளிற்றாய்த் தெய்வச் சிறப்பெய்த
நீர்ப்படுத் தற்கு நிலைகுறித்துப் போர்க்களத்து
மன்னட்ட வென்றி மறவோன் பெயர்பொறித்துக்
கன்னட்டார் கல்சூழ் கடத்து

*கல்லில் மறவனை நாட்டுவது*

கோள்வாய்த்த சீயம்போற் கொற்றவர்தம் மாவெறிந்து
வாள்வாய்த்து வீழ்ந்த மறவேலாய் நாள்வாய்த்
திடைகொள லின்றி யெழுத்துடைக் கல்லாய்
மாமைகொளல் வேண்டு மகிழ்ந்து

**உ. பெரும்படை**

*வீரனுக்கான சிறப்பைச் செய்தலும், அவன் புகழைக் கல்லில் பொறித்து, தெய்வமாக்கி வழிபடலும் பெரும்படை என்பதாகும்.*

*அவன் செய்த புகழைத் தரும்படி பொறித்தலும், அக்கல்லைத் தெய்வமாக்கி அதற்குப் பெருஞ்சிறப்புக்களைப் படைத்தலுமென இரண்டு வகைப்படும்.*

கைவினை மாக்கள் கலுழக்க ணோக்கிழந்து
செய்வினை வாய்ப்பவே செய்தமைந்தார் - மொய்போர்
மறவர் பிணம்பிறக்கி வாள்வாய்த்து வீழ்ந்தோன்
பிறபெயர்சூழ் கன்மேற் பெரிது

*இது பெயர் முதலியன பொறித்தது.*

அன்றுகொ ளாபெயர்த் தாரமரில் வீழ்ந்தோன்கற்
கின்றுகொள் பல்லா னினமெல்லாங் - குற்றாமற்
செய்ம்மினோ சீர்ப்பச் சிறப்பாகத் தீபங்கள்
வைம்மினோ பீடம் வகுத்து

இது அதற்குச் சிறப்பு படைத்தது.

**ஊ. வாழ்த்தல்**

கால்கொள்ளுங்கால் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்து வாழ்த்தலும் பின்னர் நடப்பட்டகல்லினைத் தெய்வமாக்கி வாழ்த்தலுமென இரண்டு வகைத்தாம்.

ஆவாழ் குழக்கன்றுய் வித்துக் களத்தவிந்த
நீ வாழ வாழிய நின்னடுக - லோவாத
விற்கோட்ட நீண்டதோள் வேந்தன் புலிபொறித்த
டெற் கோட்டியமே போன்று

இது கல் வாழ்த்து என்று உரையாசிரியர் நச்சினார்க்கினியர் காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல், பெரும்படை, வாழ்த்தல் என்ற ஆறினையும் இரண்டிரண்டாகப் பகுத்துக் காட்டுகின்றார்.

## 2. சங்க இலக்கியத்தில் நடுகற்கள்

தம் வீரத்தைப் புறத்தார்க்குப் புலப்படுத்தி மடிந்த வீரர்களுக்கு அவர்கள் உயிர்விட்ட இடத்திலோ ஊரிலோ நடப்பட்ட கற்களே நடுகற்கள் எனப்பட்டன.

சங்க இலக்கியங்களில் நடுகற்களைப் பற்றியும் அவற்றுக்கான சடங்குகள் மற்றும் வழிபாட்டு முறைகளைப் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன. மனிதனை, வீரனைத் தெய்வமாக வழிபடுகின்ற முறை இனக்குழு மக்களின் நம்பிக்கையிலேயே தோன்றியிருக்க வேண்டும். தங்களுக்காகப் பிறரோடு போரிட்டு நீத்த (அ) தங்களுக்காக விலங்குகளோடு போரிட்டு நீத்த வீரர்களின் வீரத்தையும் தியாகத்தையும் போற்றும் வண்ணமும் மற்றவர்க்கு அதை வழிகாட்டலாகக் காட்டவும் இனக்குழு மக்கள் நடுகல் வழிபாட்டைக் கடைபிடித்துள்ளனர்.

இறந்தவர்களின் ஆன்மா அழிவதில்லை என்ற நம்பிக்கை அடிப்படையில் பெருங்கற்காலத்தில் இறந்தவர்க்கு நினைவுச் சின்னம் எடுத்தனர். இத்தகைய வழக்கம் உலக நாடுகளில் பரவலாக காணப்படுகிறது. ஒரு கூட்டத்தைச் சார்ந்தவர் உயிர் நீத்தால் அவருடைய ஆன்மா அந்த கூட்டத்தையே சுற்றி நிற்கும் என்றும் கூட்டத்தின் வேட்டைத் தொழிலுக்கும் இன விருத்திக்கும் உதவும் என்றும் நம்பினர். இதனால் அதை வழிபட்டனர். எனவே இறந்தவர்களை வாழ்விடங்களின் அருகில் நினைவுச் சின்னங்களாக அடக்கம் செய்தனர். தகடூர் பகுதியில் பெருங்கற்காலம் முதல் நினைவுச் சின்னங்கள் அமைக்கும் வழக்கம் இருந்தது." (தி. சுப்பிரமணியன், 2009, ப.139)

**மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நீறீஇத் தாமாய்ந் தனரே** **(புறம்-165)**

நிலையில்லாத இந்த உலகில் தம்புகழை நிலை நிறுத்த விரும்பிய வீரர்கள் புகழ் உடம்பிற்காக, பூத உடம்பையும் உயிரையும் போரில் இழக்க துணிந்தனர். அவ்வாறே அவர்கள் இறந்தபின் அவர்களின் புகழை நிலை நிறுத்துவதற்காக அவர்களுக்கு நினைவிடங்கள் எழுப்பப்பட்டன.

வீரர்களோடும் அவர்கள் காட்டும் வீரத்தோடும் 'கல்' நெருங்கிய தொடர்புடையதாக இருந்து வருகின்றது. வீரனுடைய நாட்டிற்கும் தோளுக்கும் மனதுக்கும் கல்லே உவமையாகக் கூறப்படுகிறது. சங்க இலக்கிய மரபும் இதுவே.

தலைவனுடைய நாட்டை,

**நின் கல்லுடை நாடு** **(ஐங். 233:3-4)**

**பெருங்கல் நாடன்** **(குறுந். 288)**

**குன்றநாடன்** **(ஐங். 267)**

பகைவர் படையைத் தடுத்து நிறுத்தி, மேலே செல்ல விடாது போரிடும் மறவனுக்குக் கல்லணை உவமையாக கூறப்பட்டுள்ளது. (தொல். பொருள். 8: 78) வீரமுடைய தலைவன் தோளுக்குக் கல் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. (பதிற். 70:4)

போர் வெற்றியைக் கல்மலையில் தான் தேடிப் பொறித்தனர் என்பதையும் புறநானூறு கூறுகிறது. உறுதி மற்றும் அழியாத்தன்மை கருதி 'கல்லை' சங்க இலக்கியம் உவமை காட்டுகிறது.

தமிழகத்திலுள்ள முன்னோர் வழிபாடு, பூசைமுறை, சாச்சடங்கு, பிணங்களைப் புதைக்கும் விதம், நினைவுச் சின்னம் எழுப்பும் ஆர்வம் ஆகியவற்றுக்கெல்லாம் அழியாச் சான்றாக நின்று இலங்குவது நடுகல்"(கேசவராஜ் 1978, ப.8)

'நடுகல்' என்ற சொல்லாட்சி பல்வேறு இடங்களில் பயின்றுவந்துள்ளது.

| | |
|---|---|
| நடுகல் | (அகம், புறம்,221, 263, ஐங்.352, பட்.79) |
| நட்டகல் | (புறம் 260 பழைய வுரை) |
| நாட்டிய கல் | (தொல். புறத்.5 இளம்பூரணர்) |
| நாட்டப்படு கல் | (தொல். புறத்.5 நச்சி) |
| நடுகல் | (சிலம்பு பதிகம் 85 அடியார்க்கு நல்லார்) |

என்றெல்லாம் உரையாசிரியர்கள் விரித்துரைக்கின்றனர். நடுகற்கள் பறந்தலை, பாலைநிலம், ஊர்ப்புறம், ஆற்றங்கரை போன்ற இடங்களில் காணப்படுகின்றன.

பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி (புறம்.264)

ஊர்நனி இறந்த பார்முதிர் பறந்தலை (புறம்.265)

மக்கள் நடமாட்டம் அதிகமுள்ள இடங்களில் இந்நடுகற்கள் நிறுவப்பட்டுள்ளன. ஒரே இடத்தில் பல நடுகற்கள் இருந்தமைக்கும் ஐயூர் முடவனார் பாடல் சான்று பகர்கின்றது. அண்மையில் தகடூர் பகுதியில் மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் ஆய்வுகள் ஒரே இடத்தில் பல நடுகற்கள் காணப்படுவதை உறுதிசெய்துள்ளன. சான்றாக ஓசூர் அருகிலுள்ள நாகொண்ட பாளையம்" என்ற இடத்தில் 90 நடுகற்கள் கிடைத்துள்ளன. இதை 'தொட்டவர் குடி' என்று இப்பகுதி மக்கள் கூறுகின்றனர். 'தொட்டவர்குடி' என்றால் இறந்தவர்களின் கோயில் என்று கன்னடத்தில் பொருள் உள்ளது" என்று தி. சுப்பிரமணியன் (தமிழகத் தொல்லியலும் வரலாறும் பக்.140) கூறுகின்றார்.

இன்றும் இராமநாதபுரம் மாவட்டத்தில் மன்னர்களையும் அவர்களின் வாரிசுகளையும் புதைக்கப் பயன்படுத்தப்பட்ட இடம் 'ராஜாமாலையீடு' என்றழைக்கப்படுகின்றது. இந்த மாலையீட்டில்தான் இராமநாதபுரம் அரண்மனையில் பிறந்து வளர்ந்த அனைவரும் துயில் கொள்கின்றனர். இவ்விடம் இராமநாதபுரம் அரண்மனைக்குப் பின்புறம் உள்ள முகவை யூரணியின் மேல் கரையிலுள்ளது. இன்றுவரை அரண்மனை வாரிசுகள் யாரேனும் இறந்தால் அங்குதான் புதைக்கப்படுகின்றனர். வேறு யாருக்கும் அனுமதியில்லை. இவை செங்கற்களால் சிறு கோவில் அமைப்புடன் விளங்கின்றன. (தினகரன், வெள்ளிமலர், 7.5.2010)

வீரயுக காலமாகிய சங்க காலத்தில் காதலும் வீரமும் கண்ணெனப் போற்றப்பட்டன. காதலை அகமென்றும் வீரத்தைப் புறமென்றும் தமிழர் போற்றினர்.

வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்
மகளிர்க்கு அவ்ஆடவர் உயிர் (குறுந்.145)

என்பதால் ஆண்களுக்கு அவர்கள் செய்த தொழில் உயிராக மதிக்கப்பட்டது. வீரம் செறிந்த போர்த்தொழிலே முதன்மையானதாக கருதப்பட்டது. பகைவரோடு போரிடல், விலங்குகளை வேட்டை ஆடுதல், கால்நடை வளர்ப்பு ஆகிய தொழில்கள் முக்கியத்துவம் பெற்றன.

ஆநிரைகள் சிறந்த செல்வமாக கருதப்பட்டன. இன்றும் பசுக்களை 'இலக்குமி' என்றும் வழங்கும் மரபும் வணங்கும் மரபும் இருப்பதை நாம் உணரலாம்.

மாடு என்ற சொல்க்கு 'செல்வம்'. ஆதலால் பகைவர் ஆநிரைகளைக் கவர்வதே (ஆகோள்) போருக்குத் தொடக்கமாக அமைந்தது. இதனையே தொல்காப்பியர் புறத்திணைகளுள் முதல் திணையாக 'வெட்சி' என்று குறிப்பிடுகின்றார். ஆநிரைகளை இழந்தோர் வெட்சி மறவர்மேல் போர்த் தொடுத்துத் தம் ஆநிரைகளை மீண்டும் கவர்ந்து வருதல் கரந்தை (பூசல் மாற்று) எனப்பட்டது. இவ்வாறு பகைவரின் நிரைகளைக் கவர்வது குற்றமாக கருதப்படவில்லை. இவ்வெட்சிப் போரை, சிற்றரசர்களும், வீரமறவர்களும் அரசர்களும் செய்துள்ளனர். சான்றாக மலையமான் திருமுடிக்காரி

அயலூரிலுள்ள ஆநிரைகளை இரவில் குதிரைமேல் சென்று கவர்ந்து வருவது வழக்கமாக இருந்தது என்பதை நற்றிணை 291 ஆம் பாடல் கூறுகின்றது.

அங்ஙனம் ஆநிரைகளைக் கவரும் போது, அவற்றினைச் செம்மையாக வளர்ப்பதற்குத் தேவையான புல்வெளி நிறைந்த சமவெளிகளில் அடைத்தனர். வளமான நீர்நிலைகளை உடைய நாடுகளைக் கைப்பற்றும் பொருட்டும் போர் நிகழ்ந்துள்ளது.

சங்க காலத்தில் ஆநிரைகளைக் கவர்ந்து வந்தபின் உயிரிழந்தவர்கள், ஆநிரைகளைக் கவரச்செல்லும்போது உயிரிழந்தவர்கள், ஆநிரைகளை மீட்கும்போது உயிரிழந்தவர்கள், காட்டிலும் மலையிலும் விலங்குகளோடு வேட்டையாடும்போது உயிரிழந்தவர்கள் ஏறுதழுவுதலில் உயிரிழந்தவர்கள் போன்றோர் நடுகற்களாகியுள்ளனர்.

புல்தரைகளுக்காகவும் அங்குள்ள கால்நடைகளுக்காகவும் உயிர்நீத்த வீரர்களுக்கு நடுகல் எடுக்கும் வழக்கம் அதியர், அதியமான் நன்னன் ஆகிய மரபினர்களுக்கிடையே மட்டுமே இருந்துள்ளது. மற்ற மரபினர்களிடையே இம்மரபு இருந்ததாகத் தெரியவில்லை.

தக்கணத்தில் பிக்கிலிக்காமல், உட்னூர், சங்கனக்கல் ஆகிய ஊர்களில் 4000 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்த மாட்டுப் பட்டிகளின் எச்சங்கள் கண்டிறியப்பட்டுள்ளன என்பதோடு பட்டி அமைக்கப்பட்டுள்ள விதம் கால்நடைகளின் குளம்புகள் பதிவு போன்றவையும் கண்டறியப்பட்டுள்ளதால் கால்நடை வளர்ப்பின் தொன்மையை உணரமுடிகிறது.

## 3. நடுகற்களான அரசர்கள்

பண்டைத் தமிழ் வேந்தர்கள் இறந்தபின் அவர்கள் நடுகற்களான செய்திகளைப் புறநானூறு கூறுகின்றது. நட்பிற்கும் வீரத்திற்கும் கொடைக்கும் பெயர்பெற்ற அரசர்களான கோப்பெருஞ்சோழன், கரிகாலன், அதியமான் போன்றோர்க்கு நடுகல் வைக்கப்பட்ட செய்தியினைப் புறநானூறு வழி அறிய முடிகிறது.

கோப்பெருஞ்சொழன் வடக்கிருந்து உயிர்விட்டான் என்ற செய்தியும் அவனோடு பிசிராந்தையார், பொத்தியார் போன்ற புலவர்களும் வடக்கிருந்து உயிர்விட்டனர் என்ற செய்தியும் நமக்குக் கிடைக்கின்றன. (புறம்.115119, 121123)

பலர்க்கு நிழலாகி உலகம் மீக்கூறித்
தலைப்போர் கன்மையிற் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுகல் ஆகிய கண்ணும் (புறம்.223)

என்ற பாடல் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர்விட்ட செய்தியைக் கூறுகின்றது.

இவருள் கோப்பெருஞ் சோழனுக்கு நடுகல் வைக்கப்பட்ட செய்தியைப் புறநானூறு (221) கூறுகிறது.

நனந்தலை உலகம் அரந்தை தூங்கக்
கெடுவில் நல்லிசை சூடி
நடுகல் ஆயினை புரவலன் எனவே

என்பதால் இதனை அறியலாம்.

விருந்தோம்பலிலும் வீரத்திலும் சிறந்து விளங்கியவன் அதியமான். அவன் இறந்தபின் ஈமத்தீயிலிட்டு எரித்தனர் (புறம் 231). அதன்பின் அவனுக்கு நடுகல் வைத்தனர். கள் வைத்துப் படைத்தனர். இதனை

நடுகல் பீலி பூட்டி நார்அரி
சிறுகலத்து உருப்பவும் கொள்வன் கொல்லோ (புறம்.232)

என்ற பாடல் உணர்த்துகிறது.

இறந்தவர்களுக்குப் பிடித்த பொருள்கள் வைத்துப் படைத்தலும், பிடித்த உணவுப் பொருள்களைச் செய்துவைத்துப் படையலிடும் வழக்கமும் இருந்துள்ளது.

வேள் எவ்வி இறந்தபின் அவனுக்கும் பிண்டமிட்டு வழிபட்ட செய்தியையும் புறநானூறு கூறுகிறது.

பிடி அன்ன சிறுவழி மெழுகித்
தன்அமர் காதலி புன்மேல் வைத்த
இச்சிறு பிண்டம் யாங்குஉண் டனன்கொல் (புறம்.234)

பண்டைய நடுகற்கள் மன்னர்களுக்கோ அல்லது உயர்ந்தோர்களுக்கோ மட்டும் எடுக்கப்படவில்லை. அவை "மறவர், எயினர், மழவர், வேடர், கோலவர், வடுகர், கள்வர், பறையர், பாணர் குடியைச் சேர்ந்த சேவகன், இனமக்கள் தொறுவாளன், இளையோர், ஆள், கிளமகன், அடியவர், மன்றாடி, மனைமகன் ஆகியோருக்கே நாட்டப்பட்டுள்ளன." (பதி. செ. ஜீன்லாறன்ஸ், கு. பகவதி, செ. இராசு, 2007, ப. 53)

## 3.1 இளந்தாரி நடுகல்

நடுகல் வழிபாட்டில் இளந்தாரி நடுகல் என்பதும் குறிப்பிடத்தக்கது. இளந்தாரியர் என்னும் கடவுளுக்கு இக்கோயிலில் வழிபாடு செய்யப்படுகின்றது. இக்கோயில் ஈழநாட்டின் வடதிசையில் 'இணுவில்' என்ற ஊரிலுள்ளது. பேராயிரவன் என்னும் தலைவனுக்குப் பிறகு இணுவைப் பேரூர் தலைவர்களாக விளங்கியவர்கள் காலிங்கராயன், கைலாயநாதன் என்போராவர். காலிங்கராயன் என்ற பெயர் சோழர்காலக் கல்வெட்டிலும், மூவருலாவிலும் பொய்யாமொழிப்புலவர் வரலாற்றிலேயும் கொங்கு நாட்டுக் கால்வாய் ஒன்றிலும் உள்ளது. சோழப் பேரரசர் கலிங்க நாட்டை வெற்றி பெற இவன் உதவியதால் இவனுக்கு 'இளந்தாரி' என்னும் விருதுப் பெயர் வழங்கப்பட்டிருக்கலாம் என்றும், சோழப்பேரரசின் படைத்தலைவர்களில் இவன் ஒருவன் என்றும் இவன் தொண்டை நாட்டைச் சேர்ந்தவன் என்றும் வரலாற்றறிஞர் சதாசிவபண்டாரத்தார் கூறியுள்ளார்.

காலிங்கராயனின் மகனான கைலாய நாதனுக்கு 'இளந்தாரி' என்ற பெயர் இயல்பாக அமைந்த பெயராகும் இவனுடைய பேராற்றல் கண்டு இவன் இறந்தபின் அவன் அரண்மனையில் மக்கள் ஆண்டுதோறும் விழா எடுத்துக் கொண்டாடுகின்றனர். உணவு உண்டுவிட்டு புளியமரத்தில் ஏறி மறைந்ததாகக் கூறுகின்றனர். அப்புளியமரத்தின் கீழ் அவனுக்குச் சிறு மண்டபம் கட்டி ஆண்டுவிழா நடைப்பெற்றது. நடுகல் வழிபாடு இங்கு கோயில் வழிபாடாக உருப்பெற்றது.

### 3.2 முதலிமார் நடுகல்

கைலாய மன்னனுக்கு நடுகல் எடுத்ததைப் போன்றே அவனுடைய அமைச்சர்களுக்கும் நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. முதலிமார் வழிபாடு முடிந்த பிறகே கைலாய மன்னனுக்கு வழிபாடு செய்யப்படுகிறது.

முதலிகள் கோயில்களில் பல இடங்களில் உள்ளன என்றும் இவ்வணக்கம் வீர வணக்கத்தைச் சேர்ந்ததெனவும் பூவரசு மரங்களுக்கிடையில் கல்லுக்குள் வைத்து நீரும் பூவும் வில்வமும் இட்டு வணங்குவர் எனவும் கரவெட்டி முதலிய இடங்களில் இவ்வழிபாடு இன்றும் நடைபெறுகிறது எனவும் பேராசிரியர் க. கணபதி பிள்ளை ஈழத்து வாழ்வும் வளமும் என்ற நூலில் (ப.53) குறிப்பிட்டுள்ளார். கைலாய மன்னனுக்குக் காவலாக இருந்த அண்ணமார்களுக்கும் நடுகல் வழிபாடு உண்டு.

### 3.3 அரசிகளுக்கு நடுகல்

யாழ்ப்பாண வன்னி நாடு ஒல்லாந்தரின் படையெடுப்பில் வன்னியரசர் இறந்த பின் அவரது மனைவியர் ஆட்சி நடத்தினர் ஒல்லாந்தரோடு ஏற்பட்ட போரில் நாச்சியார் படை, தோற்க அந்நியர்க்கு அடிமையாக வாழ விரும்பாது, நாச்சியார் தம் உயிரைத் தாமே மாய்த்துக் கொண்டனர். இவர்களின் வீர உணர்வை போற்றும் வகையில் இவர்களுக்கு நடுகல் நட்டு வழிபட்டனர். யாழ்ப்பாண பகுதியிலும் வன்னியர் பகுதியிலும் இவ்வழிபாடு நடைபெறுகிறது. யாழ்ப்பாணத்தில் புகழ்ப்பெற்ற நாச்சியார் கோயில் உள்ளது. போரில் பங்குபெற்ற (அ) போரில் ஈடுபட்ட பெண்களுக்கும் இலங்கையில் நடுகல் வைக்கப்பட்டு வணங்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

தமிழகத்தில் பெண்கள் போர்த்தொழிலில் ஈடுபடாததால் அவர்களுக்கென்று தனியே நடுகற்கள் வைக்கப்படவில்லை.

பிற்காலத்திலேதான் அவ்வழக்கம் தமிழகத்தில் எழுந்துள்ளது. நடுகற்கள் தமிழகம் முழுவதும் பரவலாக கிடைத்தாலும் ஒவ்வொரு வட்டாரத்திலும் ஒவ்வொரு பெயரில் வழங்கப்படுவதைக் காணப்படுகிறது. ஒரே பெயரில் வழங்கப்படவில்லை.

## 4. நடுகல் மரபுநிலைகள்

நடுகல்லாய் ஆனவர்கள் தம் புகழோடு உருவமும் அழியாது வாழ்ந்தனர். நாட்டுக்காய், அரசனுக்காய், தம் வீரத்திற்காய், புகழுக்காய் உயிர்துறந்து நடுகல் ஆனவர்கள் தெய்வமாக மதிக்கப்பட்டனர். வணங்கப்பட்டனர்.

நடுகல்லை நடுவதில் சில மரபுநிலைகள் காட்சி, கால்கோள், நீர்ப்படை, பெரும்படை, நடுகல், வாழ்த்தல் போன்றவை பின்பற்றப்பட்டது போலவே நடுகற்களை வைத்து வணங்குவதிலும் சில மரபுநிலைகள் கடைப்பிடிக்கப்பட்டுள்ளன.

### 4.1 பீடும் பெயரும் எழுதும் மரபு

நடுகல் வீரர்களின் உருவத்தினை நடுகல்லில் பொறித்து அவர்தம் பேரையும் ஊரையும் அதில் எழுதிவைத்தனர். அவன் வீரத்தைக் காட்டும் வகையில் அவனுடைய படைக் கருவிகளையும் அருகில் ஊன்றச் செய்துள்ளனர்.

நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்
கடைமணி யுகுநீர் துடைத்த ஆடவரும்
பெயரும் பீடு மெழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை வெற்றுமுனை கடுக்கும்
வெருவரு தகுந கானம் (அகம்.131:8-13)

பீடும் பெயரும் சிறப்பும் எழுதப்பட்ட மரபு , பின்வரும் பாடல்களில் புலனாகும்.

விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுக லன்ன விழுப்பினர் (ஐங்.352:1-2)

ஒன்னார்த் தெவ்வா ருலைவிடத் தார்த்தென
நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்
செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட
கல்லேசு கவலை யெண்ணுமிகப் பலவே (மலை.368-389)

மருங்குல் நுணுகிய பேஎமுதிர் நடுகற்
பெயர்பயம் படரத் தோன்று குயிலெழுத்து (அகம்.297:5-8, 343)

மறக்குடி மக்களால் நடுகல்லே சிறந்த தெய்வமாகப் போற்றப்பட்டது என்பதைப் புறநானூறு (355) உறுதிபட கூறுகிறது. புறப்பொருளில் அமைந்த திணைகள் ஏழும் வீரத்தைப் போற்றுவதாக அமைந்திருப்பது இதற்குத் தக்கச் சான்றாகும். பிற தெய்வங்கள் மன்னர்களாலும் மக்களாலும் வழிபடப்பட்டாலும் மறவர், கூத்தர். பாணர், பொருநர், விறலியர், போன்ற இனக்குழுக்களால் தன்னிகரில்லா தெய்வமாக வழிபடப்பட்டது நடுகல் வழிபாடே ஆகும்.

மார்பிலும் முகத்திலும் கண்ணிலும் அம்புகளை ஏற்று உயிர்நீத்த வேந்தர்க்கும் அவர்தம் பீடும் பெயரும் எழுதப்பட்டு அவரின் வீரதீரச் செயல்கள் பறைசாற்றப்பட்டுள்ளன. இவையே நம் நாட்டில் முதலில் தோன்றிய தமிழ்ச் சாசனங்கள்" என்று கல்வெட்டறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் குறிப்பிடுவது பொருத்தமான ஒன்றாகும்.

விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோ
ரெழுத்துடை நடுகலன்ன விழுப்பிணர்ப் பெருங்கை யானை
(ஐங்குறுநூறு. 352)

என்று ஐங்குறுநூறு காட்டுகிறது.

## 4.2 பந்தல் அமைத்தல்

வீரகற்களுக்கு ஆடையால் பந்தல் அல்லது கூரை அமைத்து வெயில்படாமல் காத்தனர்.

மடஞ்சான் மஞ்ஞை யணிமயிர் சூட்டி
இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படஞ்செய் பந்தர்க் கண்மிசை யதுவே (அகம்.260:25-28)

கிடுகுநிரைத் தெஃகூன்றி
நடுகல்லி னரண்போல
நெடுந்தூண்டிலிற் காழ்சேர்த்திய
குறுங்கூரைக் குடிநாப்பண் (பட்.78-81)

வேலினை அரணாக அமைத்து, கூரை அமைத்த செய்தி இதனால் புலனாகிறது.

அரசர்கள் தம்மேல் பாடும் புலவர்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்பும் மரபும் இருந்துள்ளது.

தன்மேல் பட்டினப்பாலை பாடிய கடியலூர் உருத்திரங்கண்ணாருக்குப் பதினாரு லட்சம் பொன் அளித்து (கலி.8,21) பதினாறுகால் மண்டபம் ஒன்றையும் பரிசிலாக அளித்தான் சங்ககாலச் சோழன் கரிகால் பெருவளத்தான். அம்மண்டபம் பட்டினப்பாலைப் பாடிய கவிஞருக்கு ஒரு நினைவுச் சின்னமாக கி.பி. 1219 ஆம் ஆண்டின் பின்பும் அழிவின்று நின்று நிலவிற்று என்பதைத் தொல்லியல் அறிஞர்கள் உறுதிபடுத்துகின்றனர்.

## 4.3 தூபிகள்

மறவர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டதைப் போல ஞானிகள் இறந்தபின் அவர்களுக்குத் துர்பிகள் எழுப்பப் பட்டன. தூபியின் நடுவிலுள்ள அறையில் அவர்கள் பல் , மயிர்ச்சுருள், நகச்சீவல் எலும்புத்துண்டு ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றைக் கொண்ட அஸ்திப்பெட்டி அடக்கம் செய்யப்பட்டிருக்கும்.

சமண சமயத்தின் 23 ஆவது தீர்த்தங்கரரான பார்சுவதநாதனின் (கி.பி.8 ஆம் நூற்றாண்டு) உடற்சாம்பலின் மேல் ஒரு தூபியைச் சக்ரா என்பவர் கட்டினார். பௌத்தமதத்தைப் போதித்த கௌதம புத்தரின் (கி.மு.6 ஆம் நூற்றாண்டு) உடற்சாம்பலை வைத்து எழுதப்பட்ட காஞ்சி சார்நாத், தூபிகள் முதலில் அசோகரால் (கி.பி.273-232) கட்டப்பட்டவை எனக் கருதப்படுகின்றன. சாஞ்சி பெருந்தூபி 118 அடி குறுக்களவும் 59 அடி உயரமும் உடையது. புத்தரின் நினைவுச் சின்னங்களாகிய இத்தகைய விகாரைகள் சங்க காலத்தில் தமிழ்நாட்டிலும் இருந்தன. (பட்டின.53, சிலம்பு.10:11-14, மேகலை.28:103-132) கௌதம புத்தருக்கு முற்பட்ட 'இறந்தகாலத்து எண்ணில் புத்தர்களுள்' (மேகலை.30:14) கிரகுசந்தா, கோகைமனா, விப்பசி கட்டப்பட்டிருந்தன. தமிழகத்தில் உள்ள தபசியர் சமாதிகள் பற்றி மணிமேகலை (6:54-59) பாடுகிறது. சைவசமய ஞானிகளின் சாதிகள் பற்றி திருமூலரின் (கி.பி.5 ஆம் நூற்றாண்டு) திருமந்திரம் குறிப்பிடுகிறது." (கேசவராஜ், நடுகல் வழிபாடு, ப.3)

## 4.4 மதில்சுவர் அமைத்தல்

நடுகல்லைச் சுற்றி கேடயங்களை வரிசையாக மாட்டி, வேல்களைத் தரையில் ஊன்றி நடுகற்களுக்கு அரண் அமைக்கப்பட்டது.

கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி
நடு கல்லின் அரண்போல் (பட்டினப்பாலை.79-80)

கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்
பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேல்ஊன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்
வெருவரு தகுக கானம் (அகம். 131)

உருவங்களைப் பாதுகாக்க கோயில் மண்டபங்களை அமைத்தல், மண்டபங்களைப் பாதுகாக்க, சுற்றுச்சுவர்களை எழுப்புதல்போன்ற பெருந்தெய்வ வழிபாட்டிற்கு வழிகாட்டியாக நடுகல் வழிபாடு அமைகின்றது.

## 4.5 மண்டுகளும் தொறுவும்

மன்று மண்டு. ஊர்ப்பொதுவிடமாகிய மன்றங்களே நடுகற்களில் 'மண்டுகள்' என்ற குறிக்கப்பட்டுள்ளன. பகைவர்களால் முதலில் அழிக்கப்படுவதும் இம்மன்றுகளே. காரணம் ஆநிரைகளை மன்றுகளிலேதான் நிறுத்தி வைத்தனர். பல்லவர் காலச் செப்பேடு ஒன்றிலும் 'மன்று' சொல் பயின்றுவந்துள்ளது. பெரும்பாலான நடுகற்கள் மண்டுகளுக்கு அருகிலேயே நடப்பட்டுள்ளன. தருமபுரியில் இத்தகைய மண்டுகள் நிறைய உள்ளன. சான்றாக, பாலவாடி மண்டு, ஆதனூர் மண்டு, பனையகுளம் மண்டு, கொளக்கத்தூர் மண்டு போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

மண்டுகளுக்கு அருகில் உள்ள நடுகற்கள் வட்டெழுத்தால் ஆனவை என்றும் அவற்றுள் சில காலத்தால் முற்பட்டவை என்றும் தொல்லியல் அறிஞர்கள் கருதுகின்றனர். இப்பகுதிகளில் தொல்லியல் அறிஞர்கள் தீவிரமாக அகழ்வாராய்ச்சியை மேற்கோண்டால் இன்னும் அரிய தகவல்கள் கிடைக்கலாம்.

'துரு' என்ற சொல்லிற்கு 'செம்மறிஆடு' என்று பொருள் கூறுகிறது சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம். (ப. அருணாச்சலம், 1988, ப. 361)

ஆடுதலைத் துருவின் தோடுதலைப் பெயர்க்கும் (நற்.169)

மறித்துருஉத் தொகுத்த பறிப் புற இடையன் (அகம்.94)

வீரகற்களிலோ 'தொறு' என்று பயன்படுத்தப்பட்டுள்ளது. பசு, எருமை, ஆடு ஆகிய மூன்றினையும் இச்சொல் குறிக்கிறது. நிரை என்ற சொல் கூட்டம் என்ற பொருளிலும் பயன்படுத்தப்படுகிறது. தொறு என்னும் சொல் பதிற்றுப்பத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. (13:1) வீரக் கற்களில் இச் சொல் ஆடு, எருமை, பசு ஆகியவற்றின் கூட்டத்தினையும் குறிக்கிறது.

ஆன்தொறு, (T.N.A.D. No.196/37)

எருமைத்தொறு (T.N.A.D. No.1971/57)

மறிதொறு (T.N.A.D. No.1971/73)

என்று தனித்தனி கூட்டத்தினையும் குறிக்கிறது." (கேசவராஜ், 2008, ப.211) 'தொறு என்பதற்குப் பசுக்கூட்டம், தொழு, கூட்டம், இடைச்சாதி என்று பொருள் கூறப்படுகிறது (Tamil Lexion, Vol.IV, P.2104) கவர்தல் என்ற பொருளில் நடுகற்களில் சுட்டப்படுகின்றது.

திருவண்ணாமலை, செங்கம், தருமபுரி பகுதிகளில் கிடைத்துள்ள நடுகற்களில் 'தொறு' என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது. 90 சதவிகிதம் நடுகற்கள் இவை தொடர்பானவையே கிடைத்துள்ளன.

கர்நாடகத்திலும் ஆந்திராவிலும் தொறுப்பூசல் பற்றிய நடுகற்களே மிகுதியாக உள்ளன. கால்நடை வளர்ப்பு எங்கெல்லாம் இருந்ததோ அங்கெல்லாம் நடுகல் வழிபாடு இருந்துள்ளது என்பது ஆய்வாளர்கள், தொல்லியல் அறிஞர்களின் கருத்து.

தொறு - தொழு - தொழுவம்

என்று ஆகியிருக்க வேண்டும். 'மாட்டுத் தொழுவம்' என்ற மாடுகளைக் கட்டிவைக்குமிடத்தை இன்றும் கிட்டமப்புறங்களில் சுட்டுகின்றனர். இலக்கியங்களிலும் 'தொழு' என்ற பொருளிலேயே இடம்பெற்றுள்ளன. தொழுக்களையுடைய ஊர்கள் (பெரும்பாண். 185) வடுகர், கோவலரின்

தொழுவாகிய அறையைக் கவர்ந்து ஆநிரை கொண்டனர் (அகம் 253) இரவு நேரத்திலே ஆநிரைகளைத் தொழுவிலே கட்டி வைத்தனர் (நற். 109: 67) ஏறுகளின் கொம்புகளைச் சீவி தொழுவத்தில் விடுவர்(கலி. 101, 57-59) இச்சான்றுகள் 'தொறு' என்ற சொல் 'தொழுவத்தை' யே குறித்தது என்பதை உணர்த்துகின்றன.

## 4.6 நடுகல் ஓவியங்கள்

நடுகல்லில் சிற்பம் செதுக்கப்படுவதற்கு முன்பு இறந்தவரின் உருவத்தை ஓவியமாக வரைந்து கொள்ளுதல் மரபாக இருந்துள்ளது. அந்த ஓவியத்தின் துணை கொண்டுதான் நடுகல்லில் அவ்வுருவம் செதுக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியர் காலத்திலேயே ஓவியம் தீட்டும் வழக்கம் பண்டைத் தமிழரிடையே இருந்துள்ளது.

மா. இராசமாணிக்கனார் எழுதும் பின்வரும் பகுதியில், நடுகல் சிற்பங்கள் மூலம் ஓவியக் கலை உச்சநிலையிலிருந்ததை அறிய முடிகிறது.

விழுப்புண்பட்டு வீரர்கள் இறந்த இடத்தில் அல்லது அவர்களைப் புதைத்த இடத்தில் அல்லது அவர்களது உடற்சாம்பலை அடக்கம் செய்த இடத்தில் ஒருகல் நடப்படும். அக்கல்லில் இறந்த வீரனது உருவம் செதுக்கப்படும். பின்னர், அதற்குப் பூசை செய்யப்படும். அதற்கு நடுகல் என்று பெயர். அது வீரராலும் இறந்தவன் மரபினராலும் தொழப்படும். கல்லில் இவ்வாறு ஒரு உருவம் செதுக்கப்படுவதற்கு முன்பு அவ்வுருவத்தை ஓவியமாக வரைந்து கொள்ளுதலே வழக்கமாகும். அந்த ஓவியத்தின் உதவிகொண்டே கல்லில் உருவம் செதுக்கப்படும். எனவே தொல்காப்பியர் காலத்திலேயே ஓவியம் தீட்டும் வழக்கம் தமிழரிடம் இருந்து வந்தது என்பது தெளிவாகும்." (கேசவராஜ், 1978, ப.)

சங்க இலக்கியங்கள், 'பீடும் பெயரும் எழுதி', 'எழுத்துடை நடுகல்' என்றெல்லாம் குறிப்பிட்டாலும் 'எழுத்து' என்ற சொல், 'ஓவியம்' என்ற பொருளிலேயே வழங்கப்பட்டுள்ளது. தெய்வம் எழுதிய பாவை, கடவுள் எழுதிய கல், கடவுள் ஆகிய பாவை என்பன ஓவியத்தையே சுட்டுகின்றன எனலாம். ஆரம்பகாலத்தில் நடுகற்களில் ஓவியங்களே, உருவங்களே வரையப்பட்டுள்ளன.

தமிழகத்தில் ஓவியக்கலை சிறந்திருந்தபடியால் நடுகற்களில் உருவங்களை எழுதி வழிபட்டுள்ளனர்.

கற்பதுக்கை ஓவியங்கள் பற்றி ஆய்வு செய்து அவற்றைக் கண்டுபிடித்த ச. கிருஷ்ணமூர்த்தி, பின்வருமாறு கூறுகிறார். 'பீடும் பெயரும் எழுதி' என்பதற்குச் 'சிற்பமும் கல்வெட்டும் செதுக்கி' என்பதற்குப் பதிலாக 'ஓவியத்தில் வரைந்து' என்று கொள்வதே பொருத்தமானதாகும். தமிழ்நாட்டில் ஓவியக்கலையே சிறந்திருந்ததாலும் வரலாற்றுக்கு முற்பட்ட ஓவியங்கள் தமிழகத்தில் பல இடங்களில் இருப்பதாலும் பெருங்கற்கால சமுதாயத்தைச் சேர்ந்த ஓவியங்களே இவையாவும் என்பதால் குலமரபுக் குழுக்கள் பல இருந்த சங்க காலத்தில் புடைப்புச் சிற்பங்களைக் காண்கிறோம்.' (ச. கிருஷ்ணமூர்த்தி, கற்பதுக்கை ஓவியங்கள், கையெழுத்துப்பிரதி).

## 4.7 நடுகல் சிற்பங்கள்

நடுகல் சிற்பங்களைப் பற்றி சங்க இலக்கியங்களில் அகநானூறு (269, 365) குறிப்பிடுகின்றது. அதோடு குறிஞ்சி நிலத்தலைவனுடன் நாய்கள் காணப்படுவதைப் போல நடுகல் சிற்பங்களில் வீரர்களுடன் நாய்கள் காணப்படுகின்றன. (அகம்.28)

தருமபுரி மாவட்டத்து நடுகற்களில் விலங்கு மனிதன், ஆடையணிகள், தலைக்கோலம், படைக்கலம், கொள்கலங்கள் ஆகியவைச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. வீரன் புலியைக் கொல்வது போன்ற நடுகற்களும் சில இடங்களில் கிடைக்கின்றன.

## 5. வழிபடு முறைகள்

கோயில் என்ற நிறுவனம் உருவாக காரணமாக அமைந்தவை நடுகற்கள். நடுகற்கள் நடுவதற்கு முன்னும் நட்ட பின்பும் பின்பற்றப்பட்ட சில மரபுகளும் வழிபாட்டு முறைகளும் இன்றைய கோயில்களின் அமைப்பு, வழிபாட்டு மரபுகளோடு ஒத்திருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவற்றைக் காணலாம்.

## 5.1 பலியிடுதல்

நடுகற்கள் தெய்வங்களாகவே வணங்கப்பட்டன. அதனால் நடுகற்களைப் பலியூட்டி நன்னீரில் நீராட்டுவித்து, நெய்விளக்கு ஏற்றி வழிபாடு செய்தனர். இதனை,

இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லின் நாட்புலி யூட்டி
நன்னீர் ஆட்டி, நெய்ந்நறைக் கொளீஇய
மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும் (புறம். 329)

என்று புறநானூறு பேசுகிறது.

நடுகற்களுக்கு இன்றைய சிறுதெய்வங்களுக்கு நாட்டார் வழக்காறுகளிலும் செய்யப்படுவதைப் போன்று உயிர்களைப் பலியிட்டுள்ளனர். துடியினை ஒலித்துள்ளனர். கள் படைக்கப்பட்டுள்ளது.

நுழைவதி நெடுவேற் குறும்படை மழவர்
முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டி துடிப்படுத்துத்
தோப்பி கள்ளொடு துருஉப்பலி கொடுக்கும்
போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரம் (அகம்.35:4-10)

பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல் (அகம்.67:10)

நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ (புறம். 232:3-4)

பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி
மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ
டணிமயிற் பீலிசூட்டிப் பெயர்பொறித்
தினிநட் டனரே கல்லும் (புறம்.260:25-28)

போன்ற சான்றுகள் இதனை நிறுவுகின்றன. இன்றைய பெருந்தெய்வ வழிபாட்டில் கள்ளும் உயிர்ப்பலியும் விலக்கப்பட்டுள்ளது.

பெருந்தெய்வமான முருகவழிபாட்டில் சங்க காலத்தில் இருந்தது போன்றே 'கிடாவெட்டி' வேண்டுதலை நிறைவேற்றிக் கொள்ளும் மரபு இன்றும் கடைபிடிக்கப்படுகிறது.

## 5.2 வீர வணக்க வழிபாடு

தெய்வங்களைக் காட்டிலும் பகைவர்களைக் கொன்று அவர்தம் களிறோடு போரிட்டு அவற்றையும் கொன்று, தாமும் வீழ்ந்து நடுகல்லானவர்களைத் தொழுவதைக் காட்டிலும் நெல்லும் பூவும் சொரிந்து வழிபடச் சிறந்த கடவுளும் வேறு இல்லை என்ற எண்ணம் மக்களிடையே வேரூன்றி இருந்தது. வீரத்திற்கு அவர்கள் கொடுத்த மரியாதையையும் மதிப்பையும் இது காட்டுகிறது.

**ஒன்னார்த் தெவ்வர் முன்னின்று விலங்கி**
**ஒளிறுஏந்து மருப்பின் களிறு ஏறிந்து வீழ்ந்தெனக்**
**கல்லே பரவின் அல்லது**
**நெல் உகுத்து பரவும் கடவுளும் இலவே** **(புறம்.335)**

என்ற பாடல் நடுகல் வழிபாட்டின் உயர்வைக் காட்டுகிறது.

## 5.3 விடியற்காலை வழிபாடு

நடுகல்லான வீரர்களுக்கு விடியற்காலையில் வழிபாடு செய்யப்பட்டுள்ளது. நடுகல் நீராட்டப்பட்டது. நெய்விளக்கு ஏற்றி புகையூட்டி தூபம் போடப்பட்டது.

**இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்**
**புடைநடு கல்லின் நாட்பலி யூட்டி**
**நன்னீர் ஆட்டி நெய்ந்நறைக் கொளீஇய**
**மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும்** **(புறம்.329:1-4)**

நெல்லையும் மலரையும் தூவி பரவினர்.
கல்லே பரவி னல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளும் இலவே (புறம்.355:11-12)

## 5.4 மலர் சூட்டுதல்

ஆத்தி மர நார்களால் தொடுக்கப்பட்ட கரந்தை மலர்மாலைகளையும் (அகம் 269) அதிரலாகிய மல்லிகை மலர்களையும் நடுகல்லுக்குச் சூட்டினர். இதனை,

சிலையே றட்ட கணைவீழ் வம்பலர்
உயர்பதுக்கு இவர்ந்த ததர்கொடி அதிரல்
நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டுஞ்
சுரனிடை விலங்கிய மரனோங்கு இயவின் (அகம்.289:1-4)

என்று அகநானூறு கூறுகிறது.

வேங்கை பூமாலையைப் பனையோலையால் அலங்கரித்து வீரக்கல்லிற்குச் சூட்டினர் என்பதை,

ஊர்நனி இறந்த பார்முதிர் பறந்தலை
ஓங்குநிலை வேங்கை ஒள்ளிணர் நறுவீப்
போந்தைஅம் தோட்டின் புனைந்தனர் (புறம்.265:1-3)

என்று புறநானூறு கூறுகிறது.

வீரக்கல்லிற்கு மஞ்சள் பூசி வழிபாடு செய்யப்பட்டது. (அகம்.269)

## 5.5 குலத்தெய்வ வழிபாடு

நடுகற்களான தம் முன்னோர்களைத் தம் குலதெய்வமாகக் கருதி வணங்கும் மரபும் இருந்துள்ளது. படையலிடுதலோடு வேண்டுதலும் செய்தனர். நடுகற்களான தம் முன்னோரின் முன்பு நின்று போருக்குச் சென்றுள்ள வீரனின் மனைவி வேண்டுதல் செய்ததை,

நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது
விருந்து எதிர் பெறுகதில் யானே என்ஐயும்
மோ...........வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை எய்துக எனவே (புறம்.306)

என்ற பாடல் பதிவு செய்திருப்பதை அறியலாம்.

போரில் நீத்தார் வழிபாடாகிய நடுகல் வழிபாட்டைத் தெய்வங்களைக் காட்டிலும் சிறந்ததாகப் பழந்தமிழர் வழிபட்டனர் என்பது புலனாகிறது. இன்றும் தமிழர் மரபில் தம் குடியில் இறந்துபோன முன்னோர்களைத் தெய்வமாக வழிபடுவதும் அவர்களுக்கு நினைவிடங்கள் எழுப்பி, அவர்கள் இறந்த நாளில் அன்னதானமிட்டு நினைவுநாளைக் கொண்டாடுவதும் நடைமுறையில் இருப்பதை அறியலாம். அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செம்மையுறச் செய்தவர் மன்னராலும் மற்றவர்களாலும் போற்றப்பட்டனர் என்பதைப் புறநானூறு விளக்குகின்றது.

பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதி போருக்குச் செல்லும் போது பசு, பெண்டிர், மூத்தோர் போன்றவர்களோடு இறந்துபோன முன்னோர்க்கு ஆற்றவேண்டிய கடன்களைச் செய்வாரையும் பாதுகாப்பாக இருத்திவிட்டு போர் செய்வான் என்பது விளங்குகிறது.

தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர் பெறாஅ தீரும் (புறம்.9)

இறந்தோர்க்குச் செய்யவேண்டிய கடன்களைச் செய்வோர் ‘பொன்போற் புதல்வர்’ என்று போற்றப்பட்டனர்.

## 5.6 கல்நடுதல்

சிறு தெய்வ வழிபாட்டில், குறிப்பாக, கோவில்களை எழுப்புவதற்கு முன்னால், வேப்பமரம், அரசமரம் போன்றவற்றின் அடியில் கோயில் எழுப்புவதற்கு முன் ஒரு செங்கல்லை நட்டு, அதற்கு மஞ்சள், குங்குமமிட்டு, கல்லிற்கு ஆடைகட்டி வழிபடும் வழக்கம் இன்றும் உள்ளது குறிப்பிடத்தக்கது.

சங்க காலத்திலிருந்த வீரவழிபாடாகிய நடுகல் வழிபாட்டின் பரிணாம வளர்ச்சியே பிற்காலத்தே எழுந்த கோயில் வழிபாட்டிற்கும் உருவ வழிபாட்டிற்கும் வழிவகுத்தது என்பது வெள்ளிடை மலை.

நடுகல் வழிபாட்டின் எச்சமாக 'கல் எடுப்பு' என்ற சடங்கு தமிழகமெங்கும் உள்ளது. இறந்தவர்க்காகச் செய்யப்படும் இச்சடங்கில் 14 ஆம் நாள் காரியம் முடிந்தபின் சிறு சிறு கற்களைக் கொண்டு வந்து நீராட்டி, அதற்கு மஞ்சள், குங்குமமிட்டு, மலர்தூவி, வழிபாடு செய்யப்படுகிறது. 'பிண்டச்சோறு' வைக்கும் வழக்கமும் இன்று வரை உள்ளது. 'இறந்தவர்க்கு நினைவு நாள்' கொண்டாடுவதும் நடுகல் மரபுவழிப்பட்ட எச்சமே எனலாம். இப்பிண்டச்சோறு என்பதே சங்க காலத்தில் 'பெருஞ்சோறு' எனப்பட்டது. போரிலே இறந்துபோன வீரர்களுக்காக அளிக்கப்பட்ட உணவே 'பெருஞ்சோறு' எனப்பட்டது. உதியஞ் சேரல் முன் போரிலே இறந்த வீரர்களுக்கு அவர்களைப் போற்றும் வண்ணம் பெருஞ்சோறு அளித்தான். அரசனும் உடனிருந்து உண்பது இதன்சிறப்பு ஆகும்.

மறப்படை குதிரை மாறா மைந்தின்
துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை, இரும்பல் (அகம்.233)

பாரதக்காலத்து உதியன் வேறு. இவன் வேறு என்பது அறிஞர் கருத்து.

## 5.7 பிதிர்க்கடன்

முன்னோர்க்கு ஆற்றப்படும் சடங்கே பிதிர்க்கடன் என்பது. அதை ஆண்டுதோறும் செய்து மக்கள் தம் 'பிதுர் தோஷத்தைப்' போக்கிக்கொள்கின்றனர். ஆடி அமாவாசையும் தை அமாவாசையும் இதற்குச் சிறந்த நாள்களாகக் கருதப்படுகின்றன.

'பித்ருக்கள்' எனப்படும் முன்னோர்கள் நற்கதி அடையவும், அவர்கள் ஆசியால் குடும்பம் தழைக்கவும் செய்யப்படுகிறது.

காவிரிக்கரை, திருச்சி, ஸ்ரீரங்கம், அம்மா மண்டபம், படித்துறை, மயிலாடுதுறை, திருவையாறு தீர்த்தக் கூடம், பவானி முக்கூடல் போன்ற

நீர்நிலைப் பகுதிகளிலும் ராமேஸ்வரம், தனுஷ்கோடி, கன்னியாகுமரி, பூம்புகார், கோடியக்கரை போன்ற கடற்கரை பகுதிகளும் பிதுர் வழிபாட்டுக்கு உகந்தவையாகக் கருதப்படுகின்றன.

சமயபுரம் மாரியம்மன் கோவில் இதற்கு மிகச் சிறந்த கோவிலாகக் கருதப்படுகிறது.

நாகரிக வளர்ச்சி பெறாத பழங்குடி மக்கள் இந்தியாவின் பல பகுதிகளில் இன்றும் வாழ்கின்றனர். அவர்களிடையே இறந்தவர்கக்குக் கல் எடுக்கும் பழக்கம் இன்றும் உள்ளது.

மத்திய பிரதேசத்திலுள்ள குருக் இனத்தவர், சோட்டா நாக்பூரிலுள்ள முண்டா இனத்தவர், அஸ்ஸாமிலுள்ள காஸி இனத்தவர், நீலகிரியிலுள்ள குறும்பர், இருளர் போன்றவர்களிடையம் இன்றும் இவ்வழக்கம் இருப்பதை அறியமுடிகிறது.

## 5.8 நவகண்டம் கொடுத்தல்

நவகண்டம் கொடுத்தார்க்கும் தமிழகத்தில் நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. கொற்றவை வழிபாட்டோடு தொடர்புடையது இது.

தன் நாட்டிற்காகவோ, அரசனுக்காகவோ தன் உடல் உறுப்புக்கள் ஒன்பதினையும் கொற்றவைக்கும்க்காணிக்கையாக, தானே வெட்டித் தருவதாகும்.

இவ்வாறு நவகண்டம் கொடுத்தவர்களுக்கு எடுக்கப்பட்ட நடுகல் குறித்த கல்வெட்டுக்கள் தகடூர் பகுதியில் கிடைத்துள்ளன.

அரசன் ஊர் போன்றவைகளின் நலன் கருதி தன் அங்கங்களைத் தானமாகக் கொடுக்கும் வழக்கம் சங்க காலத்திலிருந்து காணப்படுகின்றது. என்று தி. சுப்பிரமணியன் குறிப்பிடுவது இங்கு கருதத்தக்கது.

நவகண்டம் கொடுத்தவர்களுக்கு நடுகல் எடுத்து வழிபட்டதை ‘தலைபலி’ ‘தூங்குதலை கொடுத்தல்’ என்பன குறிக்கின்றன. இச்செய்தி சிலப்பதிகாராம், மணிமேகலை, தக்கயாக பரணி போன்றவற்றிலும் இடம்பெற்றுள்ளது.

பதிற்றுப் பத்து சேரலாதனுக்கு வெற்றி கிட்டவேண்டி வீரன் ஒருவன் தன் தலையைத் தானே அரிந்து காணிக்கையாக்கிய செய்தியைக் கூறுகிறது. 'சிலம்போ,' 'பலிகொடை புரிந்தோர்' என்று குறிப்பிடுகிறது.

## 5.9 வளமை வழிபாடு

தொல்காப்பியர் காலத்தில் நடுகல்லுக்குக் கோயில் இருந்தமை பற்றிய செய்தி இல்லை. சங்க இலக்கியங்களில் காணப்படும் நடுகல் பற்றிய குறிப்புகளில் அதன் வடிவம், படைக்கப்படும் பொருள்கள், நடுகல்லில் வரையப்பட்டுள்ள உருவங்கள் போன்றவை குறித்த செய்திகளே உள்ளன. ஒருவேளை நடப்பட்ட அக்கல்லையே கோயிலாகக் கருதி வழிபட்டிருக்கலாம். தொல்லியல் அறிஞர் இரா. பூங்குன்றன் நடுகல்லுக்குக் கோயில் இல்லை என்பதைச் செங்கம் நடுகற்களில் மூன்று நடுகற்களைச் சான்று காட்டி நிறுவுகிறார். (எண் 36, 68, 50, 1971)

உமணர் வண்டிகள் பெருவழிகளில் செல்லும்போது நடுகல் மீது சக்கரம்பட்டுத் தேய்ந்து போன எழுத்துக்கள் என்று கூறுவதும் நடுகல்லுக்கு கோயில் இல்லை என்பதைத் தெரிவிக்கின்றன.

சைவ சமயத்தினைக் குறிக்கும் இலிங்க வழிபாடுதான் நடுகல் வழிபாடு என்று கூறுவது ஆராயத்தக்கது. ஏனெனில் சங்க காலத்தில் சைவ, வைணவ சமயம் என்ற சமயக் காழ்ப்புணர்ச்சி இல்லை. சமயங்கள் குறித்த சிந்தனையும் இல்லை. இயற்கையில் இறைவனைக் கண்டதைப் போலவே தம்மையும் தம் ஊரையும் செல்வச் செழிப்பைத் தரும் ஆநிரைகளையும் காத்தல் பொருட்டு பகைவரோடு போரிட்டு இறந்தவரின் செயற்கரிய செயலுக்காக நடுகல்லை நட்டனர். நட்ட கல்லை தெய்வமாகப் போற்றினர். இனக்குழுச் சமுதாயத்தின் சிறந்த பண்பாட்டுள் இந்நிகழ்வு சிறப்பானது. எனவே இறந்த வீரன் தம்மோடு இருப்பதாக நினைத்தனர். அதன் விளைவாக (நடுகல் வீரன்) வளத்தினையும் மகப்பேற்றினையும் கொடுக்கும் சக்தி உடையவன் என்று நம்பினர்.. இது தொல்குடிகளின் நம்பிக்கை. உலகெங்கிலும் உள்ள தொல்குடிகளிடம் இந்நம்பிகையே உள்ளது.

இறந்தவர் மீண்டும் அதே குடியில் பிறப்பார் என்ற நம்பிக்கை இன்றும் உள்ளது. இறந்தபின் பிறக்கும் குழந்தை இறந்தவரே என்ற நம்பிக்கையும் உள்ளது. ஆதலால் இவ்வழிபாட்டை 'வளமை வழிபாடு' என்றும் கருதலாம்.

## 5.10 நடுகல் வழிபாட்டில் பெண்கள்

வேந்தன் வெற்றி பெறவும் வீடுவளம் பெறவும் வேண்டி பெண்கள் சங்ககாலத்தில் நடுகற்களை வழிபட்டனர். ஆனால் உலக வழக்கில் பெண்கள் சுடுகாடுகளுக்குச் செல்லவோ, நினைவுச் சின்னங்களை வழிபடவோ சமூகம் அனுமதிப்பதில்லை. இலக்கிய வழக்கில் நடுகல் வழிபாட்டில் பெண்கள் பங்கு பெறுவது சுட்டப்படுகின்றது. உயர்ந்தோர் வழக்கு சமஸ்கிருத மயமாக்குதலுக்குள்ளானமையால், மாறும் தன்மையுடையது. ஆதலால் உயர்ந்தோர் செய்யும் நடுகல் வழிபாட்டில் பெண்கள் அனுமதிக்கப்படுகின்றனர். மக்கள் வழக்கே தொடர்ந்து வருவது இந்தப் பின்னணியில் பார்க்கும் போது, செங்கம், தருமபுரி நடுகல் வழிபாட்டில் பெண்கள் இன்றும் விலக்கப்படுகின்றனர்.

பெண்கள் நடுகல் வழிபாட்டில் விலக்கப்படுவதற்கு, நடுகல் சமுதாயத்தின் கால்நடை வளர்ப்பே காரணம். கால்நடை வளர்ப்பு சமுதாயத்தில் பெண் 2 ஆம் நிலையிலேயே எண்ணப்படுகிறாள். வேளாண்மைக்கான தொழிலில் இரும்புக் கருவிகள் வருவதற்கு முன்புவரை பெண்களே நிலத்தை உழுது வேலைபார்த்துள்ளனர். இரும்புக் கருவிகளின் (கலப்பை போன்றன) பயன்பாட்டிற்குப் பிறகு பெண் 2 ஆம் நிலைக்குத் தள்ளப்படுவதை அறியமுடிகிறது.

நீலகிரி மாவட்ட 'தோதர்' கோயிலுக்குள் செல்ல பெண்களுக்கு இன்றும் அனுமதி மறுக்கப்படுகிறது. கொங்கு நாட்டிலும் சில நடுகல் கோயிலுக்குள் செல்ல பெண்கள் அனுமதிக்கப்படுவதில்லை. ஆப்பிரிக்கப் பழங்குடிகளிடையேயும் இந்தப் போக்கினைக் காணமுடிகிறது.

போரில் இறந்த கணவனுடன் உயிர்விட்ட செய்திகளைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. ஆய் அண்டிரன் உடல் எரிக்கப்பட்டபோது அவன் உரிமை மகளிரும் உடன் பாய்ந்து இறந்தனர். (புறம் 240)

பூதபாண்டியன் இறந்தபோது அவன் மனைவி பெருங்கோப் பெண்டு இறந்த செய்தியையும் புறநானூறு (246, 247) கூறுகிறது.

அவர்களுக்கு நடுகல் எடுத்தற்கான சான்றுகளை எங்கும் காணமுடியவில்லை. ஆயினும் சங்க காலத்தில் கணவனுடன் உயிர்த்துறந்த பெண்டிற்கு நடுகல் எடுக்கவில்லை என்பதை ஏற்க இயலவில்லை.

கற்புடை மகளிர்க்கு நடுகல் எடுத்து வழிபடுதலும் பண்டைத் தமிழர் வழக்கமாகும். கண்ணகிக்கு நடுகல் எடுத்து வழிபட்ட செய்தியை, "உரைசால் பத்தியை உயர்ந்தோர் ஏத்துவர்" என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. கொற்றவைக்குரிய பரணி நாளில் நவகண்டம் கொடுத்து பலியிடும் வழக்கம், 'பரணி நோன்பு' எனப்பட்டது. இதனை மகளிரும் நோற்றனர் என்ற செய்தியைத் திருக்கோவலூர் பிரதேசத்தில் அகப்பட்ட கற்றூண்கள் தெரிவிக்கின்றன. இன்னான் மனைவியும் இன்னான் மகளுமான இவர் பரணி நோற்ற தறி இது என்ற கருத்தில் இத்தூண்களில் எழுத்துக்கள் வரையப்பட்டுள்ளன. எனவே பரணி நோன்பு நோற்ற மகளிர்க்கு நடுகல் எடுக்கப்பட்டது என்பது புலனாகிறது.

மன்னருக்கும் மறவருக்கும் கற்புடைய மகளிருக்கும் ஞானிகளுக்கும் நடுகற்கள் தூபிகள் எடுக்கப்பட்டிருப்பதைப் போன்று தேவரடியார் குலத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணிற்கும் கல்வெட்டுடன் கூடிய கல்லறை அமைக்கப்பட்டுள்ளது 18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இந்தக் கல்லறை மதுரை அருகே திருப்பரங்குன்ற மகளிர் காவல்நிலையத்தை ஒட்டிய பகுதியில் இன்றும் உள்ளது. ஆறடி அகல, நீள உயரத்தில் கட்டப்பட்டுள்ள இக்கல்லறையின் உட்புறம் செங்கல் சுதையாலும் வெளியில் செவ்வக வடிவ பாறைக் கற்களாலும் எழுப்பப்பட்டுள்ளன.

தாது வருடம் மாவிமாதம் 30 ஆம் தேதி திருப்பரங்குன்றத்திலிருக்கும் தேவரடியார் பொன்னம்மாள் மகளான பாப்பாள் இறந்து போகின்ற காலத்தில் தன்னுடைய சொத்துக்களை விற்று தனக்குச் சமாதி (கல்லறை) கட்டும்படிக்கும் அத்தியான சேனாதிபதி அய்யர் மற்றும் குமார சாமியா பிள்ளை என்பவர்களிடத்தில் சொன்னபடி நடத்தப்பட்டிருக்கிறது" என்று அக்கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.(செய்தி, தினகரன் வெள்ளி மலர், 11.06.10)

## 6. சங்ககால நடுகற்கள்

சங்க காலத்தைச் சேர்ந்த நடுகற்கள் இதுவரை கிடைக்காத நிலையில் அண்மையில் புலிமான் கோம்பையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இக்கல்லில் தமிழ்ப் பிராமியால் எழுதப்பட்டுள்ளது.

தகடூர் பகுதியில் கிடைத்துள்ள நடுகற்கள் கி.பி. 4, 5 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவைகளாகவும் அதற்கும் பிற்பட்டவையாகவும் உள்ளன.

தமிழகத்தில் செய்யப்பட்ட அகழாய்வுகளில் அரிக்கமேடு, கொடுமணல், உறையூர், கரூர், அழகன் குளம் ஆகியவற்றில் கண்டெடுக்கப்பட்ட பானை ஓடுகளில் தமிழ்ப் பிராமி எழுத்துக்கள் உள்ளன. இதைப்போன்றே சங்ககால காசுகளிலும் தமிழ்ப் பிராமி எழுத்துக்களே உள்ளன. தகடூர்ப் பகுதியில் ஜம்பைக் கல்வெட்டும் தமிழ்பிராமி எழுத்துக்களிலேயே உள்ளன. ஆனால் தமிழ்ப்பிராமி எழுத்துக்களுடன் கூடிய நடுகற்கள் இதுவரை கிடைக்கவில்லை." (தி. சுப்ரமணியன், 2009, பக். 146)

### 6.1 பதுக்கைகள்

இறந்தவர்களை அடக்கம் செய்கின்ற முறைகளுள் ஒன்றே 'பதுக்கைகள்' ஆகும். பாலை நிலத்திலே இறந்த வழிப்போக்கர்களுடைய உடலை மறைத்து, தழையைச் செயற்கையாக இட்டு மூடிய குவியலானது யானைக்கு நிழலைத் தருவதாக குறுந்தொகை கூறுகிறது.

.......... வெஞ்சுரத்
துலந்த வம்பல ருவலிடு பதுக்கை
நெடுநல் யானைக் கிடுநிழ லாகும் (குறு.77)

பதுக்கை நிழலொதுக்கிடயும் (நற்.352:8)

கொலைத்தொழிலையுடைய வேடர் வில்லாலே கொல்லப்பட்டவருடைய உடலம் மறை இட்ட இலைக்குவை. (கலி.2:12)

வழிப்போவோர் இறந்துபட தழையை இட்டு குவித்த
குவியல்களை உடைய ஊர் (குறுந்.297)

பாலை நில வழியேதான் இத்தகு உவலிகு பதுக்கைகள் மிகுந்திருந்தன என்பதைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. (கலி.13 அகநனூறு 6714)

உவந்த வம்பலர் உவலிடு பதுக்கை (குறுந்.372:5)

வெண்ணுனை யம்பின் விசையிட வீழ்ந்தோர்
எண்ணுவரம் பறியா வுவலிடு பதுக்கைச் சுரம் (அகம்.109:7:9)

வம்பலர் உடல்களை மூடிய பதுக்கை
(அகம்.175:4-5) (215:10-11, 231, 5-6, 289:1-2, புறம்:3)

சுரத்துப்பதுக்கை (அகம்.35:6-7)

சுரத்து வம்பலர் சுரஞ்செல் வம்பலர் (பெரும்பாண்.1,55)

வெஞ்சுரத்து வம்பலர் இறத்தல்
(நற்.164:6-8), 298:1-2, 352:1-3, அகநா.113;187, 161:2-4, 175:1-6)

செருவேட்டுச் சிலைக்குச் செஞ்கணாடவர் வில்லிட
வீழ்ந்தோர் பதுக்கை கோங்கின்
.................
கான யானை கவளங் கொள்ளும் (அகநா.157:4-8)

"அண்மைக் காலத்தில் தருமபுரி மாவட்டம் கிருஷ்ணகிரி வட்டம் வெள்ளாளப்பட்டி, மகாராஜா கடை போன்ற ஊர்களில் கற்பதுக்கைகள் கிடைத்துள்ளன. அவற்றில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. பறவைகள், மிருகங்களின் உருவங்கள் சண்டைக் காட்சிகள் கருவுற்ற பெண்ணின் உருவமும் வரையப்பட்டுள்ளன. வெள்ளை வண்ணம் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வோவியங்கள் பரந்து விரிந்த பாறைகளின் மேல் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள கல் பதுக்கைகளில் வரையப்பட்டுள்ளன. எல்லா கற்பதுக்கைகளிலும் ஓவியஙகள் இல்லை. சில கற்பதுக்கைகளைச் சுற்றி நன்கு வடிக்கப்பட்ட கற்கள் வட்டமாக அடுக்கிவைக்கப்பட்டு உள்ளன. சிலவற்றைச் சுற்றி ஆளுயர பலகைக் கற்கள் வட்டமாக நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன." (இரா. பூங்குன்றன், 2003, ப. 21)

## 6.2 புலிக்குத்திக்கல்

சங்க காலத்தில் புலி, பன்றி, ஆநிரை, யானை, நாய் போன்ற விலங்குகளோடு போரிட்டு இறந்த வீரர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் இறந்தால் ஒரே இடத்தில் வைக்கப்பட்டது. ஆனால் சங்ககாலத்தைச் சேர்ந்த இத்தகு நடுகற்கள் கிடைத்தில.

விலங்குகளோடு போரிட்ட காட்சிகளை நடுகல்லில் வடித்துள்ளனர். 'புலியோடு போரிட்டு இறந்தார்க்கு எடுக்கப்பட்ட கல் 'புலிக்குத்திக்கல்' எனப்படுகிறது. சேலம் பகுதியில் இத்தகு கற்கள் நிறைய கிடக்கின்றன. தெருக்களுக்கும் 'புலிக்குத்தி தெரு, என்று பெயரிடப்பட்டுள்ளன. சில கற்கள் கேட்பாறற்றுத் தெருக்களில் சாய்ந்து கிடக்கின்ற நிலையினையும் காணமுடிகிறது. (தினகரன், வெள்ளி சிறப்பு மலர், 11.12.2009, ப.1)

முதலாம் மகேந்திரவர்மன் காலத்தைச் சேர்ந்த 'மோத்தக்கல்' நடுகல்லில் வலக்கையில் குறுவாளுடன் நிற்கும் வீரனின் இடது கையைப் புலி பாய்ந்து கடித்த நிலை சிற்பமாக உள்ளது.

கோவிசைய மயேந்திர
பருமற்கு முப்பதிரண்டா
வது பொன்மோதனார் சே
வகன் வின்றண்(வ)டுகன்
புலிக்குத்திப் பட்டான்
கல் (1971 /89) வெ. கேசவராஜ், பக்.138-139)

இவ்வீரர்கள் இறந்த இடம் கன்னாடு' எனப்பட்டது.

## 6.3 பன்றி குத்திக்கல்

தினைப் பயிர்களை அழிக்கும் காட்டுப் பன்றிகள் இரவில் வேட்டையாடிப்பட்டன. கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ரெட்டியூர் நடுகல் கல்வெட்டு,

ஸ்வஸ்தி ஸ்ரீ அய்யப்பதேவன்
நாடாள வேனாடுடைய இருசப்பை

யனூர் அடியான் அரையகுட்டி ப
ன்றி குத்திப் பட்டான் (1972/ 26) மேலது

## 6.4 யானை குத்திக்கல்

மூதின்முல்லையில் அமைந்த புறப்பாடல் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த இரண்டுபேர் போரில் இறந்தபின் மூன்றாம் நாள் தன் குழந்தையைப் போருக்கு அனுப்பிய பெண்ணை வியக்கிறது. இத்தகையோர்க்கு நடுகல் கட்டாயம் எடுக்கப்பட்டிருக்கும். ஆனால் களிறெறிந்துப் பெயர்தல் காளைக்குக் கடனே" என்ற பாடலும் ஆடவர் களிறோடு போர் செய்வதைக் கடமையாகக் கொண்டதைக் காட்டுகிறது. கி.பி. 8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு சிவமாரவர்மன் ஆட்சியில் நாட்டப்பட்ட நடுகல் பற்றிக் கூறுகிறது.

இவை போன்றே எருதுபொருதார்கல் (ஏறுதழுவுதலில் இறந்தவர்க்கு எடுக்கப்பட்ட கல்) ஊர்காத்தான் கல், கடலுள் மாய்ந்தோர் கல் (கடற்போரில் இறந்தவர்) பெண் மீட்டான் கல் என பல்வேறு நடுகற்கள் எடுக்கப்பட்டுள்ளன. ஆனால் அவை கி.பி. 7 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவையாக தொல்லியல் அறிஞர்கள் கூறுவதால் இவை விளக்கப்படவில்லை.

## 7. நடுகற்களில் எழுத்துக்கள்

தமிழ்நாட்டில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டன என்றாலும் நடுகற்களில் எழுத்துக்களால் எழுதுகின்ற வழக்கம். கி.பி.4, 5ஆம் நூற்றாண்டுகளிலேயே உள்ளன. நடுகற்களில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களில் காலத்தால் முற்பட்டது இருளப்பட்டி நடுகல்லே ஆகும். கி.பி.5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்திலேயே இது எழுதப்பட்டுள்ளது. கி.பி.6 ஆம் நூற்றாண்டிலிருந்தே எழுத்தால் எழுதப்பட்ட நடுகற்கள் கிடைக்கின்றன.

பல்லவர் காலத்தில் இருந்த எழுத்து தமிழ் எழுத்து. அவர்களின் ஆவணங்களும் தமிழிலேயே அமைந்துள்ளன. பல்லவர் காலத்துக்கு முன்பே வட்டெழுத்து நடுகற்கள் கிடைக்கின்றன.

செங்கம் தருமபுரி பகுதிகளில் சங்ககாலத்தில் வணிகம் சிறந்திருந்தது. சங்க காலத்தில் பல பெருவழிகள் இவற்றின் வழியாகவே மொழிபெயர்த்

தேயங்களுக்குச் சென்றடைந்தாலும் வணிகர்கள் வணிக நகரங்களிலே தங்கி வாணிகம் செய்துள்ளனர். செங்கம் பகுதியில் 'நியமம்' என்பது வணிக சங்கத்தையும் வணிக நகரங்களையுமே குறித்தது (மலைபடுகடாம்) போளுவாம்பட்டி, அம்மாங்கோயில்பட்டி, அறச்சலூர் பேன்ற இடங்களில் கிடைத்திருக்கும் கல்வெட்டுகளும் பானை பொறிப்புகளும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்துக்களால் ஆனவை என்பதையும் கி.பி. 6ஆம் நூற்றாண்டு முதல் 11 ஆம் நூற்றாண்டு வரையிலான நடுகற்கள் வணிகர்களைக் குறிப்பிட்டிருப்பதாலும் வணிகர்களே வட்டெழுத்துக்களை அறிமுகப்படுத்தியிருக்க வேண்டும் என்று இரா. பூங்குன்றன் கருதுகிறார்.

தகடூர், திருவண்ணாமலை, செங்கம், அரூர், ஊத்தங்கரை, கிருட்டிணகிரி, ஓசூர் பகுதிகளில் சங்ககால அரசமரபினர்களான அதியர், நன்னன், மலையமான் போன்றோர் வாழ்ந்தனர். என்றாலும் அங்கு கிடைத்துள்ள நடுகற்கள் சங்ககால அரசமரபினர்களின் பெயர்களில் அமையவில்லை. பல்லவர், கங்கர், பாணர் போன்றோர் பெயருடன் அமைந்த நடுகற்களே உள்ளன. இவ்வெழுத்துக்கள் வட்டெழுத்தில் வெட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

பல்லவர், சோழர் ஆட்சிக்காலங்களில் மட்டும் ஆநிரை கவர்தலில் ஈடுபட்டு உயிர் நீத்தோரின் 82 நடுகற்களை கே. ராஜன் பட்டியலிடுகிறார்." (சோ. கிருஷ்ணராஜா, 2007, ப.8)

## 7.1 நடுகல் குறித்து ஆகமங்கள் தரும் செய்திகள்

நடுகற்கள் அமைய வேண்டிய இடங்களைக் குறித்தும் அதன் பயன் குறித்தும் ஆகமங்கள் கூறுகின்றன.

காமிகாகமம், ரௌரவாகமம், காரணாகமம், பேககஜாகமம், சுக்ரேபேதாகமம், சுக்ஷமாகமம் போன்ற ஆகமங்கள் இறந்துபோனவர்களுக்கு எழுப்பப்படும் நினைவுச்சின்னங்கள் குறித்துப் பேசுகின்றன. அவை 'சமாதி லிங்கஸ்தம்பம்' என்று சுட்டப்படுகின்றது. (இரா. பூங்குன்றன், 2001, பக்.17-18)

கோயில் அருகிலும் ஆற்றங்கரையிலும் கடற்கரையிலும் காடுகளிலும் மலையடிவாரத்திலும் நினைவுச் சின்னங்கள் உருவாக்கப்பட வேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. அத்தகு நினைவுச் சின்னங்களை எழுப்புவதால்

கட்டுபவனுக்கு இவ்வுலகில் பலன் கிடைக்கும்; இறந்தவனுக்கு அதன்பின் பிறவி ஆறுதல் கிடைக்கும் என்ற நம்பிக்கை இருந்து வந்துள்ளது. (மேலது)

நினைவுச் சின்னங்கள் தெற்கு நோக்கி அமைந்திருக்கும். அவை லிங்க வடிவிலோ, உருவ வடிவிலோ அமைந்திருக்கும்.

ஆகமங்கள் கூறும் நினைவுக்கல் செய்திகள் அனைத்தும் உயர்ந்தோர் வழக்குப் பற்றியதாகும். உயர்ந்தோர் வழக்குப் பற்றியதாயினும் மக்கள் வழக்கிலிருந்த செய்திகளை எடுத்துக் கொண்டு தன்வயப்படுத்தி விதிகளை வகுத்த பெருமை ஆகமத்திற்கே உரியது. ஆகமத்தில் வரும் நினைவுத்தூண் பற்றிய விதிகளின் அடிப்படைக் கூறுகள் நடுகல் மரபிலிருந்து பெறப்பட்டவை என்று கருதலாம். (இரா. பூங்குன்றன், 2001, ப.18)

நடுகற்களின் வடிவமைப்பைப் பார்க்கும்போது லிங்க வடிவில் அமைந்திருப்பதையும் அதில் இறந்தவரின் உருவமும் பொறிக்கப் பட்டிருப்பதையும் கொண்டு இதனை தெளிவுபடுத்திக் கொள்ளலாம்.

## 8. சங்க மருவிய காலம்

சங்க மருவிய காலத்தில் பெண்டிற்கு நடுகற்கள் எடுத்து வழிபட்ட செய்தியைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. கண்ணகிக்குக் கல் எடுத்து வழிபட்ட செய்தியால் இது உறுதியாகிறது.

ஆந்திரா, கேரளா, கர்நாடகா ஆகிய மாநிலங்களில் இச் 'சதிக்கற்கள்' நிறைய கிடைக்கின்றன.

சங்கம் மருவிய காலத்தில் கண்ணகிக்கு நடுகல் எடுக்கப்பட்டது. புதிதாக எழுந்த நிகழ்வாக இருக்க வாய்ப்பில்லை. சங்க காலத்திலேயே கணவனுடன் உயிர்துறந்த பெண்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டிருக்கலாம். 'மூதின் முல்லை' துறை இதனை உறுதிப்படுத்துவதாக உள்ளது. (புறம். 279, 288, 306, 308, 312, 326, 330-335, 344)

## 8.1 சதிக்கற்களின் அமைப்பு

வீரர்களின் உருவத்தோடு மகளிரின் உருவங்களும் பொறிக்கப்பட்ட நடுகற்கள் பிற்காலத்தில் கிடைத்துள்ளன.

| | |
|---|---|
| நடுபட்டி வீரக்கல் | 1952/ 21 |
| கெங்காவரம் வீரக்கல் | 1973/ 84 |
| கீழானுார்க்காடு வீரக்கல் | 1974/ 65 |

கற்கள் வைக்கப்பட்டதைப் போன்றே கணவனுடன் தீயில் பாய்ந்து உயிர்த்துறந்த பெண்களுக்குக் கொங்கு நாட்டில் கோயில்களே உள்ளன. அவை, 'வீரமாத்தி' கோயில்கள் எனப்படுகின்றன. 'வீரமாபத்தினி' என்பதே 'வீரமாத்தி' என்று மருவி வழங்கப்படுகிறது. 'தீப்பந்தங்கோவில்' என்றும் வழங்கப்படுகிறது.

## 8.2 தீப்பாஞ்சகாணி

போரில் இறந்த வீரர்க்குத் தானமாக நிலங்கள் வழங்கப்பட்டதைப் போல, தீப்பாய்ந்து உயிர்விட்ட மங்கையர் கோவில்களுக்கு விடப்பட்ட நிலங்கள் 'தீப்பாஞ்சகாணி' எனப்பட்டன. (பேட்டி. இரா. பூங்குன்றன், கோவை 13.1.1984).

## 8.3 வீரதுக்க கானம்

ஆநிரைப் போரில் வெட்சியார் (குறிஞ்சி நிலத்தார்) கவர்ந்து சென்ற ஆநிரைகளை மீட்கும் பொருட்டு, வாளால் வெட்டுண்டு இறந்தார்க்கு நிலங்கள் வழங்கப்பட்டன. அதன்பின் நடுகல் வைக்கப்பட்டது

> வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தலென்று
> இருவகைப்பட்ட பிள்ளை நிலையும்
> வாள்மலைந்து எழுந்தோனை மகிழ்ந்துபறை தூங்க
> நாடவற்கு அருளிய பிள்ளை யாட்டும் (தொல்.பொருள்.63)

என்ற நூற்பா, போரில் இறந்தவர். குடும்பங்களுக்கு வீரதுக்ககானம் வழங்கப்பட்டதை ஆவணப்படுத்தியுள்ளது.

நடுகற்களில் மாண்ட வீரனுக்கு நிலம் வழங்கப்பட்ட செய்தி கி.பி. 910 ஆம் நூற்றாண்டிலிருந்தே சுட்டப்படுகின்றதாகக் கேசவராஜ் தெரிவிக்கின்றார். இரண்டாம் நந்திவர்மப் பல்லவனின் பில்லூர் செப்பேட்டில் 'வீரதுக்க கானம்' என்றொரு வரி கூறப்படுகிறது. செங்கம் பகுதியில் கிடைத்துள்ள இச்செப்பேடு

தவிர வேறெங்கும் இச்சொல்வழக்கு இல்லை. ஆதலால் இதனை நடுகல் பகுதியில் (செங்கம்) வாங்கப்பட்ட ஒருவகை வரி என்றும் மாடுபிடி சண்டையில் இறந்தவர் குடும்பத்திற்கு வாங்கப்பட்ட வரியாக இருக்கலாம்" என்றும் கருதலாம். (இரா. பூங்குன்றன், 2003, ப.24)

## 8.4 நெய்த்தோர் பட்டி

ஆநிரைப் போரில் இறந்துபட்ட வீரர்களுக்கு அளிக்கப்பட்ட நிலங்கள் 'நெய்த்தோர் பட்டி' என்றழைக்கப்படுகின்றன. 'நெய்த்தோர்' என்பதற்கு இரத்தம் என்று பொருள்கொண்டு இரத்தம் சிந்துவதற்காகத் தரப்படும் நிலம் என்று பொருள் கொள்ளப்படுகிறது. 'நெய்த்தோர்' இரத்தம் (யாழ்ப்பாண அகராதி, 2004, தமிழ்ப்பேரகராதி, 1982, ப.2341) என்றே அகராதிகள் பொருள் கூறுகின்றன. அகநானூறு உள்ளிட்ட இலக்கியங்களில் இச்சொல்லாட்சி பயின்று வந்துள்ளது.

> நெய்த்தோர் மீமிசை நிணத்தின் பரிக்கும்
> அத்தம் நண்ணிய அம்குடிச் சீறூர் (அகம்.9:9-10)

தெலுங்கிலும் 'நெத்ரு' என்பதற்கு இரத்தம் என்றே பொருள். 'நெய்த்தோர்' என்பதற்குப் போரில் இரத்தம் சிந்தி 'மாண்டவர்' என்ற பொருள்படும். போரில் இறந்த வீரருக்குத் தானமாக அளிக்கப்பட்ட இடம் என்பது பொருத்தமுடையதாக இருக்கும். இதனை 'கல்நாடு' என்றும் கூறுகின்றனர். (இரா. நாகசாமி, 1980, பக். 13) நாடு என்பது வேளாண்மை நிலம் என்ற பொருளிலேயே வழங்கப்பட்டது. வள்ளுவர் கூறும் 'நாடு' வேளாண் நிலத்தையே குறிக்கின்றது.

போரிலே வீரன் இறந்தபின் அவன் குடியும் குலமும் வாழ்வதற்கு வேளாண் நிலங்கள் வழங்கப்பட்டுள்ளன. இங்ஙனம் பெற்ற நிலங்களையுடையவர் காலப்போக்கில் உடைமையாளர்களாக மாறினர். கர்நாடக மாநிலத்தில் தானங்களைக் குறிக்க, நெத்தரு பட்டா, நெத்தரு கொடுகே, நெத்தரு கொடகி என்று வழங்கப்படுகின்றன. ஆந்திர மாநிலத்தில் நெத்தரு படிமான்யா என்றும் பரிகாரம் என்றும் வழங்கப்படுகின்றன.

இவை தவிர, கல்நாடு, பாள்கழ்ச்சு என்ற சொற்கள் குறிக்கப்பட்டுள்ளன. கர்நாடக, ஆந்திர மாநிலங்களில் உள்ள வீரகற்களில் இச்சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தமிழர்களின் ஈமச் சடங்குகள், அடக்கம் செய்யும் முறைகள் குறித்து மணிமேகலையிலும் பெருங்கதையிலும் கூறப்பட்டுள்ளது. இதனை,

சுடுவோர் இடுவோர் தொடுகுழிப் படுப்போர்
தாழ்வயின் அடைப்போர் தாழியில் கவிப்போர்
(மணிமேகலை.6.66.67)

நடுகல் உழவை ஆளிடு பதுக்கை
அரில்பிணங்கு அடுக்கம் தாள் இடுகுழி (பெருங்கதை 1.52:28)

என்ற சான்றுகள் உறுதிபடுத்துகின்றன.

## 8.5 நடுகல்லின் எச்சம்

சங்க காலத்தே தோன்றிய இந்நடுகல் வழிபாடு இன்றுவரையிலும் தொடர்கினற்து. நடுகற்கள் என்ற பெயரில் இல்லை. ஆனால் சமாதி, கல்லறை, சதுக்கம், நினைவிடம் போன்ற பெயர்களால் வழங்கப்படுகின்றன.

சங்க காலத்தில் இறந்துபோன அரசர்களுக்கு நடுகல் வைக்கப்பட்டதைப் போல கோயில்கள் கட்டுதலும் கோவில்களில் அரசர்களின் உருவச்சிலைகளை நிறுவி அவற்றுக்குப் பூசை வழிபாடு செய்தலும் சோழர் காலத்தில் வழக்கில் இருந்தன. அரசர்களுக்கு எடுக்கப்பட்ட 'நெடுநிலைக் கோட்டங்கள்' பற்றி மணிமேகலை கூறுகின்றது.

சோழப் பேரரசை ஏற்படுத்திய ஆதித்தசோழனுக்குக் காளத்தியை அடுத்த தொண்டை மாநாடு என்ற இடத்தில் அவன் மகனான முதல் பராந்தகன் ஆதிச்தேச்சுரம் என்ற கோயிலைக் கட்டினான். முதல் இராசராசன் மேற்பாடியில் அரிஞ்சின ஈச்வரம் என்ற கோயிலை அரிஞ்சயன் நினைவாக எடுப்பித்தான். முதலாம் இராஜேந்திரன் பஞ்சவன் மாதேவீச்சரம் என்ற கோயிலைப்பஞ்சவன் மாதேவியின் நினைவாகக் கட்டினான். இத்தகு

கோயில்கள் பள்ளிப்படைக் கோயில்கள் எனப்பட்டன. *(மா. இராசமாணிக்கனார், 2008, ப.77)*

சங்க காலத்திற்குப் பிறகு 'பள்ளிப்படை கோயில்கள்' (அரசர்களுக்கானவை) என்றே வழங்கப்பட்டன. சங்க காலத்தே இருந்த நடுகற்கள் முதலில் தூண்களாகவே நடப்பட்டன. அதன்பின் அவற்றில் ஓவியங்கள் வரையப்பட்டன. அதன் பின் வளைந்த பலகை போன்று நிறுவப்பட்டன. அவற்றில் இறந்தவரின் உருவம், செயல்கள் எழுதப்பட்டன.

இன்றைய அடக்க முறைகளில் எரியூட்டல், புதைத்தல் வழக்கங்கள் உள்ளன. தாழிகளிலிடும் வழக்கம் மறைந்துள்ளது. குழியில் புதைத்து மூடியபின் அதன்மேல் பால்செடி என்ற செடி நடப்படுகிறது. கிராமப்புறங்களிலுள்ள சுடுகாடுகளில் நினைவிடம் எழுப்ப வசதி இல்லாதவர்கள் இம்முறையைப் பின்பற்றுகின்றனர். இறந்தவர் ஆன்மா அச்செடியில் உயிர்ப்பதாக நம்பப்படுகிறது.

மேலும் இறந்தவரைப் புதைத்த இடத்தில் கல்லறை கட்டும் அமைப்பும் பண்டைய நடுகல் அமைப்பிலேயும் கோபுர வடிவிலேயும் கூம்பு வடிவிலேயும் அமைக்கப்படுகிறது. தலைமேட்டில் இருக்கும் வளைய பகுதியிலேயே அவருடைய தோற்றம், மறைவு, பெயர் போன்றவை கற்களில் பொறிக்கப்படுகின்றன.

பழந்தமிழர் வாழ்வில் நடுகல் வழிபாடு மிகவும் முக்கியத்துவம் பெறுகிறது. நடுகல்லின் அமைப்பே பின்னர் தோன்றிய 'கோயில்' என்ற கட்டிட அமைப்பிற்கு முன்னோடியாக, முன்மாதிரியாக அமைந்துள்ளது. நடுகற்கள் பெரும்பாலும் மரங்களின் அருகிலேயோ, நீர்நிலைகளின் அருகிலேயோ, சந்திகளிலேயோ, ஊர் எல்லைகளிலேயோதான் அமைந்துள்ளன. மேலும் நடுகற்கள்மேல் வெயில்படாதிருக்க, துணிப்பந்தல் அமைப்பர். விலங்கு முதலியவற்றால் ஊறு ஏற்படாமலிருக்க, சுற்றிலும், வில், வேல், வாள், கேடயத்தை ஊன்றுவர் நடுகல்லில் தங்கியுள்ள பல்லியிடம் சகுனம் கேட்பர்" *(செ. இராசு. 2007, ப.60)*

இந்த அடிப்படை நடைமுறையை நோக்கும் போது மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற முறையில் அமைக்கப்படுகின்ற கோயில்களுக்கு வித்தாக

அமைந்தது நடுகல் வழிபாடே எனலாம். கோவில்களில் தலவிருட்சங்கள் சிறப்பாக வழிபடப்படுவதும் கோவில்களில் தெய்வங்களுக்குப் பீடம் அமைத்து தெய்வங்களின் உருவங்களைச் செதுக்கி வைத்து வழிபாடு செய்வதும் நடுகல்லில் வீரனின் பீடும் பெயரும் எழுதி வணங்கியது போல தெய்வங்களின் பெருமைகள், செயல்கள், தெய்வங்களைக் குறித்த கதைகள் போன்றவற்றைக் கோயில்களில் ஓவியங்களாகவும் சிற்பங்களாகவும் வரைந்து செதுக்கப்படுவதும் நடுகல் வழிபாட்டின் வளர்ச்சியே ஆகும்.

## 9. உலக நாடுகளில் நடுகற்கள்

உலகம் முழுவதிலும் உள்ள பழங்குடிகளின் வரலாறுகளைச் சமுகவியலோடும் மானுடவியலோடும் ஆராய்கின்ற அறிஞர்கள் உலகம் முழுவதிலுமே நடுகல்வழிபாடு அல்லது நினைவுச் சின்னங்கள் இருப்பதைக் கண்டுபிடித்துள்ளனர். பிரேசர் (J.G. Frazer) என்ற சமூக மானிடவியல் ஆய்வாளர் இறந்தவனது ஆன்மாவை சில சடங்குகள் மூலம் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வரவைக்கலாம். அங்குள்ள ஒரு பொருளில் நுழைந்துகொள்ளச் செய்யலாம் என்ற நம்பிக்கையை உலகமெங்கும் பண்டைய மக்களின் பண்பாட்டில் காணப்படுகிறது." எனச் சுட்டுவார். (நா. வானமாலை, ப.10)

### அ. கிரேக்கம்

'எலிஸியம்' என்பது இறந்த வீரர் புகும் சொர்க்கம் எனவும் அது இவ்வுலகிலேயே உள்ளது என்றும் பண்டையக் கிரேக்கர்கள் நம்பினர். ஜெர்மன், ரோம், சீனா, எகிப்து போன்ற நாடுகளிலும் இத்தகு நம்பிக்கைகள் உள்ளன.

### ஆ. எகிப்து

எகிப்திலும் இறந்தோர்க்கு நினைவுச் சின்னம் அமைக்கும் வழக்கம் இருந்துள்ளது. அவ்வாறு எடுக்கப்பட்ட நினைவுச் சின்னங்களே 'பிரமிடுகள்' என்படுகின்றன. இறந்தவர்களுக்கு வாழ்வுண்டு என்று சமாதிகள் எழுப்பி, பொன் , பொருளுடன் புதைப்பது அவர்களுடைய வழக்கம்.

எகிப்தில் கூபூ மன்னனுக்காக கட்டப்பட்ட பிரமிடுதான் உலகின் மிகப்பெரிய பிரமிடு ஆகும் . இது 756 அடி அகல பக்கங்களும் 450 அடி உயரமும் கொண்டது. அளவிட முடியாத பொன், பொருள்கள் உள்ளே

இருந்தாலும் உள்ளே செல்பவர் திரும்பி வரமுடியாதபடி நுட்பத்துடன் அமைக்கப்பட்டுள்ளது இதன் சிறப்பு.

மேலும் எகிப்திலுள்ள லக்சர், கர்னாக் ஆமான் ஆலயங்கள் பல சிறப்புகளுடையது. இக்கோயில்கள் நைல் நதிக் கரையில் அமைந்து உள்ளன. இக்கோயில்களை 140 பிரமாண்ட தூண்கள் தாங்கி நிற்கின்றன. 10 ஆம் நூற்றாண்டு முதல் 12 ஆம் நூற்றாண்டு வரை கட்டுமானப்பணி நடந்துள்ளது. இக்கோயிலுக்குள் இக்கோயிலைக் கட்டிய 3 மன்னர்களின் சமாதிகள் இருக்கின்றன. இப்பிரமிடுகளில் முதலைகள், பூனைகள், பல்லிகள் போன்வறற்றின் உடல்கள் பதிக்கப்பட்டுள்ளன.

இப்பிரமிடுகள் உலக அதிசயங்களில் ஒன்றாகக் கருதப்படுவது சிறப்புக்குரியது. கி.மு. 2700 முதல் கி.மு. 2300 வரையுள்ள காலப் பகுதியில் இவை சிறப்பாக அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது.

### இ. பிரிட்டன்

பிரிட்டனில் உள்ள வில்ட்ஷயர் பகுதியில் உள்ள இத்தகு கற்கள் ஸ்டோன் ஹென்ஜ் (Stone Hange) எனப்படுகின்றன. இக்கற்களுக்குக் கீழே எழும்புக்கூடுகள் உள்ளன. இவை கி.மு.3000 இல் இருந்தே இங்குள்ளன. ஒவ்வோர் கல்லும் டன் கணக்கில் எடையுடையவை. இந்தக் கற்கள் ஒரு வட்டத்தை உருவாக்குகின்றன. சுமைதாங்கி கற்களைப் போல இவை அமைந்துள்ளன. (செய்தி, சீக்ரெட் விகடன் 30.09.2009)

### ஈ. ஆஸ்திரேலியா

ஆஸ்திரேலியப் பழங்குடிகளிடையேயும் 'கற்காண்டல்' என்ற நிகழ்ச்சி சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. மலை, பாறை, மரம், செடி, கொடி ஆகியவற்றில் தங்கள் குலத்தினர் ஆவிகள் தங்கியிருப்பதாகக் கருதுவதால் அந்த நம்பிக்கையின் அடிப்படையில் கல்வழிபாடு தோன்றியது என்று அறிஞர் கூறுவர். மேலும் தொல்காப்பியர் நடுகல் வழிபாட்டிற்கு வேண்டியதாகக் கூறும் சடங்குகள் காட்சி, கால்கோள், நீர்படை போன்றவற்றையும் அதனோடு ஒத்துள்ளதாக இரா. பூங்குன்றன் மேற்கோள் காட்டுகிறார். (பக். 1516)

சில நடுகற்களில் வீரன் நிற்குமிடத்தில் தோரணங்களும் திரைச் சீலைகளும் காட்டப்பட்டிருக்கிறது. இது சங்க இலக்கிய வருணனையை நினைவுப்படுத்துகிறது. இச்சடங்குகளைச் செய்வதால் மழை வருமென்று நம்புகின்றனர். (இரா. பூங்குன்றன், 2001, ப.16,)

## உ. ஈழத்தில் நடுகல் வழிபாடு

கடல்கொண்ட தமிழகத்தில் எஞ்சியப் பகுதியாகக் கருதப்படும் ஈழத்திலும் நடுகல் வழிபாடு தொன்றுதொட்டே இருந்து வருகிறது. தமிழகத்தில் பாண்டிய மன்னர்கள் சங்கம் வைத்துத் தமிழை வளர்த்ததைப் போலவே ஈழமன்னர்களும் ஈழத்தில் தமிழ்ச் சங்கத்தை நிறுவியுள்ளனர்.

நடுகல் வழிபாட்டு முறையிலும் வேறுபட்ட நிலையினை இங்கு காணமுடிகிறது. வீரம் போற்றப்பட்ட நிலையிலே நடுகல் வழிபாடு இங்குத் தோற்றம் பெற்றுள்ளது. அவருடைய இனத்தார் அல்லது கூட்டத்தார் நடுகல் எடுப்பதே மரபு. ஆனால் ஈழத்தில் தன்னோடு போரிட்டு, போர்க்களத்தில் இறந்துபோன அரசனுக்கு வெற்றிபெற்ற அரசனே தகனகிரியைகள் செய்து நடுகல் வைத்து வழிபட்டான் என்ற புதிய மரபினை ஈழத்து நடுகல் வரலாறு பதிவுசெய்துள்ளது. தமிழகத்தில் போரில் இறந்த வீரர்களின் பிணங்களை வென்ற மன்னன் அல்லது தோற்ற மன்னன் சேகரித்து அடக்கம் செய்ததாகத் தகவல்கள் இல்லை" (ஞா. ஸ்ரீபன், 2010, ப. 59)

எல்லாளன் என்னும் தமிழ்மன்னன் கி.மு. 145 லிருந்து 101 வரையான ஆண்டுகளில் அநுராதபுரத்தில் இருந்து ஈழநாட்டை ஆண்டவன். உருகுணைரட்டைப் பகுதியை ஆண்ட (ஈழத்தின் தென்பால் உள்ள பகுதி) கைமுனு என்ற அரசனுக்கும் எல்லாளனுக்கும் நடந்த போரில் எள்ளாளன் இறந்துபட கைமுனு எல்லாளன் இறந்த இடத்திலேயே அவனுக்குச் செய்யவேண்டிய தகனக் காரியங்களைச் செய்து, நினைவுச் சின்னம் எழுப்பினான் என்றும் அதற்கு வழிபாடு செய்யும்படி கட்டளையிட்டான் என்றும் மஹாவம்சம் (அத்தியாயம் 25, பத்தி. 73-74) கூறுகிறது. இன்றும் அவ்வழிசெல்வோர் அதற்கு வழிபாடு செய்வதாக இலங்கை சரித்திரம்" என்ற நூலில் (ப.41) அதன் ஆசிரியரான ஜி. ஸி. மெண்டிஸ் குறிப்பிட்டுள்ளார். வரலாற்றின் படி ஈழத்தில் அமைந்த முதல் நடுகல் வழிபாடு இதுவே எனலாம்" (க.இ.க. கந்தசாமி, பக். 258-259)

## ஊ. ஈழத்தில் கண்ணகிக்கு நடுகல்

இனம் சார்ந்த, ஊரைச் சார்ந்த, நாட்டைச் சார்ந்தவர்க்கு நடுகல் எழுப்பும் மரபு எங்குமிருக்க, தமிழ் நாட்டின் குடிமகளாக இருந்து தன் கற்புத் திறத்தால் தெய்வமாக்கப்பட்ட கண்ணகிக்கு ஈழநாட்டில் நடுகல் எடுத்து வழிபட்டு வருவது மற்றொரு புதிய மரபாக உள்ளது.

இலங்கை மன்னன் கயவாகு, கண்ணகியின் நடுகல் விழாவில் கலந்து கொண்டான் என்ற செய்தியைச் சிலப்பதிகாரம் வரந்தருகாதை குறிப்பிடுகின்றது.

சேரன்செங்குட்டுவன் திருச்செங்குன்றத்தின் மலைவளம் காணச் சென்றபோது, அக்குன்றக் குறவர்களால் கண்ணகியின் கற்பு மேம்பாட்டை அறிந்து அவளுக்கு இமையத்திலிருந்து கல்கொணர்ந்து கங்கை, காவிரி ஆறுகளில் நீர்படை செய்து நடுகல் நட்டு வழிபட்டதைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. (காட்சிக் காதை, கால்கோள் காதை, நீர்படைக் காதை, வாழ்த்துக் காதை)

ஆனால் விழாவில் கலந்துகொண்ட ஈழ வேந்தன் கயவாகு தன் நாட்டிற்குச் சென்று (கி.பி. 174 லிருந்து 190) கோயிலமைத்து வழிபட்டுள்ளான் அவனைப் பற்றி ஏனைய அரசர்களும் கண்ணகி வழிபாட்டை மேற்கொண்டனர். கண்டி அரசர்கள் கண்டி மாநகரில் கண்ணகிக்குக் கோயிலமைத்து வழிபட்டனர். கயவாகு மன்னனைப் பின்பற்றி ஆண்டு தோறும் ஆடித்திங்களில் நடைபெறும் 'பெரகரா' என்னும் விழாவில் கண்ணகி வழிபாடு இடம்பெற்றுள்ளது." (க.இ.க. கந்தசாமி, ப. 259)

இலங்கையில் உள்ள இந்துக்கள் கண்ணகியை அம்மனாகவே கருதி கண்ணகி அம்மன் என்று வழிபடுகின்றனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

கண்ணகியம்மனை வழிபட்டால் நோய்கள் நீங்கும் என்றும் மழை பெய்யும் என்றும் அவர்கள் நம்புகின்றனர். ஈழநாட்டில் உள்ள இரண்டாம் நடுகல்லாக இது கருதப்படுகிறது.

## 9.1 தென்னிந்தியாவில் நடுகல்

இந்தியாவில் தமிழகம் மட்டுமன்றி, ஆந்திரா, கேரளா, கர்நாடகம் போன்ற மாநிலங்களிலும் நடுகல் வழிபாடு இருந்துள்ளது. இன்றும் இருந்து வருகிறது. இது குறித்து ஆய்வு செய்துள்ள வெ. கேசவராஜ் 'தென்னிந்திய நடுகற்கள்' என்ற நூலில் விரிவாக பேசுகிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

தொல்லியல் வாழ்விடம் அல்லது ஈமச்சின்னம் வெளிப்படுத்தும் தன்மைக்கேற்ப ஒவ்வோரிடத்திலும் ஒவ்வோர் பெயரில் வழங்கப்படுகின்றது. புதுக்கோட்டைப் பகுதியில் 'குரங்குப் பட்டடை' என்று வழங்கப்படுகின்றது. குரக்குப்படை' என்பதன் திரிபு 'குரங்குப் பட்டை' என்பது. குரங்கு என்றால் மண்ணைத் தோண்டுதல், காழ்தல் என்று பொருள் உள்ளது" (நா. கதிரை வேற்பிள்ளை, தமிழ் மொழி அகராதி, ரசியன் எஜிகேஷன்ஸ் சர்வஸ்), படுக்கை என்பதிலிருந்து வந்ததே படை. படை என்பதன் திரிபே 'படு' என்பதாகும்.

சோழமன்னர்களுக்கு 'பள்ளிப்படை' எடுக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழகத்தின் வடபகுதியில் இவை 'பாண்டவர் பூமி' பாண்டவர் குட்டை, பாண்டவர் வீடு என பாண்டவர்களுடன் தொடர்புபடுத்தப் படுகிறது. மாண்டவர் பூமி என்பதே பாண்டவர் பூமி என திரிந்துள்ளது. வடஆர்க்காடு மாவட்டத்தில் சில இடங்களில் 'வாலியர் இருப்பு' என்றும் 'வாலியர் வீடு' என்றும் வழங்கப்படுகிறது. இவை இப்பகுதியில் இராமாயணக் கதையோடு தொடர்புபடுத்தப்படுகிறது. தென்ஆர்க்காடு, தஞ்சாவூர் பகுதிகளில் 'தாழி' வகையைச் சேர்ந்த பெருங்கற்கால சின்னங்களை 'மதமதக்காசால்' எனப்படுகிறது. இது முதுமக்கள் தாழி என்பதன் திரிபாகும். தருமபுரி மாவட்டத்தில் செத்தகுட்டை எனப்படுகிறது. இறந்தவர்களைப் புதைத்த இடம் என்று இதற்குப் பொருள். கல்வட்டங்களுக்கு அருகிலுள்ள குன்றுகளுக்கும் இப்பெயர் உள்ளது. இவற்றுடன் நரிவங்கு. நரிவீடு, 'லம்பாடி இருப்பு' எடுத்துவச்சான் கல் போன்ற பெயர்களும் உள்ளன." (தி. சுப்பிரமணியன், 2009, பக்.6263)

கர்நாடகத்திலும் தருமபுரி மாவட்டத்திலும் இதற்கு 'மொரியர் மனா' என்று பெயர். கன்னடத்தில் 'மனே என்பது வீடு என்றும் மொரியர் என்பது வடநாட்டவர் என்றும் பொருள்படும். ஆந்திர மாநிலத்தை ஒட்டிய பகுதிகளில்

இவை, இராச்சா கொலு' என்றும் 'கோலி என்றும் வழங்கப்படுகின்றன. இதற்கு அரக்கர்கள் எனப்படும் இராச்சர்களின் மயான இடம்' என்று பொருள் கூறப்படுகின்றது. (K. Rajan, Archaeological Gazatteer of Tamilnadu, 1997, பக்.221.)

அதைப் போலவே 'கற்கிடை' என்ற சொல் பற்றி கே.வி. சுப்பிரமணிய அய்யர், 'வெள்ளாளர் அல்லது பறையர்களின் சுடுகாடு என்று கூறுகிறார். (Historical sketches of ancient decan, 1967, p.259)

இக்கருத்து ஏற்றுக்கொள்கை கூடியதாய் உள்ளது. எனெனில் இன்று பறையர் உள்ளிட்ட பல இனத்தவரும் கிறித்துவர்களும் இறந்தவர்களைப் புதைத்த அல்லது எரித்த இடங்களில் இறந்தவர்களைப் பற்றிய குறிப்புகளோடு எழுதிவைத்து வழங்கும் நினைவிடங்கள் 'கல்லறைகள்' என்றே அழைக்கப்படுகின்றன. கற்கிடை என்பதே 'கல்லறை எனத் திரிந்திருக்க வேண்டும். 'கற்கிடை' என்ற சொல் இராஜராஜ சோழன் கல்வெட்டில் ஊர்ப்பகுதிகளைப் பற்றிக் குறிப்பிடும்போது வருகின்றது.

கி.பி. 1848 இல் டெய்லர் (Taylor) பெருங்கற்கால சின்னங்களுக்கு 'குத்துக்கல் வட்டம்' என முதன்முதலில் பெயரிட்டார். குத்துக்கல் என்ற பெயர் உயரமான கல்வட்டங்களுக்கும் கல்வரிசைகளுக்கும் தொடக்க காலத்தில் இடப்பட்ட பெயராகும். ஆந்திராவில் குத்துக்கல் கண்டுபிடிக்கப்பட்ட பிறகுதான் தமிழகத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. கல்வட்டங்களில் உள்ள கற்களில் சில உயரமாகவும் சில குட்டையாகவும் உள்ளதால் இப்பெயர் பொருத்தமுடையதாக இல்லை என்பது தொல்லியல் அறிஞர் கருத்து. ஆயினும் குத்துக்கல் என்ற சொல் வழக்கு இன்றும் தமிழக கிராமப்புற மக்களிடையே உள்ளது. பலமுறை சொல்லியும் எந்தவித உணர்வுமின்றி அசையாது இருப்பவரைக் கடிந்து கூறும்போது, குத்துக்கல் மாதிரி நிற்பதைப் பார், என்று கூறப்படுகிறது. தருமபுரி மாவட்டம் கிருஷ்ணகிரி மாவட்டம், சின்னக்கொத்தூர் கிராமத்தில் தமிழக வரலாற்றுத் தந்தை ராபர்ட் புரூஸ்புட் என்ற புவியில் அறிஞர் மேட்டுப் பள்ளம் என்ற இடத்தில் மலைகளின் மீதுள்ள பைரகான் ஏரியில் 1882 ல் குத்துக்கல் ஒன்றைக் கண்டுபிடித்தார். இது 7 அடி உயரம் நுனிப்பகுதி 1½ அடியிலிருந்து கீழ் நோக்கி 3 அடியாக உள்ளது. (தினகரன் வெள்ளிமலர், 30.7.2010, ப.22)

## 9.2 திறந்தவெளிக் கல்லறைகள்

இறந்தோர்க்காக எடுக்கப்படும் நடுகற்கள், நினைவுச் சின்னங்களைப் போலவே கல்லறைகள் அமைக்கும் வழக்கமும் இருந்துள்ளது. அவற்றை அமைக்கும் முறைகளிலும் வடிவங்களிலும் காலந்தோறும் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

கிருஷ்ணகிரி தேனி நெடுஞ்சாலையில் சாமல்பள்ளத்திலிருந்து பிரிந்து 3 கி.மீ. தூரம் உள்ளே சென்றால் மல்லசத்திரம் என்ற கிராமம் உள்ளது. அக்கிராமத்தை ஒட்டி மோரல், முரசு என்கின்ற இரண்டு மலைகள் அருகருகே உள்ளன. அம்மலைகளின் மீது நூற்றுக்கணக்கான சிறியதும் பெரியதுமான 'திறந்தவெளிக் கல்லறைகள்' உள்ளன.

கல்லறையின் சுற்றுவட்டாரத்தில் தாமரை இதழ் வடிவில் செதுக்கிய கனமிக்க பாறைகள் செங்குத்தாக நிறுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு கல்லறையும் 4 புறமும் பாறைகளைச் சுவர்போல அடைத்து உருவாக்கப்பட்டுள்ளன. இதில் உள்ள துளை வழியாக சடலம் உள்ளே தள்ளப்படுகிறது. கல்லறையின் உட்புறத்தே எழுத்துக்கள் ஓவியமாக வரையப்பட்டுள்ளன. முழுவதும் மூடாத நிலையில் துளையிடப்பட்டு இருப்பதால் இவை இன்றும் திறந்தவெளி கல்லறைகள்' என்றழைக்கப்படுகின்றன. (தினகரன், வெள்ளிமலர், 9.4.10)

### தமிழகத்தில் நடுகற்கள் கிடைக்குமிடங்கள்

தமிழகத்தில் வடஆர்க்காடு தருமபுரி, சேலம் பகுதிகளில் அதிக அளவில் கிடைக்கின்றன. பெரியார், கோவை மாவட்டங்களில் ஓரளவும் பாண்டிய நாட்டுப் பகுதிகளில் அருகியும் கிடைக்கின்றன. சோழநாட்டுப் பகுதிகளில் மிகவும் அருகியே கிடைக்கின்றன. குறிப்பாக குறிஞ்சியும் முல்லையும் திரிந்த பாலை நிலங்களிலே கால்நடை வளர்ப்பிற்குப் பயன்படுத்தப்படும் நிலங்களிலேதான் நடுகற்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன. அங்கு ஆநிரை கவர்ந்தோர்க்கும் மீட்டோருக்குமான நடுகற்கள் கிடைக்கின்றன.

### பெருஞ்சோற்று விழா

தெய்வங்களுக்காக எடுக்கப்பட்ட விழாக்களை முந்தைய இயல்களில் கண்டோம். தெய்வமாக ஆக்கப்பட்டு வணங்கப்பட்ட மனிதர்களுக்கும் சங்ககால

மக்கள் விழா எடுத்துள்ளனர். வீரவணக்க விழாவாக இவ்விழா அரசர்களால் கொண்டாடப்பட்டுள்ளது. இல்லங்களிலும் பெருஞ்சோறு அளிக்கப்பட்டது. இது 'பெருவிருந்து' என்று வழங்கப்பட்டுள்ளது. போர் காலங்களில், போர்க்களத்தில் இறந்த வீரர்களின் வீரத்தைப் போற்றும் வண்ணம், இருக்கின்ற வீரர்களுக்கு உணவு வழங்கப்பட்டது. இது 'பெருஞ்சோறு,' 'பிண்டச் சோறு' என்று வழங்கப்பட்டது.

பெருஞ்சோற்று இல்லத்து ஒருங்குஇவண் இராஅன் (அகம்.289)

அரசனின் அரண்மனையிலும் 'பெருஞ்சோற்று விழா' நடைபெற்றுள்ளது. மன்னன் இறந்தபின் அவன் பெருஞ்சோறு வழங்கிய முற்றம் பாழ்பட்டதை ஆலூர் மூலங்கிழார் பதிவு செய்துள்ளார்.

வரையாப் பெருஞ்சோற்று முரிவாய் முற்றம்
வெற்று யாற்று அம்பின் எற்று ? அற்று ஆகக்
கண்டனென் மன்ற; சோர்க என்கண்ணே. (புறம்.261:3-5)

அதியமான் சிறுசோற்று விழா, பெருஞ்சோற்று விழா இரண்டையுமே நிகழ்த்தியுள்ளான். இதனை,

சிறுசோற்றானும் நனிபல் கலத்தன்; மன்னே;
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன்; மன்னே ! (புறம்.235:4-5)

ஔவையார் தம் பாடலில் பதிவு செய்துள்ளார்.

## தொகுப்புரை

வீரத்தைப் போற்றிய தமிழரின் அடையாளமே நடுகல் வழிபாடு. களிறெறிந்துப் பெயர்தல் காளையின் கடமையாக இருந்தது. வீரனைக் காட்டிலும் சிறந்த தெய்வம் வேறில்லை என்று நம்பினர்.

போரில் இறந்தவர்களைத் தாழிகளில் புதைத்தனர். எரியூட்டினர். வன்னிமரக் காடுகளில் நடுகல் வைத்து வழிபட்டனர். நடுகல் வழிபாடு, பொதுவானதாகவும் குலதெய்வமாகவும் வளமைத் தெய்வமாகவும் வழிபடப்பட்டுள்ளது. மதுரைவீரன், முனீஸ்வரன் போன்ற தெய்வங்கள்

அனைவராலும் வழிபடப்பட்டாலும் சிலருக்கு குலத்தெய்வமாக இருப்பது போலவே நடுகல் வழிபாடும் இருந்துள்ளது.

போரில் இறந்தவர், விலங்குகளோடு போரிட்டு இறந்தவர், ஏறு தழுவுதலில் இறந்தவர், நவகண்டம் கொடுத்தவர் என்ற இவ்வகைப் பட்டவர்களுக்கு நடுகல் வைக்கப்பட்டுள்ளதைப் புறநானூறு காட்டுகிறது.

நடுகல் வைப்பதில் தொல்காப்பியர் காலத்தில் சில மரபுகள் பின்பற்றப்பட்டுள்ளன. அவையே பிற்காலத்தில் கோயில் என்ற நிறுவனம் அமையவும் வளரவும் அடித்தளமாக அமைந்தன.

நடுகற்களின் எழுத்துக்கள் வட்டெழுத்துக்களாகவும் பிராமி எழுத்துக்களாகவும் உள்ளன. கி.பி.4, 5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாக உள்ளன. சங்ககால மகளிர் வீரத்தைப் போற்றியவர்கள் என்பது ‘மூதின் முல்லை’ என்ற துறையால் உறுதியாகிறது. சங்கம் மருவிய காலத்தில் கொற்றவைக்கான ‘பரணி நோன்பு’ நோற்றவர்க்கு நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. ஆதலால் மூதின் மகளிர்க்கு நடுகல் வைக்கப்பட்டிருத்தல் வேண்டும். சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்கு நடுகல் வைத்து வழிபட்டான் என்று பதிற்றுப்பத்தும் பெண்களுக்கு நடுகல் வைக்கப்பட்டதை உறுதிபடுத்துகிறது.

சங்க மருவிய காலத்தில் பெண்களுக்கான நடுகற்கள் வைக்கப்பட்டுள்ளன. சோழர் காலத்திலிருந்து கிடைக்கின்றன. ஈழத்தில் பெண் அரசிகளுக்கு நடுகல் வைக்கப்பட்டுள்ளது. கண்ணகி வழிபாடு அம்மன் வழிபாடாக ஏற்றம் பெற்றுள்ளது.

போரில் இறந்த வீரர்களுக்கு நிலங்கள் வழங்கப்பட்டன. அவை ‘நெய்த்தோர் பட்டி’ எனப்பட்டன. அந்நிலங்களுக்கு வரி விதிக்கப்பட்டது. அது ‘வீரதுக்க கானம்’ என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகின்றது.

கணவனோடு தீப்பாய்ந்து உயிர்விட்ட பெண்களின் கோயிலுக்கு விடப்பட்ட நிலங்கள் ‘தீப்பாஞ்சக்காணி’ எனப்பட்டன.

சங்கம் மருவிய காலத்தில் அரசிகளுக்கு எடுக்கப்பட்ட நடுகற்கள் ‘பள்ளிப்படைக் கோயில்கள்’ எனப்பட்டன. தூபிகள், நினைவுச்சின்னங்கள், திறந்தவெளிக் கல்லறைகள், என்றெல்லாம் பிற்காலத்தில் வழங்கப்படுகின்றன.

தமிழகத்தைப் போன்றே கிரேக்கம், பிரிட்டன், எகிப்து, ஆஸ்திரேலியா, ஈழம் போன்ற நாடுகளிலும் நடுகல் வைக்கும் மரபு இருந்துள்ளதை அறியமுடிகிறது.

சங்ககால மக்கள் வாழ்வு இயற்கையோடு ஒன்றிய வாழ்வாக இருந்தது. இனக்குழு வாழ்வாக இருந்தது. இயற்கையையும் அதனுள் நிகழ்ந்த நிகழ்வுகளையும் கண்ட மக்கள் வியந்தும் அஞ்சியும் அவற்றை வழிபட்டனர். அதன் அடிப்படையில் எழுந்த இயற்கை வழிபாடு, திணைப் பாகுபாட்டை அடிப்படையாகக் கொண்டு எழுந்த திணைநிலைத் தெய்வங்கள், ஐவகை நிலங்களிலும் வழிபடப்பட்ட பிற தெய்வங்கள், பெண்வழிச் சமூகத்தின் அடையாளமாக எழுந்த பெண் தெய்வ வழிபாடு, வீரத்தின் அடையாளமாகவும் விசுவாசத்தின் அடையாளமாகவும் எழுந்த நடுகல் வழிபாடு ஆகியவற்றை ஆராய்ந்து விளக்குவதை நோக்கமாகக் கொண்டு இந்த ஆய்வு தொடங்கப்பட்டது.

முந்தைய ஆய்வுகளில் சங்க காலத்திலிருந்த நால்வகைத் தெய்வங்களோடு கொற்றவை வழிபாடு, வழிபடப்பட்ட முறைகள், சடங்குகள் என்று பொதுவான நோக்கிலே ஆராயப்பட்டுள்ளது. சங்ககால 'நடுகற்கள்' குறித்து ஆய்வு செய்துள்ள கேசவராஜ், தென்னிந்திய நாடுகளிலுள்ள நடுகற்களின் அமைப்பு, காலம், சங்கம் மருவிய காலத்திற்குரிய நடுகற்கள் அவை கிடைக்குமிடங்கள் போன்றவை குறித்து ஆய்வு செய்துள்ளார். இரா. பூங்குன்றன் அவர்கள் செங்கம் பகுதியில் கிடைத்த நடுகற்கள் குறித்தும் தமிழ் இலக்கியங்களில் காணப்படும் சில குறிப்புகளைப் பொருத்திப் பார்த்தும் ஆய்வு செய்துள்ளார். இவ்வாய்வுகளிலிருந்து இந்த ஆய்வு சற்று வேறுபடுகின்றது.

சங்க இலக்கியங்களை முதன்மை ஆதாரங்களாகக் கொண்டு ஆய்வு செய்ததில் தமிழர்கள் வழிபட்ட தெய்வங்களைப் பின்வருமாறு வகைப்படுத்துகின்றது இவ்வாய்வு.

1. இயற்கையை அப்படியே தெய்வமாக வழிபட்ட நிலை.

2. இயற்கையாக அமைந்த நிலப் பாகுபாட்டிற்கு ஏற்றாற்போல் தெய்வங்களை வகுத்துக் கொண்ட நிலை.

3. தம்மோடு வாழ்ந்து, தமக்காக போரிட்டு இறந்த மனிதர்களைத் தெய்வமாக்கி வழிபட்ட நிலை.

முதல் இரண்டு நிலைகளும் இயற்கைப் பொருள்களையும் இயற்கையை ஒட்டி எழுந்த தெய்வங்களையும் வழிபட்ட முறையாகும். மூன்றாவது, மனிதனை தெய்வமாக்கி உயர்த்திய நிலையாகும்.

இம்மூன்று நிலைகளும் ஐந்து இயல்களில் ஆராய்ந்து விளக்கப்பட்டன. இவ்வாய்வில் வரலாற்று முறை ஆய்வு, விளக்க முறை ஆய்வு ஆகிய இரண்டு வகையான ஆய்வு முறைகள் மேற்கொள்ளப்பட்டன.

ஐம்பெரும் பூதங்களான நிலம், நீர், காற்று, ஆகாயம், தீ ஆகியவற்றைச் சங்கத் தமிழர் வழிபட்டனர்.

தற்காலத்தில் சிறப்புற்றிருப்பதைப் போன்ற சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேதுவாகிய ஒன்பது கிரகங்களையும் வழிபட்டுள்ளனர்.

நாள்மீன்களாகிய ஓணம், ஆதிரை, வடமீன், அறுமீன் ஆகியவற்றையும் வழிபட்டுள்ளனர்.

ஆல், அரசு, கடம்பு, அசோகு, வேம்பு, வன்னி முதலிய மரங்கள் தெய்வங்கள் உறைவதாக நம்பி, வணங்கப்பட்டன.

தாமரை மலர் தெய்வம் உறைவதாக நம்பப்பட்டதால் ‘கடவுள் ஒண்பூ’ என்று வழங்கப்பட்டது. துழாய் மாலை திருமகளின் உறைவிடமாக நம்பப்பட்டது.

மலைகளும் குன்றுகளும் தெய்வங்கள் உறைவனவாக கருதப்பட்டு வணங்கப்பட்டன. முருகனுக்குரிய வீடுகளாக ஆறு படைகளாக மலைகள் வணங்கப்பட்டன.

இவை தவிர, அஃறிணை உயிரினங்களாகிய பல்லி, காக்கை முதலியவற்றையும் வழிபட்டுள்ளனர். எருமைக் கொம்பை முல்லை நில மக்களும் சுறாக் கொம்பை நெய்தல் நிலமக்களும் வழிபட்டுள்ளனர்.

நெடியவன் என்ற சொல் மாயோன், முக்கண்ணன், இந்திரன் ஆகிய மூவருக்குமே ஆளப்பட்டுள்ளது. திணை நிலைத் தெய்வங்களாக மாயோன், சேயோன், இந்திரன், வருணன் ஆகிய நால்வரையும் குறிப்பிடுகின்றது

தொல்காப்பியம். இவர்களுள் மாயோன், சேயோன் குறித்த செய்திகளே மிகுதியாக உள்ளன.

பிற்காலத்தில் எழுந்த, வைணவ சமயத்தின் பல கூறுகளைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகின்றது. இறைவனுடைய வடிவங்களாகிய விண்ணாட்டு நிலை, அணி வகுப்பு நிலை, பிறப்பு நிலை, உள்ளுறை நிலை, வழிபடு நிலை ஆகியவற்றைப் பரிபாடல் கூறுகிறது. திருமாலின் அவதாரங்களில் மச்சம், கல்கி தவிர்த்து மற்ற அவதாரங்களைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. மாலோனுக்குரிய கொடி, வாகனம், மாலை, ஆயுதங்கள் போன்றவை பல இடங்களில் சுட்டப்படுகின்றன.

திருவனந்தபுரம், திருவெஃகா, திருமாலிருஞ்சோலை, இருந்தையூர், குளவாய், திருவரங்கம் ஆகிய இடங்களில் கோவில்கள் இருந்தன. மக்கள் உண்ணா நோன்பிருந்து விழாக்கள் எடுத்து வழிபட்டுள்ளனர்.

முல்லை நில மக்களின் தெய்வமாக இருந்த அனைத்து மக்களும் வணங்கும் தெய்வமாக ஏற்றம் பெற்றதைப் பரிபாடல் காட்டுகிறது. இறைவனின் அவதாரங்கள், உலகத் தோற்றம் பற்றிய கொள்கை போன்ற வைணவக் கோட்பாடுகளின் வித்தாக சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

இனக்குழுவின் கடவுளாக விளங்கிய முருகன் இயல்பாக தமிழ் மரபோடு வணங்கப்பட்டான். வேள்வி இல்லை, மந்திரமில்லை, கிடைத்ததைக் கொண்டு பலியிட்டனர். வெறியாட்டு நிகழ்த்தப்பட்டது. நாட்டாரின் சடங்காகிய ஆகாச பூசை நிகழ்த்தப்பட்டது. முருகன் தனிக் கடவுளாகவே வழிபடப்பட்டான்.

அதன்பின் வடபுல கந்தனை இணக்கும் விதமாக அசுரர்களை சூரபத்மனை அழிக்கும் போர்க்கடவுளாக, கொற்றவைக்கு மைந்தனாக இணைக்கப்பட்டான். தமிழ் மரபுப்படி வள்ளியைக் களவுமணம் புரிந்தான். இந்திரனின் மகளை இந்திரன் கொடுக்க மணந்தான். இந்திரனுக்கு மருமகனாக ஏற்றம் பெற்றான். பிரணவ மந்திரத்தின் பொருள் தெரியாத விழித்ததால் பிரம்மனை அடிமைப்படுத்தினான். கிரௌஞ்ச மலையைப் பெயர்த்தான். கார்த்திகைப் பெண்டிரால் வளர்க்கப்பட்டான் என்று பல்வேறு தொன்மங்கள் உருவாக்கப்பட்டு முருகன் புராணமாக்கப்பட்டான். குறிஞ்சி மக்களின் குலதெய்வமாக இருந்த முருகன் அனைவராலும் வணங்கத்தக்கவனாக அதிக

அளவில் கோவில்கள் கொண்டவனாகவும் வைதீக வழிபாட்டுக்கு மாற்றப்பட்டவனாகவும் ஏற்றம் பெற்றான்.

முருகனுக்கென்று அக்காலத்தே பங்குனி உத்திர விழா, கார்த்திகைத் திருவிழா, உள்ளி விழா போன்ற திருவிழாக்கள் கொண்டாடப்பட்டுள்ளன.

மருத நிலைக் கடவுளாக இந்திரன் குறிக்கப்பட்டாலும் தொல்காப்பியம் தவிர, வேறு எங்கும் 'வேந்தன்' என்ற சொல் இந்திரனைக் குறிப்பதாக ஆளப்படவில்லை. இந்திரன் 'அமரர் தலைவன்' என்று குறிக்கப்படுகிறான். அவனுக்குரிய ஊர்தி, மாலை, ஆயுதங்கள் கூறப்படுகின்றன. இந்திரனுக்கு விழா எடுக்கப்பட்ட செய்தியை ஐங்குறுநூறு கூறுகிறது. ஆனால் எப்படி விழா எடுக்கப்பட்டது என்பது பற்றி விரிவான செய்தி சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் 'இந்திர விழா' தனி காதையாகவே விரித்து உரைக்கப்படுகின்றது.

இந்திரன் 'ஆயிரம் கண்ணுடையவனாக' கற்பிக்கப்பட்ட பிறகு செல்வாக்கு இழந்த நிலையே காணப்படுகிறது.

வருணன் நெய்தல் நிலத்துக்குரியவனாக குறிக்கப்பட்டாலும் வருணனைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் மிகுதியாக காணப்படவில்லை. மற்ற தெய்வங்களுக்கு குறிப்பிடப்பட்டதைப் போல தோற்றமோ, படையோ, நிறமோ, ஆயுதமோ, விழாவோ, கோயிலோ வருணனுக்குக் குறிக்கப்படவில்லை. நெய்தல் நில மக்கள சுறாக் கொம்பை நட்டு வழிபட்ட செய்தியை குறிப்பிடுகின்றது.

சங்ககாலச் சமூகம், திணை நிலைத் தெய்வங்களோடு, முக்கண்ணன், நான்முகன், காமன், பலராமன், கூற்றுவன், காலன், சந்திரன், அருகதேவன், சாத்தன் போன்ற பிற தெய்வங்களையும் வழிபட்டுள்ளது.

சமயக் காழ்ப்புணர்ச்சி இல்லாத காலமாகக் கருதப்பட்டாலும் அக்காலத்தில் வணங்கப்பட்ட தெய்வங்களைப் பார்க்கும்போது சைவம், வைணவம் என்ற சமயங்கள், அமைதியாக பரவத் தொடங்கியதாக உள்ளது. திருமால் ஒருபுறம் அனைத்திற்கும் காரணியாகவும் சொல்லுகிற் அதே நேரத்தில் முக்கண்ணனையும் முதல்வனாகக் காட்டும் முயற்சி நடந்துள்ளது. திருமாலுக்கு மகன்களாக பிரம்மன், காமன், சாமன் ஆகியோர் இணைக்கப்பட்டு

அவர்களுக்கான இணைகளைக் உருவாக்கி மகிழ்ந்தனர். ரிக் வேதத்திலும், மகாபாரதத்திலுமுள்ள பல தொன்மங்களைத் தமிழில் முக்கண்ணனுக்க தொடர்புடையனவாக ஆக்கிக் கொண்டனர். ஆணும் பெண்ணுமாய் திகழ்கின்ற 'சிவசக்தி' வடிவம் ஆரிய மரபில் இல்லாதது. உலக அளவிலும், சிந்து வெளியிலும் 'சிவ வழிபாடு' காலத்தால் மிகவும் முற்பட்டதாக உள்ளது. 'சிவன்' என்ற சொல்லாட்சி எங்குமில்லை.

திருமாலின் உந்தியிலே தோன்றியவன் நான்முகன் என்று முதன்முதலாக இறைவனுக்குப் பிறப்பு கற்பிக்கப்படுகிறது. திருமாலின் மகன் என்ற நிலையிலும் காமக் கடவுள் என்ற முறையிலும் இளவேனிற் பருவத்தில் விழா எடுத்தனர். ஆடவரும் பெண்டிரும் களிப்புடன் கொண்டாடினர். அவ்விழா வில்லவன் விழா என்று வழங்கப்பட்டது. பலராமன், முக்கண்ணன், திருமால், சேயோன் ஆகிய மூவருக்கும் இணையாக வணங்கப்பட்டிருப்பதை புறநானூறு சுட்டுகிறது. கூற்றுவன் என்பவன் வேறு, காலன் என்பவன் வேறு. கூற்றுவன் உயிர்களைக் கவருபவன், காலன் உயிர்களின் கணக்குகளை எழுதுபவன். காலனே பிற்காலத்தில் 'சித்ரகுப்தனாக' மாற்றம் பெற்றிருக்கிறான்.

சமண சமயத்திலிருந்து அருகதேவன் வழிபடப்பட்டுள்ளான். அதியமான் பரம்பரையினர் அக்கோயிலுக்கு வெண்கல மணியினையும் விளக்கினையும் கோயிலுக்கு வழங்கியதாக அக்கோயில் கல்வெட்டு கூறுகிறது. அதைப்போன்றே சாத்தன் என்ற தெய்வமும் அக்காலத்தில் வணங்கப்பட்டு இருக்கிறது. பல புலவர்களின் பெயர்களும் அத்தெய்வத்தின் பெயரால் அமைந்துள்ளது.

சங்க காலத்திலிருந்த பெண்தெய்வங்கள் போர்த் தெய்வங்களாகவும் வளமைத் தெய்வங்களாகவும் பொதுவான தெய்வங்களாகவும் வணங்கப்பட்டுள்ளன. போருக்குரிய தெய்வமாக பெண் தெய்வத்தைப் போற்றியிருப்பதால் பெண் வழிச் சமுதாயம் மேலோங்கியிருப்பதைக் காட்டுகிறது. வளமையின் குறியீடாக பெண்கள் கருதப்படுவதால் வளமைத் தெய்வங்களாகவும் வணங்கப்பட்டுள்ளனர். கொற்றவைக்கு பலி கொடுக்கப்பட்டது. நவகண்டமும் கொடுக்கப்பட்டது. வளமைத் தெய்வமாகிய காமக்கண்ணிக்கு வெள்ளாட்டுக் கிடாய் பலியிடப்பட்டது. கற்புடைய மகளிர் கடவுளாக உயர்த்தப்பட்டனர். பொதுத் தெய்வங்களுக்கு உயிர்ப்பலி கொடுக்கப்படவில்லை.

தெய்வங்களுக்கு ஒருபடி மேலாகவே நடுகல் வழிபாடு செல்வாக்குப் பெற்றிருந்தது. போரிலே இறந்தவர்கள், வடக்கிருந்து உயிர்விட்டவர்கள், தெய்வங்களுக்கு நவகண்டம் கொடுத்தவர்கள், ஏறுதழுவியவர்கள் போன்றவர்களுக்கு சங்க காலத்தில் நடுகல் வைக்கப்பட்டு வணங்கப்பட்டது. வீரத்தைப் போற்றும் மரபின் அடிப்படையில் இவ்வழிபாடு அமைந்துள்ளது. பொதுவான தெய்வமாகவும் குலதெய்வமாகவும் வளமைத் தெய்வமாகவும் நடுகற்கள் வழிபடப்பட்டுள்ளன. தொல்காப்பியம் குறிப்பிடும் நடுகல் மரபுகள் பிற்காலத்தில் கோயில் என்ற நிறுவனம் எழுவதற்கு முன்னோடியாக விளங்கியுள்ளது. போரில் இறந்தவர் குடும்பத்திற்கு இடங்கள் வழங்கப்பட்டன. அவை 'நெய்த்தோர் பட்டி' எனப்பட்டன. அவற்றுக்கு விதிக்கப்பட்ட வரி 'வீரதுக்க கானம்' எனப்பட்டது.

சங்க காலத்தில் பெண்களுக்கு நடுகல் வைக்கப்படவில்லை என்று கூறுவதற்கு இல்லை. தற்போது கிடைக்காத நிலையில் நடுகல்லே வைக்கப்படவில்லை என்று கூறுவது நம் முயற்சிக் குறைவையே காட்டுகிறது. சங்க காலத்தில் பெண்கள் போரில் ஈடுபடவில்லை என்றாலும் தம் குடும்பத்து ஆடவரைப் போருக்கு அனுப்புவதில் செருக்கும் பெருமிதமும் கொண்டனர். 'மூதின் முல்லை' என்ற துறை அவர்களை வியக்கிறது. 'மூதின் மகளிர்' என்று அப்பெண்கள் போற்றப்பட்டனர். மேலும் சிந்துவெளியில் காணப்படும் 'மூயில்' என்ற சொல் 'மூதின்' என்ற சொல்லின் பழைய வடிவமாக கொள்ளப்படுவதால் சிந்துவெளி காலத்திலேயே மூதின் மகளிர் இருந்திருக்க வேண்டும். அவர்களே 'மூயில்' என்ற போர்த் தெய்வமாக வணங்கப்பட்டிருக்க வேண்டும்.

கருணை உணர்வு காரணமாக பெண்ணுக்கு நடுகல் வைக்கப்பட்டு வணங்கப்பட்டதற்கு சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்கு கல்லெடுத்து வழிபட்டதை பதிற்றுப்பத்து காட்டுகிறது. சங்கம் மருவிய காலத்தில் 'பரணி நோன்பு' நோற்றவர்க்கும் நடுகல் வைக்கப்பட்டது. கணவனோடு தீப்பாய்ந்து உயிர்விட்ட பெண்களுக்கு கோயில் எடுக்க நிலங்கள் வழங்கப்பட்டன. அவை 'தீப்பாஞ்சக்காணி' எனப்பட்டன. அரசிகளுக்கு நடுகற்கள் எடுக்கப்பட்டன. அவை 'பள்ளிப்படைக் கோயில்கள்' எனப்பட்டன. பிற்காலத்தில் தூபிகள், நினைவுச் சின்னங்கள், திறந்தவெளிக் கல்லறைகள் என்றெல்லாம் வழங்கப்படுகின்றன.

தமிழகத்தில் தொன்றுதொட்டு வரும் இம்மரபு கிரேக்கம், பிரிட்டன், எகிப்து, ஆஸ்திரேலியா, ஈழம் போன்ற நாடுகளிலும் இருப்பதை அறிய முடிகிறது.

தெய்வங்களுக்கு விழாக்கள் எடுக்கப்பட்டதைப் போலவே நடுகற்களுக்கும் விழா எடுக்கப்பட்டுள்ளது. அவ்விழா 'பெருஞ்சோற்று விழா' என்று வழங்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

'சங்ககாலத் தெய்வங்களும் வழிபாட்டு முறைகளும்' என்ற தலைப்பு, சங்க காலத்திலிருந்த தெய்வங்கள் காலந்தோறும் பெற்ற ஏற்றங்கள், மாற்றங்கள், வழிபாட்டு முறைகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள், வேறுபாட்டிற்கானச் சமூகச் சூழல், உருவ வழிபாடுகளில் ஏற்பட்ட வளர்ச்சிகள், இயற்கை வழிபாடு, நடுகல் வழிபாடு ஆகியவற்றின் செல்வாக்கு, பெண் தெய்வங்களின் பன்முக வளர்ச்சி போன்ற பல ஆய்வுகளுக்குக் களமாக அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

## முதன்மைத் தரவுகள்


**சாமிநாதையர். உ.வே.,** *1983, குறுந்தொகை ஆராய்ச்சி உரை, சிதம்பரம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.*

**சாமிநாத ஐயர், உ.வே.,** *1986, பத்துப்பாட்டு மூலமும் உரையும், தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழகம்.*

**சோமசுந்தரனார். பொ.வே.,** *2007, பரிபாடல், சென்னை, கழக வெளியீடு.*

**சோமசுந்தரனார். பொ.வே.,** *2009, ஐங்குறுநூறு, சென்னை, கழக வெளியீடு.*

**துரைசாமிப்பிள்ளை, சு.,** *பதிற்றுப்பத்து மூலமும் உரையும், சென்னை, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,.*

**துரைசாமிப்பிள்ளை, சு.,** *புறநானூறு மூலமும் உரையும், திருநெல்வேலி, தென்னிந்திய நூற்பதிப்புக் கழகம்.*

**தொல்காப்பியம்,** *1973, நச்சினார்க்கினியர் உரை, சென்னை, மறுபதிப்பு, கழக வெளியீடு.*


## துணைத் தரவுகள்


**அருணவசந்தன், ச., 2001,** *ஜைன ஆலயத் திருமேனிகள், சென்னை, சிவசுந்தர கலைக்கூடம்.*

**அழகப்பன். ஆறு.,** *2009, நாட்டுப்புறப் பாடல்கள் திறனாய்வு, சென்னை, பாரி நிலையம்.*

**அறவாணன் க.ப.;** *1999, கருத்துக் களஞ்சியம், திருநெல்வேலி, மனோ ஆய்வரங்கம், பல்கலைக்கழக வெளியீடு, மனோன்மணியம் சுந்தரனார்.*

**இராசமாணிக்கனார்,** *2008, கல்வெட்டுக்களும் தமிழ்ச்சமுக வரலாறும், சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,.*

**இராமகிருஷ்ணன். ஆ.,** *1996, தமிழக வரலாறும் தமிழர்ப் பண்பாடும், சர்வோதய இலக்கியப் பண்ணை.*

**இராமசாமி. அ.,** 2009, தமிழ்நாட்டு வரலாறு, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

**இராமநாதன். ஆறு.** நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் வாழ்வியல், சிதம்பரம், மாணிக்கவாசகர் நூலகம்.

**இளங்கோவன். கு.வை.,** 1995, சங்ககாலக் கடவுளர், சென்னை, சேகர் பதிப்பகம்.

**ஐராவதம் மகாதேவன்,** தமிழாக்கம் **பா.ரா. சுப்பிரமணியன்,** ஜனவரி 2010, சிந்துவெளிப் பண்பாடும் சங்க இலக்கியமும், சென்னை, செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்.

**கதிர் மகாதேவன்,** 2008, தொன்மம், மதுரை, செல்லப்பா பதிப்பகம்.

**கந்தையா பிள்ளை. ந.சி.,** 1999, தமிழர்ப் பண்பாடு, மறுபதிப்பு, சென்னை, காமராசர் பதிப்பகம்.

**கருப்பாயி. ஆ.,** 1999, நாட்டுப்புற சிறுதெய்வ வழிபாடு, புதுக்கோட்டை மாவட்டம், செந்தமிழ்ப் பாவை பதிப்பகம்.

**கிருஷ்ணமூர்த்தி, கோ.,** தமிழ்ப் பண்பாட்டில் சங்கு, திருச்சி, பாபு பதிப்பகம்.

**கிருஷ்ணன், கே.,** 2006, பழங்குடி மக்கள் ஓர் பார்வை, ஆதிவாசி தோழமைக் கழகம்.

**குருசாமி, ம.ரா.போ.,** 1974, சங்ககாலம், சென்னை, இரண்டாம் பதிப்பு, குரு அச்சகம்.

**கேசவராஜ்,** 1978, நடுகல் வழிப்பாடு.

**கேசவராஜ். வெ.,** 2008, தென்னிந்திய நடுகற்கள், காவ்யா வெளியீடு.

**கேசவராஜ். வெ.,** 1978, நடுகல் வழிபாடு, நாகர்கோவில், கிருஷ்ணா பிரஸ்.

**கைலாசபதி. க.,** 2009, சமுகவியலும் இலக்கியமும், சென்னை, மறுபதிப்பு, குமரன் பப்ளிஷன்ஸ்,.

**சக்திவேல். சு.** 1983, நாட்டுப்புறவியல் ஆய்வு, சென்னை, மாணிக்கவாசகர் பதிப்பகம்.

**சண்முகச்சுந்தரம். சு.,** 2003, முருகன் வழிப்பாடு நாட்டுப்புறவியல் பார்வை, காவ்யா வெளியீடு.

**சந்தோஷம். க.ப.,** 1968, உயிர் வளர்ச்சியில் கண்ட இறை வடிவம், கழகவெளியீடு.

**சாமிநாதையர். உ.வே.,** 1996, சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், சென்னை, உ.வே.சா நூல் நிலையம்.

**சிங்காரவேலு முதலியார்.ஆ.,** 2001, அபிதான சிந்தாமணி, திருவல்லிக்கேணி, சென்னை, கௌரா ஏஜென்ஸீஸ்.

**சிதம்பரனார். சாமி.,** 2008, எட்டுத் தொகையும் தமிழர்ப் பண்பாடும், சென்னை, இரண்டாம் பதிப்பு, அறிவுப் பதிப்பகம்.

**சிவத்தம்பி. கா.,** 2010, தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும் இலக்கிய வரலாற்றாய்வு, சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

**சுப்பிரமணியப் பிள்ளை, கா.,** 2009, பழந்தமிழர் நாகரிகம், சென்னை, பாரிநிலையம்.

**சுப்பிரமணியன், தீ.,** 2009, தமிழகத் தொல்லியலும் வரலாறும் (தகடூர்ப் பகுதி), சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

**சுப்பிரமணியன். யு.,** 2009, தமிழர் சமயம் தமிழர் வேதம் தமிழகத்துக் கோயில்கள், சென்னை, சந்தியா பதிப்பகம்.

**ஞானசேகரன். தே.,** 2009, மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், சென்னை, இரண்டாம் பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

**தட்சணாமூர்த்தி. அ.,** 1987, தமிழர் நாகரிகமும் பண்பாடும், சென்னை, ஐந்திணைப் பதிப்பகம்.

**தனஞ்செயன்,** 1996, **ஆ.,** குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும், பாளையங்கோட்டை, அபிதா பப்ளிகேஷன்ஸ்.

**தேவநேயப்பாவாணர்.,** 1966, பழந்தமிழாட்சி, நேசமணிப் பதிப்பகம், கழக வெளியீடு.

**பகவதி. கு., ஜீன் லாறன்ஸ். செ.,** 2007, தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள், சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

**பக்தவத்சல பாரதி,** 1999, பண்பாட்டு மனிடவியல், சென்னை, திருத்தியப் பதிப்பு, மாணிக்கவாசகர் நூலகம்.

**பக்தவத்சல பாரதி,** ஏப்ரல் 2010, சங்ககாலக் குடும்பம், ஆய்வுக்கட்டுரை, பனுவல்.

**பரமசிவன், தொ.,** 2006, தெய்வங்களும் சமுக மரபுகளும், சென்னை, மூன்றாம் பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

**பரமசிவன். தொ.,** 2008, சமயம், சென்னை, தென்திசைப் பதிப்பகம்.

**பார்த்தசாரதி. ஆர்.,** 2009, சமணம், சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

**பாலகிருஷ்ணன் குடவாயில்,** 2005, தமிழக கோயிற்கலை மரபு, 3ஆம் பதிப்பு, தஞ்சை சரஸ்வதி மஹால் நூலகம்.

**பூரண சந்திர ஜீவா,** சிந்துவெளியில் தமிழ், புதிய ஆய்வுள், செங்கை அண்ணா மாவட்டம், தய்யல் பதிப்பகம், மாதர் பதிப்பகம்.

**மணவாளன். அ.அ.,** 1975, சங்க இலக்கியக் கொள்கை.

**மணி. பெ.சு.,** சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், சென்னை, மணிவாசகர் பதிப்பகம்.

**மறைமலையடிகள்,** 1974, தமிழர் மதம், சென்னை, கழக வெளியீடு.

**மாதையன். பெ.,** 2004, சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசுருவாக்கமும், சென்னை, பாவை பப்ளிகேஷன்ஸ்.

**மாதையன் பெ.,** 2010, சங்க இலக்கியத்தில் குடும்பம், சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

**ரேணுகா ச.,** 1989, பண்டைத் தமிழ் இலக்கியங்களில் சிவன், சூளைமேடு, சென்னை.

**விக்டர். ம.சொ.,** 2007, தொல்காப்பியச் சிந்தனைகள், சென்னை, தி. பார்க்கர்.

**வித்யானந்தம்,** 1971, தமிழர் சால்பு, சென்னை, பாரி நிலையம்.

**வீரபாண்டியன். கோ.,** 2006, தமிழர் சிறப்பியல் அளவியல், சென்னை, வேமன் பதிப்பகம்.

**வெங்கானூர் பாலகிருஷ்ணன்,** ஓலைச்சுவடி இந்துமத ஆசார நம்பிக்கை இரகசியங்கள், திருவனந்தபுரம், அடோன் பப்ளிகேஷிங் குரூப்.

**வெற்றியரசி,** மனை எண்: 9, குறுக்குத் தெரு, சோசப் குடியிருப்பு, ஆதம்பாக்கம்.

**வேங்கடசாமி மயிலை. சீனி.,** 1995, பலங்காலத் தமிழர் வாணிகம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.

**வேங்கடசாமி மயிலை. சீனி.,** 1967, தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், சென்னை, மூன்றாம் பதிப்பு, பிராட்வே.

**வேங்கடசாமி மயிலை. சீனி.,** 2006, சங்ககால வரலாற்றாய்வுகள், மறுபதிப்பு.

**வேங்கடசாமி நாட்டார்,** 2003, சிலப்பதிகாரம், சென்னை, பாரி நிலையம்.

**வைத்தியலிங்கன்,** 2002, தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, சிதம்பரம், அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு.

**வைத்தியலிங்கன், செ.,** 2002, தமிழ்பண்பாட்டு வரலாறு, நான்காம் பாகம், சிதம்பரம், அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு

## முந்தைய ஆய்வுகள்

1. **அருளம்பலம், சு.,** 1937, திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சியுரை.

2. **ஆறுமுகம் பிள்ளை, எம்.,** 1977, திருமுருகாற்றுப்படை சிற்றாராய்ச்சி.

3. **இந்திரபவானி, வ.,** 1985, சங்க நூல்களில் கிருஷ்ண வழிபாடு.

4. **இளங்கோவன், கு.வை.,** 1995, சங்ககாலக் கடவுளர்.

5. **கந்தசாமி, ந.,** 1994, சங்க இலக்கியத்தில் பக்தி.

6. **கேசவராஜ், வெ.,** 1978, நடுகல் வழிபாடு.

7. **கைலாசபதி, க.,** 1999, பழந்தமிழர் வாழ்வும் வழிபாடும்.

8. **சண்முகம், மு.,** 1996, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும்.

9. **சாமி, பி.எல்.,** தமிழிலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு

10. **பாலசந்தரன், ஆதி.,** 1981, சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துகள்.

11. **மாதையன், பெ.,** தொன்மங்களும் பழமரபுக் கதைகளும்

## ஆய்வுக் கட்டுரைகள்


1. **இராசு, செ.,** 1974, நடுகல் வழிபாடு, நான்காம் உலகத் தமிழ் மாநாடு - தொகுதி-1,

2. **இராமலிங்கம், கீ.,** 1959, சைவசமயச் சொற்பொழிவுகள், சென்னை, கபீர் அச்சகம்.

3. **ஈசுவர பிள்ளை,** 1992, சங்ககாலக் கோயில்களும் திருவிழாக்களும், திருவாவடுதுறை ஆதின திங்களிதழ்.

4. **கருணானந்தம், இரா.,** 1989, சங்ககாலக் கொற்றவை வழிபாடு,

5. **சண்முகநாதன், பி.கே.,** 1967, திருமுருகாற்றுப்படை - தத்துவ விளக்கம், மதுரை சுந்தரேஸ்வரர் திருக்கோயில் நவராத்திரி மலர்.

6. **சரளா இராஜகோபாலன், டி.,** 1979, சங்க இலக்கியத்தில் முருகன் வழிபாடு, இ.ப.த.ம. 11ஆவது ஆய்வுத் தொகுதி.

7. **சாமி, பி.எல்.,** 1971, வேலன் வழிபாடு ஆராய்ச்சி.

8. **வானமாமலை, நா.,** தாய்த்தெய்வ வழிபாடு ஆராய்ச்சி

9. **வானமாமலை, நா.,** 1971, பரிபாடலில் முருக வணக்கம் ஆராய்ச்சி.

10. **வானமாமலை, நா.,** 1973, நடுகற்களும் நம்பிக்கைகளும் ஆராய்ச்சி.

## அகராதிகள்


1. **அருணாசலம், ஆ.,** 1988, சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், தஞ்சை, தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு.

2. **சக்திவேல், சு.,** மானிடவியல் கலைச் சொல்லகராதி, சிதம்பரம், மணிவாசகர் பதிப்பகம்.

3. **தமிழ்ப் பேரகராதி தொகுதி** 4, 1922, சென்னை, சென்னைப் பல்கலைக்கழகம்.

4. **சந்திரசேகர பண்டிதர், சரவண முத்துப்பிள்ளை,** மறுபதிப்பு 2005, யாழ்ப்பாண அகராதி, சென்னை, தமிழ்மண் பதிப்பகம்.

5. **கிருஷ்ணமாச்சாரியார்,** 2008, புராதன இந்திய இலக்கிய வரலாற்றுக் கலைக்களஞ்சியம், நர்மதா பதிப்பகம்.

## இதழ்கள்

1. **தனஞ்செயன். ஆ. பூங்குன்றன்,** ஏப். - ஜூன் 2010, சமூக விஞ்ஞானம்,

2. **சீனிவாசன், இரா.,** அக்டோபர் 2010, பனுவல்,

## நாளிதழ்கள்

1. *தினத்தந்தி ஆன்மீகம் 26.7.2011*

2. *தினகரன் வெள்ளிமலர் 13.2.2009*

3. *தினத்தந்தி இலவச இணைப்பு 10.5.2011*

4. *தினகரன் வெள்ளி சிறப்பு மலர் 11.12.2009*

5. *தினகரன் வெள்ளிமலர் 30.7.2010*

## வார இதழ்

*ஸ்ம்ருதி, 30.9.2009, சீக்ரெட் விகடன்,*

# பின்னிணைப்பு - 1

## தாய்த்தெய்வத்தின் பெயர்கள்

*தமிழின் முதல் நிகண்டான திவாகர நிகண்டு தாய்த் தெய்வங்களின் பெயர்களை 3 பாடல்களில் தொகுத்துரைக்கின்றது.*

1. *மோடி, காரிதாய், கொற்றி, மார், சூரி, வடுகி, மூதணங்கு - காடுகாளியின் பெயர்கள்.*

2. *சூலி, எண்டோள், தாருகவிநாசினி, மாதரி, வீரி, கௌரி, முக்கண்ணி, பைரவி, குமாரி, சாமுண்டி, சண்டிகை, யோகினி, வேதாளி, யாமளை, மாகாளி - காளியின் பெயர்கள்.*

3. *ஐயை, கார்த்திகை, கௌரி, துர்க்கை, சூலி, மகிடற்காயிந்தாள், நீலி, எண்டோளி, விந்தை, சயமகள், இருங்கலையூர்தி, எழிலரியேறி, மேதித்தலைமிசை விசயை, சுந்தரி, மாலுக்கிளையாள், சக்ராயுதி, பாலைக் கிழத்தி, பண்ணம்பணத்தி, நாரணி, கன்னி, குமரி, பகவதி - கொற்றவைக்குரிய பெயர்கள்.*

*இவற்றுள் தமிழ்க்கேயுரிய தெய்வங்கள், ஆரியக் கலப்புத் தெய்வங்கள் ஆகியவை விரவியுள்ளன.*

# பின்னிணைப்பு - 2

நடுகற்கள்






# பின்னிணைப்பு - 3



## உருவ வழிபாடாக மாறிய நடுக்கல்

சேலம்: போரில் வீரமரணம் அடைந்த வீரர்களின் நினைவாகவும், வீரச்செயலுக்காகவும் அந்தக் காலத்தில் நடுக்கல் நடப்பட்டன. செங்கல்பட்டு, தர்மபுரி, கிருஷ்ணகிரி, சேலம், நாமக்கல், கோவை ஆகிய மாவட்டங்களில் அதிகளவில் நடுக்கல் உள்ளன. நடுக்கல், ஊர்காத்தான்கல், பெண்மீட்டான்கல், அறம் காத்தநடுக்கல், புலிக்குத்திக்கல், பன்றிக்குத்திக்கல், குதிரை குத்திக்கல் என 18 வகையான நடுக்கல்கள் இருப்பதாக தமிழிலக்கியம் சொல்கிறது. இப்படியான நடுக்கல் ஒன்று இன்று தெய்வமாக மாறியிருக்கிறது. சேலம் பழைய பேருந்து நிலையத்தில் இருந்து அம்மாப்பேட்டை செல்லும் சாலையில் பாலாமணி தியேட்டர் அருகேயுள்ள புலிக்குத்தி வீரனின் நடுக்கல் தான் இந்த சிறப்பை பெற்றிருக்கிறது. பகுதி மக்கள் தினசரி மஞ்சள், குங்குமம் பூசி எல்லை பாதுகாப்பு தெய்வமாக இந்த நடுக்கல்லை வணங்குகிறார்கள்.

செய்தி, படம்: **கே.ராஜேந்திரன்**

தினகரன் 22 வெள்ளி மலர் 16.4.2010

---

வட்டாரச்

**சிவகங்கை**

## சங்கப்புலவர்களுக்கு நினைவுச்சின்னம்



சங்ககால புறநானூற்று பாடல் ஒன்றில், முதல் நாள் போரில் தனது தந்தையையும், மறுநாள் தனது கணவரையும் பறிகொடுக்கிறாள் வீரமங்கை ஒருத்தி. இருப்பினும் மூன்றாம் நாள் நடக்கும் போருக்கு கொஞ்சமும் கலங்காது, தனது சின்னஞ்சிறிய ஒரே ஒரு மகனையும் வாள் கொடுத்து போருக்கு அனுப்பி வைக்கிறாள். இந்தப்பாடல் சங்ககாலத்தில் நம் தமிழ்ப்பெண்களின் வீரத்தை பறைசாற்றுகிறது. இந்த புறநானூற்று பாடலை எழுதியவர் ஒக்கூர் மாசாத்தியார் என்ற பெண்பாற்புலவர். இவரும், மாசத்தியாரும் வாழ்ந்த ஒக்கூர், சிவகங்கையிலிருந்து சுமார் 10 கி.மீ.தூரத்தில் அமைந்துள்ளது. அவர்களின் நினைவைப்போற்றும் வகையில் தமிழக அரசு அவர்களுக்கு நினைவுச்சின்னம் ஒன்றை அமைத்துள்ளது. அச்சின்னத்தைதான் படத்தில் பார்க்கிறீர்கள்.

**- கே.எஸ்.பாலகிருஷ்ணன்**

படம்: எம்.செந்தில்குமார்

23 13.8.2010

# பின்னிணைப்பு - 4

சேலம்

தமிழக வரலாற்றின் தந்தை என ராபர்ட் புரூஸ்புட் அழைக்கப்படுகிறார். புவியியல் ஆய்வாளரான இவர், 1882ல் தர்மபுரி மாவட்டத்தில் கள ஆய்வு செய்தபோது, இப்போதைய கிருஷ்ணகிரி மாவட்டத்துக்கு உட்பட்ட சின்னக் கொத்தூர் கிராமம் அருகில் மேட்டுப்பள்ளம் என்ற இடத்தில் மலைகளின் மீது உள்ள பைரகான் ஏரியில் குத்துக்கல் ஒன்றை கண்டுபிடித்தார். இதன் உயரம் 7 அடி. நுனி பகுதியின் அகலம் ஒன்றரை அடியில் இருந்து கீழ் பகுதி நோக்கி வர வர 3 அடியாக அதிகரிக்கிறது. இன்றைக்கும் அதே இடத்தில் இந்த குத்துக்கல் ஆடாமல், அசையாமல் 'குத்துக்கல்லாட்டம்' நிற்கிறது. பொதுவாக, இறந்தவர்களை புதைத்த இடத்தில் உயரமான பெரிய கல்லை நட்டு வைத்து கல்லின் கீழ் கூழாங்கற்களையும் குவியலாக கொட்டி வைப்பது வழக்கம். சில இடங்களில் குத்துக்கல்லை நட்டு வைத்து சுற்றிலும் உருண்டையான கற்குண்டுகளை வட்டமாக போட்டு கல் வட்டம் அமைப்பர். இப்படித்தான் குத்துக்கல் வந்தது என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலரோ, யானைகளை கட்டி வைக்க பயன்படுத்தியதுதான் குத்துக்கல் என்கின்றனர்.

செய்தி, படம்: **கே.பூபதி**




சேலம்: அருந்ததிய மக்கள் அரசர்கள் காலத்திலும், இந்திய சுதந்திரப் போராட்டத்திலும் முக்கிய பங்கு வகித்தவர்கள். அதற்கு பல காரணங்கள் உண்டு. அக்கால அரசர்கள் போர்முரசு கொட்டினால், போர்முனையில் முதல் வரிசையில் நின்று உயிர்த்தியாகம் செய்தவர்களில் பெரும்பாலானவர்கள் இவர்கள்தான்! இப்படி இறந்த வீரர்களுக்கு ஊர்கூடி வீரக்கல் வைப்பது மரபாக இருந்துள்ளது.

சேலத்தில் இருந்து 15 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஆட்டையாம்பட்டி அருகே செம்பியன்மகாதேவி என்ற கிராமத்தில் ஒரே கல்லில் பல வீரர்களின் வீரக்கல் உள்ளது. மேலும் குதிரை வீரனை தனியாக நின்று தாக்கும் வீரனின் திறமையை வெளிப்படுத்தும் வீரக்கல்லும் உண்டு. இந்தப் பகுதி மக்கள் வீரக்கல்லை தங்களுடைய மூதாதையர் தெய்வமாகக் கருதி வழிபட்டு வருகிறார்கள். பண்டிகை நாட்களில் வீரக்கல்லுக்கு விசேஷ பூஜைகள் செய்கின்றனர்.

- செய்தி, படம்: கே.ராஜேந்திரன்

## போர் வீரர்கள் கல்!



# பின்னிணைப்பு - 5

சிறப்புக் கட்டுரை

## கரிகால் சோழனின் வெற்றி தேவதை

கி.மு. 60 முதல் கி.மு.10 வரை சோழ நாட்டை ஆட்சி செய்து புகழ்கொடி நாட்டிய சங்க காலத்து சோழ அரசர்களில் மிகவும் வலிமை வாய்ந்தவன் திருமாவளவன் என்னும் கரிகால்சோழன்.

உறையூரை தலைநகராகக் கொண்டு ஆண்ட தனது தந்தை இளஞ்சேட் சென்னின் மறைவுக்குப் பிறகு, தனது சிறு வயதிலேயே ஆட்சிக்கு வரவேண்டிய சூழ்நிலை கரிகால் சோழனுக்கு ஏற்பட்டது. அப்போது, அவனது பங்காளிகள் அவனை சிறையில் அடைத்து வைத்திருந்தனர். தனது மாமன் இரும்பிடத் தலையார் உதவியுடன் தப்பிக்கும்போது ஏற்பட்ட தீ விபத்தில் கால் கருகியதால் 'கரிகாலன்' என்ற மாற்றுப்பெயர் ஏற்பட்டது.



இளம் வயது என்றாலும் மிகுந்த வீரமும், ஆட்சித் திறமையும், நீதி வழங்குவதில் நேர்மையும் கொண்டிருந்த கரிகாலன், வெண்ணிப்பரந்தலை என்று இலக்கியங்கள் புகழும் இடத்தில் (இந்த இடம் இப்போது 'கோவில் வெண்ணி' என்று அழைக்கப்படுகிறது. தஞ்சை–நாகப்பட்டினம் நெடுஞ்சாலையில் நீடாமங்கலத்துக்கு முன்பாக 5 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது) பாண்டிய மன்னனையும், சேரன் பெருஞ்சேரல் இரும்பொறையையும், வேளிர் நாட்டு தலைவர்களையும் போரிட்டு வென்றான்.

போரில் முதுகில் புண் ஏற்பட்ட காரணத்தால் அவமானம் அடைந்த சேரன் பெரஞ்சேரல் இரும்பொறை மனம் நொந்து வடக்கிருந்து உயிர் துறந்தான்.

**"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி**
**வளிதொழில் ஆண்ட வரவோன் மருக**
**களி இயல் யானைக் கரிகால் வளவ**
**சென்றமர் கடந்த நின் ஆற்றல் தோன்ற..."**

என்று, இதுபற்றி இந்த ஊரில் வாழ்ந்த வெண்ணிக் குயத்தியார் எனும் பெண் புலவர் புறநானூற்றில் கூறுகிறார்.

பட்டினப்பாலை எனும் நூலிலும், பொருனர் ஆற்றுப்படையிலும் கரிகாலன் புகழ் சிறப்பாக கூறப்படுகிறது. புகழ்பெற்ற கல்லணையை கட்டியவனும் இவனே!

கரிகாலன் 2 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு போரிட்ட தடயங்கள் எதுவும் வெண்ணியில் கிடைக்கவில்லை. ஆனால், போர்க்காலங்களின்போது வெற்றிபெற அவன் வழிபட்டதாக கூறப்படும் பிடாரி அம்மன் சிலை தற்போது கோவில் வெண்ணி கிராமத்தில் உள்ளது.

சோழர்களின் வெற்றித் தேவதைகள் வரிசையில் விஜயாலய சோழன் வழிபட்ட நிகும்பசூதனி அம்மன் தஞ்சை கீழவாசலிலும், ராஜராஜன் வழிபட்ட வாராகி அம்மன் தஞ்சை பெரிய கோவிலிலும், பழையாறை சோழர்கள் வழிபட்ட துர்க்கை அம்மன் பட்டீஸ்வரம் கோவிலிலும் உள்ளன.

அதுபோன்று, கரிகாலன் வெற்றிக்கு அருள்புரிந்த பிடாரி அம்மன் (பார்க்க படம்), கோவில் வெண்ணியில் ஒரு குளக்கரையில், மரத்தடி நிழலில், அப்பர், சம்பந்தர் ஆகியோரால் பாடல் பெற்ற வெண்ணிக் கரும்பேசுவரர் என்ற சிவன் கோவிலுக்கு செல்லும் வழியில் அமைந்துள்ளது.

– டாக்டர் ச.தமிழரசன், தஞ்சாவூர்.

